# for that millionaire look

Century
for 100% cotton
textiles

CENTURIZED
PRESHRUNK FABRIC

THE
CENTURY
SPG. & MFG. CO. LTD.,
BOMBAY 25 DD



Century's
**Cosy-Cot**
cotton SHIRTINGS
with Rich Woollen Feel

For Fashion Fabrics choose
*Century Shirtings!*

NPS-CM 16

வியக்கவைக்கும் உங்கள் அழகை
வெளிப்படுத்திக் காட்டும் ஜரிகைப் புடவைகள். இப்போழுது
ஹேண்ட்லூம் ஹவுஸில் வந்து குவிந்துள்ளன.

உங்கள் அழகை
சிறப்பாக எடுத்துக்காட்ட
காஞ்சிபுரம், பெனாரஸ், ராஜஸ்தான்
புடவைகள்.



**ஹேண்ட்லூம் ஹவுஸ்**

9, ரத்தன் பஜார், சென்னை 600003

FDS.HH.1830 TH.A

**10%** விசேஷ தள்ளுபடி 3-11-72 வரை.
29-10-72 ஞாயிற்றுக்கிழமை திறந்திருக்கும்

(ஸ்தாபிதம் : 1947)

# பாலுசேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுசேரி பில்டிங்ஸ்", 3, சிங்காராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.
தந்தி : 'EVERMANS', போன் : 85834 • தபால்பெட்டி : 414

மதராஸ் சிட் பண்டு 1961 ஆக்ட்படி கீழ்க்காணும் சீட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 OF 1961)

### நீண்டகாலச் சீட்டுகள்

50 மாதங்கள் 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTM | ரூ. 200/- | ரூ. 10,000/- |
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகிய காலச் சீட்டுகள்

25 மாதங்கள் 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள் : புது டில்லி – பம்பாய் – பெங்களூர் – கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

# 10 இந்தியர்களில் 8 பேர் கிராமங்களில் வசிக்கிறார்கள் என்றால்



## அவர்களை நாம் அதிகமாகக் கவனிக்க வேண்டிய நேரம் இது!

எனவே யூகோபாங்க் நம் நாட்டிற்கென்று தனது சேவையை மிக விரிவாகப் பரப்புகின்றது. எங்கள் அலுவலே நாட்டிற்குச் சேவை செய்வதாகும். விவசாயத்திற்கும் கிராம முன்னேற்றத்திற்கும் விசேஷ முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில், கிராமங்களின் அடித்தளம் பலமாயிருந்தால் இந்தியாவும் பல மிருந்திருக்கும்.

அவ்விடங்களில் தான் யூகோபாங்க் நாட்டின் செல்வத்தை நல்ல வகையில் உபயோகிக்கின்றது. அங்குதான் 80 சதத்திற்கு மேலான இந்தியர்கள் வசிக்கின்றனர்.



மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய உதவுகிறது.

UCO-4/72

# பெண்களுக்குப் புதியதோர் வாய்ப்பு

புதியதொரு சேமிப்புத் திட்டத்தை பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திரா காந்தி ஏப்ரல் முதல் தேதி துவக்கி வைத்தார். மாதர் தலைமையிலான வட்டார சேமிப்புத் திட்டம் என்னும் இத்திட்டம் அளிக்கும் மிகச் சிறப்பான பகுதி நேர வேலை வாய்ப்பைப் பயன்படுத்தினால்

- உங்களது குடும்ப வருவாய் கூடுதலாகும்
- உங்கள் ஓய்வு நேரத்தைப் பயனுள்ள வகையில் பயன் படுத்தலாம்
- சமூகத் தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்ளலாம்
- நாட்டின் நலனுக்குப் பணியாற்றலாம்



---

**சேமிப்பு மாதர் தலைவராக உங்கள் பணி**

நீங்கள் வசிக்கும் வட்டாரத்தில் உள்ள வீட்டுப் பெண்மணிகளுடன் தொடர்பு கொள்வது; முறையாக பணம் சேமிக்குமாறு அவர்களைத் தூண்டுவது; அவர்களுடைய சேமிப்புத் தொகைகளை ஒவ்வொரு மாதமும் திரட்டுவது; அந்தத் தொகைகளை இதற்கென ஒதுக்கிய தபால் நிலையத்தில் கொடுப்பது.

நீங்கள் திரட்டிய பணத்திற்கு 2½% கமிஷன் உங்களுக்குக் கிடைக்கும்.

சேமிப்பு மாதர் தலைவர்கள் நாட்டின் எல்லா நகரங்களுக்கும் முக்கியமான ஊர்களுக்கும் தேவைப்படுகிறார்கள்.

*விவரங்களுக்கு மனுச் செய்யுங்கள்:*

**நேஷனல் சேவிங்ஸ் கமிஷனர்**
**தபால் பெட்டி எண். 96**
**நாக்பூர்.**

NATIONAL
SAVINGS
ORGANIZATION

davp 72/19

# ஆம்கோ பாட்டரியை உபயோகிக்கத் தொடங்கிடுவீர்

# மறந்திடுவீர் பாட்டரி தொல்லையை

ஆம். இடர்ப்பாடுகள் இனி இல்லை. வழியில் கார் செயலிழந்து நிற்க, கடுந்தொல்லைகளுக்கு ஆளாக வேண்டியதில்லை. ஆம்கோ பாட்டரி உன்னதமாக இயங்கி உயரிய தன்னம்பிக்கையை உங்களுக்குத் தருகிறது. காரோட்டுவதைப் பேரானந்தமாக ஆக்குகிறது.

இத்துறையில் முன்னோடிகளான ஆம்கோ பாட்டரீஸ் நவீன தொழில்நுட்பத்துடன் கடுமையான தரக்கட்டுப்பாட்டையும் இணைத்து, ஏறக்குறைய நாற்பது ஆண்டு அனுபவத்தையும் அதனுள் செலுத்தி, ஒவ்வொரு பாட்டரியையும் உருவாக்குகின்றனர். உங்கள் தேவைக்கு ஏற்றதொரு ஆம்கோ பாட்டரி உண்டு. சிறந்ததையோ உபயோகிக்கத் தொடங்குவீர். ஆம்கோ பொருத்திடுவீர். உறுதியுடனே, நீடித்த உழைப்பையும் அது வழங்கிடுமே.





**ஆம்கோ பாட்டரீஸ் லிட்.,**
யூனிடி பில்டிங்ஸ், பெங்களூர்-2.

# உங்கள் சமையலை ருசித்த பின் கணவர் முகம் சுளிக்கிறாரா?



ஹிந்தாலியம் பாத்திரங்களை உபயோகியுங்கள். சீக்கிரம் அவர், உங்களை விட சமையலில் சிறந்தவர் கிடையாது என்று புகழ ஆரம்பித்துவிடுவார்.

ஹிந்தாலியம் ®

சிறந்த இல்லாண்மைக்கு ஓர் பேருதவி.

Sobhagya HAC-172 TAM

ஹிந்துஸ்தான் அலுமினியம் கார்ப்பொரேஷன் லிட்

# சுட்ட புண்கள்! வெட்டுக் காயங்கள்!
# விரைவில் இட்டுப் பாருங்கள் பர்னால்

## குளுமையுடன் இதமளிக்கும் நிவாரணி

பர்னால் பட்டவுடனே சுட்டபுண் ஆறும்

ஆறும் போதே இதம்

வீடு என்றால் விபத்துகள் நேரத்தான் செய்யும். அடிக்கடி களிக்கும் குழந்தைகளுக்கு அடிக்கடி அடிபடுவது சகஜம். சமையலறையிலோ கொதித்திடும் கொதி எண்ணெய் தெறிக்கலாம்; காய்கறி நறுக்கும்போது விரலிலே பட்டு விடலாம். எனவே எப்போதும் கைவசம் இருக்கட்டும் பர்னால்! குளுமையுடன் இதமளிக்கும் பர்னால், தீப்புண், வெட்டு, சிராய்ப்பு, கட்டி மற்றும் காயங்களை ஆற்றும் பல்பயன் நிவாரணி. இட்டவுடன் இதமளித்து ஆற்றுவது பர்னால்.

**பர்னால் 40 ஆண்டுகளுக்கும் மேலாக கணக்கற்ற இல்லங்களில் காயமாற்றிவரும் நம்பகமான நிவாரணி**

Burnol

Burnol

ANTISEPTIC
SOOTHING
HEALING

ASP/BIB-15 TM

பரிதாபி, ஐப்பசி 6 — அக்டோபர் 22, 1972



# கல்கி

## பொருளடக்கம்




| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

சருமத்திற்கு ஊட்டமளிக்கும் ஸ்நான சோப்...

# ரெக்ஸோனா




சருமப் பராமரிப்புக்கான 5 சத்துக்களின்
கலவையாகிய **கேடில் ப்ளஸ்** அடங்கியது

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-RX. 66-140 TH

கல்கி

மலர் 32

இதழ் 12



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# வாய்மைக்குச் சோதனை

**வா**ய்மைக்குச் சோதனை ஏற்பட்ட போது அசைந்து கொடுக்காமல், பணிந்து போகாமல், துணிச்சலுடன் நின்ற திரு எம். ஜி. ஆர். பாராட்டுக்குரியவராகிறார்.

கொஞ்ச காலமாகவே திரு எம்.ஜி. ராமச்சந்திரன் மூன்று உண்மைகளை வற்புறுத்தி வருகிறார்: (1) தி. மு. கழகத்திலும் ஆட்சியிலும் யதேச்சாதிகாரத்தின் கை ஓங்கி வருகிறது. (2) லஞ்ச ஊழல் மலிந்து வருவதாக மக்களிடையே சந்தேகம் வலுத்து வருகிறது. (3) மதுவிலக்கை ரத்து செய்தது தவறு.

இம்மூன்று உண்மைகளைப் பேசியதற்காக எம். ஜி. ஆர். பழிவாங்கப்பட்டிருக்கிறார் என்றே கூறவேண்டும்.

திரு எம். ஜி. ஆர். மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை கட்சியைப் பாதுகாக்க என்று திரு கருணாநிதி விளக்கம் கூறியுள்ளார்.

ஆயின் கழகத்தின் ஸ்தாபகரும் கடைசி மூச்சு வரை அதன் தலைவராகவும் இருந்த திரு ஸி. என். அண்ணாதுரை வகுத்த பாதையிலிருந்து திராவிட முன்னேற்றக் கழகம் வெகுதூரம் விலகிச் சென்றிருக்கிறது. இதைத்தான் திரு எம். ஜி. ஆர். அவர்களும் கண்டித்து வந்திருக்கிறார்.

ஆக கட்சியைப் பாதுகாக்க இந்த நடவடிக்கை என்று திரு கருணாநிதி கூறும்போது, அண்ணாவின் கொள்கைகள், கருத்துக்கள் ஆகியவற்றிலிருந்து கட்சியைப் பாதுகாக்க என்றுதான் அர்த்தம் செய்து கொள்ள வேண்டியிருக்கிறது. அண்ணாவுக்குப் பேச்சளவில் மரியாதை செலுத்துவதோடு கடமை முடிந்ததாக இன்றையக் கழகம் கருதுகிறது.

இப்போதுள்ள திராவிட முன்னேற்றக் கழகம் அண்ணாவால் ஸ்தாபிக்கப்பட்டதும், அவரால் அழுத்தமான கொள்கைகள் வகுத்துத் தரப்பட்டதுமான பழைய கழகமல்ல. மாறாகக் குடியையும் போதைப் பொருள்களையும் இளம் தலைமுறையினரிடம் பரப்பி அவர்களை மீள முடியாதபடி பாழ்படுத்தும் கட்சியாகவே மாறிவிட்டிருக்கிறது. எனவே எம். ஜி. ஆர். அவர்கள் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கையைக் காலஞ்சென்ற அண்ணாவின் மீது தம்பிமார்கள் எடுத்துள்ள நன்றி கெட்ட நடவடிக்கையாகவே கருதலாம்.

எம். ஜி. ஆர். என்ற ஒருவரை விலக்குவதும் சேர்ப்பதும் ஒரு கட்சியின் சொந்த விஷயம் என்றாலும் சொத்துக் கணக்குக் கேட்டவுடனே விலக்கியது நல்ல காரியமாகப் படவில்லை. தி. மு. க. அமைச்சர்கள், வட்ட, மாவட்டப் பிரமுகர்கள், சொத்துக் கணக்குக் காட்ட வேண்டும் என்றால் அதற்கான நடவடிக்கைகளை உடன் மேற்கொள்ளாமல் ஏதோ பேருக்கு ஒரு தீர்மானம் போட்டுவிட்டு, மக்களின் கவனத்தைத் திசை திருப்பும் முயற்சியாக, ''பாராளுமன்ற உறுப்பினரும் தங்கள் சொத்துக்களையும் தங்கள் குடும்பச் சொத்துக்களையும் கணக்குக் காட்டவேண்டும், அதற்கான ஏற்பாடுகளை மத்திய அரசு உடன் செய்யவேண்டும்'' என்று தி. மு. க. குழு தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளது. இந்த விஷயத்தில் மத்திய அரசுக்கு ஒரு முன்மாதிரியாக தி. மு. க. அமைச்சர்கள், பிரமுகர்கள், முன்வந்து தங்கள் சொத்துக் கணக்குகளை (உறவினர் சொத்துக்கள் திடீரென்று ஏறியிருந்தால் அதையும் சேர்த்து) காட்டி நாணயத்தை நிரூபித்திருக்க வேண்டியதே அவர்கள் கடமை. அதுவே கண்ணியமானதும்கூட.

இப்போது திரு எம். ஜி. ஆர். மீது கழகம் நடவடிக்கை எடுத்து அவரைக் கட்சியிலிருந்து வெளியேற்றியிருப்பதால் அவருக்கு எந்த விதமான நஷ்டமும் இல்லை. மாறாக அவரது கௌரவமும் மதிப்பும் பன்மடங்கு உயரவே செய்கிறது. திராவிட முன்னேற்றக் கழகத்துக்குத்தான் இந்தச் சம்பவத்தால் பெரும் நஷ்டம்.

ஒன், டூ, மார்ச்!
சவான்
சி.எஸ்
தார்
சர்மா
இந்தியப் பொருளாதாரம்
இந்திரா

'' பொருளாதாரம் முன்னேற்றத்துக்குத் தயார் !'' —சாவனின் அ. இ. கா. கமிட்டி பேச்சு.




''இனி நான் மேற்கொள்ளவேண்டிய நடவடிக்கை பற்றி மக்கள் எண்ணத்தை அறிய விரும்புகிறேன்.'' — எம். ஜி. ஆர்







ஐந்தாவது திட்டத்தில் வளர்ச்சி விகிதக் குறிக்கோள் 5·5 சதம். —செய்தித் தலைப்பு

கண்ணியம், கடமை, கட்டுப்பாடு

அண்ணா வழி

சர்வாதிகாரப் பாதை

# மசானி விடுத்த எச்சரிக்கை

தற்போது நாட்டில் எல்லா மாநிலங்களிலும் சட்டமியற்றப்பட்டுள்ள நில உச்சவரம்பு சீர்திருத்தங்களும், குடும்பத்தை மையமாக வைத்து, வரம்புகள் நிர்ணயிக்கப்படும் போக்கும், நாட்டில் உணவுப் பொருள்களின் உற்பத்தியைப் பாதிக்கும். கூடவே விவசாயிகளை அவர்களுடைய கண்ணியமான நிலைமையிலிருந்து நீக்கி நாளடைவில் அரசாங்கத்தின் அடிமைகளாக்கி விடும்.

நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் என்றும், சமுதாய நலம் என்றும் ஓயாமல் எழுப்பப்படும் கோஷங்களும், அவற்றின் அடிப்படையில் மேற்கொள்ளப்படும் உபரி நிலம் பறிமுதல், பட்டா வழங்குதல் போன்ற நடவடிக்கைகளும் ''கலப்படமற்ற மோசடி'', மக்களை ஏமாற்றும் வித்தை. சொந்த நிலங்களின் விஸ்தீரணம் குறையக் குறைய சொந்த சாகுபடி செய்வது கட்டுப்படியாகாத தொழிலாகப் போகும். இறுதியில் கம்யூனிஸ்ட் நாடுகளில் நிலவும் சர்க்கார் பண்ணைகள் என்ற முறை வந்து சேரும். அவ்விதம் நடைபெற்றால் இப்போது நிலமுள்ளவர்கள் சர்க்கார் பண்ணைகளில் கூலிக்கு வேலை செய்யும் நிலைமைக்குத் தாழ்ந்து போய்விடுவார்கள்.

கூட்டுப் பண்ணைகள் மூலம் உற்பத்தி பெருகும் என்றோ, சமுதாய ஏற்றத் தாழ்வுகள் மறைந்துவிடும் என்றோ சொல்லுவதற்கில்லை. பல ஆண்டுகள் அநுபவத்துக்குப் பின்னர் ருஷ்யா போன்ற நாடுகளில் உற்பத்திப் பெருக்கு ஏற்பட வேண்டுமானால் விவசாயிகளின் ஊக்கத்தை வளர்த்தால்தான் முடியும் என்ற உண்மையை உணர்ந்துகொண்டுள்ளனர். இவற்றிலிருந்தாவது நமது மக்கள் உண்மை நிலைமையைப் புரிந்து கொள்ள வேண்டாமா?

விவசாய மக்கள் ஒவ்வொரு மாநிலத்திலும் ஒன்றுபட்டு இணைந்து சங்கங்கள் அமைத்து நில உச்சவரம்புச் சட்டங்கள் இழைத்துக் கொண்டு வரும் தவறுகளைத் திருத்த முற்பட வேண்டும். மாநிலம் தோறும் உள்ள சங்கங்கள், அகில இந்திய சம்மேளனமாக உருப்பெற்று, எல்லா சட்ட மன்றங்களிலும் சக்தி வாய்ந்த கூட்டு அணியாகச் செயல்பட வேண்டும். இல்லாது போனால் விவசாயிகளின் எதிர்காலம் இருள் சூழ்ந்ததாகி விடும். இவ்வாறு திரு மஸானி அண்மையில் பெங்களூரில் நடந்த விவசாயிகள் சம்மேளனத்தில் எச்சரிக்கை விடுத்துள்ளார்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

சிம்லா ஒப்பந்தம் எதிர்பார்த்தபடி சுமுகமாகச் செயல்படவில்லையோ என்று எனக்குச் சந்தேகம் ஏற்படுகிறது என்பதை வெளிப்படையாகவே ஒப்புக் கொள்கிறேன். எனினும், பிரதமர் உற்சாகம் இழக்க மாட்டார் என்றே நான் நம்புகிறேன். தமது முயற்சிகளைச் சுறுசுறுப்புடன் தொடர்ந்து நடத்த வேண்டும் என்றும் விரும்புகிறேன். ஏனெனில் இந்தியாவுக்கும், ஏன் ஆசியாவுக்குமே, இன்று இதைவிட முக்கியத்துவம் உள்ளது வேறு ஒன்றும் இல்லை. ஸ்ரீமதி இந்திரா காந்திக்கு ஆண்டவனின் அருளும் உதவியும் இருக்க வேண்டும் என்று விரும்புவதுடன், அதற்காகப் பிரார்த்திக்கவும் செய்கிறேன்.

★

கொலை செய்பவன் தூக்கிலிடப்படுவான் என்ற எண்ணம் நம் நாட்டில் பரவலாக இருந்து வருகிறது. எல்லா வகுப்பினரிடமும் இந்த எண்ணம் நிலவிக் கொலைகளையும் கொலை முயற்சிகளையும் தடுத்து வருகிறது. இதன் மூலம் எந்த அளவுக்குக் கொலைகள் தடுக்கப்பட்டிருக்கின்றன என்று கணக்குப் பார்க்க முடியாது. கொலை செய்பவனுக்கு மரண தண்டனை கிடைக்கும் என்ற எண்ணத்தால் தவிர்க்கப்படும் கொலைகள் மிக அதிகம். கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டவனிடம் சூழ்நிலைகளைக் கருத்தில் கொண்டு தகுந்த அளவுக்குக் கருணை காட்ட நீதி மன்றங்களுக்கு வேண்டிய அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. ஆகவே மரண தண்டனை சட்டத்தில் இடம் பெற வேண்டுமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமே யில்லை.

★

கிழக்கு ஜெர்மனியை ஒரு தனி நாடாக அங்கீகரிக்க இந்தியாவுக்கு உரிமை உண்டு. இதை யாரும் மறுப்பதற்கில்லை. ஆனால் இந்தியா தான் பெற்றுள்ள உதவிகள் காரணமாக மேற்கு ஜெர்மனிக்குப் பெருமளவு கடமைப்பட்டிருக்கிறது. ஆகவே கிழக்கு ஜெர்மனியைத் தனி நாடாக அங்கீகரிக்கும் கொள்கை பற்றி மேற்கு ஜெர்மனி ஒரு முடிவுக்கு வரும்வரை இந்தியா காத்திருந்து பார்ப்பதே பொருத்தமாயிருந்திருக்கும். இதைச் செய்யத் தவறிவிட்டோம்.

# மூன்று-பாண்டு உலகையே தன்வசமாக்கும் பேராற்றல்

எமது புதிய, அழகிய 3-பாண்டு கமாண்டர் உலகின் எந்த நிலையத்தையும் கவர்ந்து, தொல்லையின்றித் தெளிவாகக் கேட்க உதவுகிறது. ஒளி சிந்தும் அனொடைஸ்ட் முகப்பு, லாகவமாக இயங்கும் பாண்டு—ஸ்விட்ச், விரல்களோடு உறவாடும் உருளையான விசைகள்—இவை மட்டுமே கமாண்டரின் சிறப்பம்சங்கள் அல்ல! இதன் முழு ஆற்றலையும் கண்டறிய அருகிலுள்ள பிலிப்ஸ் வியாபாரியிடம் சென்று கேட்டுப் பாருங்கள். பின்னர் அதன் வசீகரத்திலிருந்து தப்ப முடியாது.

## புதிய
## கமாண்டர்

**3-பாண்டுகள் ரூ. 340/-**
எக்சைஸ் உட்பட, மற்ற வரிகள் தனி.




**இளமை ததும்பும் புதுமைப் படைப்பு**

**பிலிப்ஸ்**
களிப்பை தரும் ஒலி
இணையற்ற இன்னொலி
பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

CHPR-328-162 TM





## சென்னையில் காந்தி ஜெயந்தி விழா

சென்னை, கிண்டி, காந்தி மண்டபத்தில் காந்தி மகான் பிறந்த அக்டோபர் 2ம் தேதி தொடங்கி 8ம் தேதி முடிய ஏழு நாட்கள் வெகு சிறப்பாகக் காந்தி ஜெயந்தி விழா நடைபெற்றது. மந்திரிகளும் அறிஞர்களும், பிற சமயங்களைச் சார்ந்த பெரியோர்களும் தேசபக்தர்களும் காந்தியத்தைப் பற்றிப் பேசினர். முதல் நாள் முதல்வர் திரு கருணாநிதி விழாவைத் தொடங்கி வைத்தார். ஸ்ரீமதி மதுபென் ஷா காந்தியப் பொருட்காட்சியைத் திறந்து வைத்தார். ஸ்ரீ கே. சந்தானம் காந்திய பிரசங்கத் தொடரை ஆரம்பித்து வைத்தார். அடுத்து வந்த நாட்களில் நாவலர் நெடுஞ்செழியன், திரு சா. கணேசன், திரு ம. பொ. சி., திரு கி. வா. ஜ., ஆர்ச்பிஷப் அருளப்பா, தவத்திரு ஜெரோம் டிஸௌஸா, திரு ஜோஷி இப்படிப் பலர் காந்திமகானைப் பற்றிப் பேசினார்கள். கடைசி நாள் ராஜாஜி பேசினார்கள். பல கல்லூரி மாணவிகளும், மாதர் சங்கத்தினரும் கோஷ்டி கானம் நிகழ்த்தினர். பிரபல சங்கீத வித்வான்கள் பக்தியுடன் துதி கீதங்கள் பாடினார்கள். அப்படிப் பாடியவர்களில் ஒருசிலர் ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள், ஸ்ரீமதி ராதா ஜெயலட்சுமி, பழனி விஜயலட்சுமி, ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள், திரு சீர்காழி கோவிந்தராஜன் ஆகியோராவர். ஒவ்வொரு நாளும் பல்லாயிரக் கணக்கான மக்கள் குழுமினர். மத்திய சர்க்காரும் ராஜ்ய சர்க்காரும் காந்தியப் பொருட்காட்சி நடத்தினர். திரைப்படக் காட்சிகளும் இடம்பெற்றன. எல்லா நாட்களிலும் கவர்னர் திரு கே. கே. ஷா விழாவுக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார்.









# தமிழ் நாட்டிலே

— தீரன் —

## அதிகாரிகளும் பகுத்தறிவாளர் கழகமும்

மாநில சர்க்காரின் உயர்தர அதிகாரிகளையும், பெரிய பதவிகளில் உள்ளவர்களையும், தெய்வ நிந்தனை, இந்து சமய எதிர்ப்புப் பிரசாரம், வகுப்புத் துவேஷம் ஆகியவற்றில் சிக்க வைப்பதற்காகப் 'பகுத்தறிவாளர் கழகம்' என்ற பெயரில் ஓர் அமைப்பு இயங்கி வருகிறது. இந்த அமைப்பு எல்லா மக்கள் நலனுக்குமான எந்தப் பொதுப் பிரச்னைகளையும் பற்றிச் சிந்திப்பதை விட தெய்வ நிந்தனை, வகுப்புத் துவேஷம் ஆகிய காரியங்களையே அதிகமாகச் செய்து வருவதைக் காண்கிறோம். அமைச்சர்கள், சர்க்கார் அதிகாரிகள், ஊர் ஊராக இந்தக் கூட்டங்களில் கலந்து கொள்கிறார்கள். இந்தக் கூட்டங்களை ஊக்கப்படுத்தவும் செய்கிறார்கள். ஒவ்வோர் ஊரிலும் யாராவது ஒரு பெரிய சர்க்கார் அதிகாரி இதற்குத் தலைவராகவோ, செயலாளராகவோ இருக்கிறார். கட்சிகள் நேரடியான தி. க., தி. மு. க. பிரசாரம் செய்வது போல் அதிகாரிகளும் சர்க்கார் இயந்திரங்களும் மறைமுகமான தி. மு. க. பிரசாரம் செய்யத்தான் இந்த அமைப்புப் பயன்படுத்தப்படுகிறதோ என்று சந்தேகப்பட நியாயமிருக்கிறது. பழம் பெரும் காவியங்களையும், இதிகாசங்களையும், நாட்டின் பழம்பெரும் பண்பாடுகளையும் கிண்டல் செய்யும் மகாநாடுகளையும் கூட்டங்களையும் இக்கழகம் அடிக்கடி பல ஊர்களில் நடத்துகிறது. அப்படி நடத்தும் கூட்டங்களிலும் ஒரு குறிப்பிட்ட சமயம் மட்டும்தான் இவர்களின் தாக்குதலுக்கு இரையாகிற நிலை தொடருகிறது. பொறுமையும் சகிப்புத் தன்மையும் உள்ளவர்களைக் கையாலாகாதவர்களாகக் கருதுகிறார்கள் போலும்!

## ஆசிரியருக்கு அநீதி

இராமநாதபுரம் மாவட்டத்தில் தேவகோட்டைக்கு அருகேயுள்ள ஒரு சிற்றூரில் தி. மு. க. அமைப்புக் கூட்டத்துக்கு மேஜை, நாற்காலி தரவில்லை என்பதற்காக ஒரு பள்ளித் தலைமை ஆசிரியர் 'சஸ்பெண்ட்' செய்யப்பட்டதாகவும், ஆசிரியர் போராட்டத்தில் கலந்து கொண்டதற்காக வேலூர் ஆசிரியர் பழி வாங்கப்பட்டதாகவும் தேவகோட்டை வட்ட ஆசிரியர் கூட்டணி தெரிவித்திருக்கிறது. கண்டனத் தீர்மானமும் நிறைவேற்றியிருக்கிறது. அரசியல் ரீதியாக ஆசிரியர்களை நிர்ப்பந்தப்படுத்துவதும் அதற்குப் பணியாதவர்களைப் பழி வாங்குவதும் நாகரிகமோ, ஒழுங்கோ அல்ல என்பதை அரசு புரிந்து கொள்ள வேண்டும். ஒவ்வோர் ஊரிலும் கட்சி ஆட்கள் கல்வி நிலையங்களில் புகுந்து அதைக் கொடு, இதைக் கொடு என்று மிரட்டுவதும் கட்சி சாதகபாதக நிலைகளுக்கு ஏற்ப ஆசிரியர்கள் பழி வாங்கப்படுவதும் உடனே நின்றாக வேண்டும்.

## இரு பெருந் தலைவர்களின் நல்லுரை

சென்னையிலுள்ள கிண்டி காந்தி மண்டபத்தில் நடைபெற்ற காந்தி ஜெயந்தி விழாவில் ராஜாஜி அவர்களும், ஆர்க்காட்டில் நடைபெற்ற காந்தி ஜெயந்தி விழாவில் காமராஜ் அவர்களும் ஏறக்குறைய ஒரே விதமான சிந்தனைப் போக்கில் பேசியுள்ளார்கள். நாட்டு நலனிலும், தேசியப் பண்புகளிலும் இருவருக்கும் உள்ள அக்கறை இந்தப் பேச்சுக்களால் புலனாகிறது. 'பொதுப் பிரச்னைகளையும், சொந்தப் பிரச்னைகளையும் சுயநலமில்லாமல் பற்றற்ற முறையில் அணுக நாம் கற்றுக் கொள்ள வேண்டும்' என்று ராஜாஜி அவர்கள் கூறியிருப்பதை ஆட்சியாளர்கள் ஒரு முறைக்கு இரு முறையாகக் கூர்ந்து கவனிக்க வேண்டும். 'இந்தியாவுக்கு மகாத்மா காந்தியைப் போன்ற ஒரு நல்ல தலைவர் இப்போது மிக மிக அவசியம் என்றும் இந்த விஷயத்தில்



ராஜாஜி சென்னை காந்தி மண்டப விழாவில் பேசியதைத் தாம் முழு மனத்தோடு வரவேற்பதாகவும் திரு காமராஜ் ஆர்க்காட்டில் கூறியிருக்கிறார். 'தூய உள்ளமும் நல்லறிவும் உடல் வலுவுமுள்ள ஒரு நல்ல தலைவனை நாடு பெற இறைவன் அருள வேண்டும்' என்று சென்னையில் ராஜாஜி கூறியதையே ஆர்க்காட்டில் காமராஜ் அவர்களும் கூறியுள்ளார். இந்தக் கருத்து ஒற்றுமை நாட்டு நலனில் இவர்கள் இருவருக்கும் உள்ள அக்கறையையே காட்டுகிறது.

## அவசரக் கண் சிகிச்சை

தமிழ் நாட்டில் கண் சிகிச்சை முகாம்கள் என்ற பேரிலும் முதல்வரின் கண்ணொளி வழங்கும் திட்டம் என்ற பேரிலும் அங்கங்கே நடத்தப்படும் 'கண் அறுவை — கண்ணாடி மாட்டிவிடுதல்' போன்ற காரியங்கள் படு அவசரமாக நடத்தப்படுவதாகவும் அதனால் கண்ணொளி பெறுவதற்குப் பதில் சில இடங்களில் சிகிச்சைக்கு ஆளானவர்கள் கண்ணொளி இழந்து விடுவதாகவும் செய்திகள் வருகின்றன.

'இவ்வளவு நேரத்துக்குள் இத்தனைபேருக்கு அறுவைச் சிகிச்சையை முடித்தாக வேண்டும்' என்று டாக்டர்கள் வற்புறுத்தி அவசரப்

படுத்தப்படுவதாகவும் கூறப்படுகிறது. அறுவைச் சிகிச்சை முடிந்து கண் கட்டு அவிழ்க்கப்படுவதற்கும், கண்ணுடி வழங்கப்படுவதற்கும் நடுவே போதிய அவகாசம் இல்லாததாலும் பல சிகிச்சைகள் தோல்வி அடைந்திருப்பதாகத் தெரிகிறது. 'இத்தனை ஆயிரம் பேருக்கு இத்தனை நாளில் ஆபரேஷன் செய்து கண்ணுடி மாட்டி விட்டோம்' என்ற விளம்பரத்தை விட 'இத்தனை ஆயிரம் பேருக்குக் கண் பார்வை சரியாயிற்று' என்று முடிவில் தெரிவிக்கிற உண்மைதான் முக்கியம். விஷயம் தெரிந்த வைத்தியர்களோ விஷயம் தெரியாத அரசியல்வாதிகளோ, அதிகாரிகளோ விரட்டக் கூடாது. எண்ணிக்கை விளம்பரத்துக்குப் பயன்படலாம். சிகிச்சையால் தேறியவர்கள் மட்டுமே வாழ்க்கைக்குப் பயன்படுவார்கள் என்பது ஞாபகம் இருக்க வேண்டும்.

## புதிய சாசனக் கற்கள்

**த**மிழக முதல்வர் மதுரையில் ஒரு கோயில் கல்யாண மண்டபத்தைத் திறந்து வைக்கும்போது, ''இம்மாதிரி விழாக்களில் திறப்பாளர்களின் பெயர்கள் போன்ற விவரங்களைப் பொறித்த சாசனக் கற்கள் பதிக்கப்படுவது முற்றிலும் சரியே'' என்று கூறிவிட்டு, 100, அல்லது 200 ஆண்டுகளுக்குப் பின் இந்தச் சாசனக் கற்களின் மதிப்பு உயரும் என்றும் அப்போது இவை வெறும் விளம்பரக் கற்களாக மட்டும் இருக்க மாட்டா என்றும் விளக்கியிருக்கிறார். முதல்வர் சுய விளம்பரத்தை மிகவும் சாமர்த்தியமாக 'சாஸனம்' ஆக்கிக் கூறிவிட்டார். ஆனால் நூறு ஆண்டுகளுக்கும் இருநூறு ஆண்டுகளுக்கும் பின்னால் இவை மதிப்புக்குரிய கற்களாக, வரலாற்றுச் சின்னங்களாக ஆகிவிடும் என்று முதல்வர் கூறியிருப்பதை மட்டும் எப்படி ஏற்பது? ஒருவேளை இருநூறு ஆண்டுகளுக்குப் பின் வருகின்ற தலைமுறையினர் 'இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்த சுயவிளம்பர மனப்பான்மை' என்பதாகவும் இவற்றைப் புரிந்து கொண்டு வெறுக்கலாம். அரசர்கள் பழைய காலங்களில் வரையச் செய்த கல்வெட்டும் இவையும் ஒன்றாகிவிட முடியாது. அக்கல்வெட்டுக்களில் பணிவும் அடக்கமும் பக்தியும் அதிகம்.

## குமாரமங்கலத்தின் கருத்து

**மு**ன்னாள் இராணுவ தளபதி பி.பி. குமாரமங்கலம் சமீபத்தில் சென்னையில் திருவல்லிக்கேணி கலாசாரக் கழகத்தின் சார்பில் பேசும்போது சில அருமையான சிந்தனைக்குரிய கருத்துக்களைத் துணிந்து கூறியிருக்கிறார்:

''நாம் காந்தியடிகளின் பொருளாதாரக் கொள்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டும்; பின்பற்ற வேண்டும். வேறொரு நாட்டில் அது எவ்வளவு சிறப்பாக இருந்தாலும் கூட அந்நிய நாட்டுப் பொருளாதார பாணியை அப்படியே காப்பியடிக்கக் கூடாது. அது நமது அடிப்படை அமைப்புக்குப் பொருந்துகிறதா என்று கவனிக்க வேண்டும். நமது தேசிய சிந்தனை நம்மிடையே சுயமாக மலர்ந்ததாக இருக்க வேண்டும். இந்தியாவின் கிராம மக்களிடையே இன்று மிகவும் சோர்வு தோன்றியுள்ளது. இந்தச் சோர்வு அகற்றப்பட வேண்டும். அரசியல் சந்தர்ப்ப வாதங்களுக்கு இடம் தரக் கூடாது.''

இன்றுள்ள சூழ்நிலையில் இந்த அறிவுரை மிக மிக அவசியமானது.

## சபாஷ் மாணவர்கள் !

**சா**த்தூர்ப் பகுதியில் அதிகாரிகளுக்குப் பலமுறை மகஜர் கொடுத்தும், சர்க்காருக்குப் புகார் செய்தும் கவனிக்கப்படாமல் இருந்த ஒரு பிரச்னையை மாணவர்கள் தாங்களாகவே




முன்வந்து போராடித் தீர்த்துக் கொண்டிருக்கிறார்கள். கல்வி நிலையத்துக்கும், பொதுப் பகுதிகளுக்கும் அருகிலிருந்த ஒரு சாராயக் கடையை மாணவர்களே முன்வந்து போராடி அந்த இடத்திலிருந்து உடனே மாற்றச் செய்து வெற்றி பெற்று விட்டார்கள். மாணவர்கள் நேரடியாகக் கிளர்ச்சியில் இறங்குகிற வரையில் கண்டும் காணாமலும் இருந்த அதிகாரிகள் மாணவர்கள் கிளர்ச்சியில் இறங்கிப் பொதுமக்கள் கவனத்தைக் கவர்ந்ததும் உடன் அந்தச் சாராயக் கடையை வேறு இடத்துக்கு மாற்றச் சொல்லி உத்தரவு போட்டு விட்டார்களாம். போராடி உடன் வெற்றி பெற்ற சாத்தூர் மாணவர்களைப் பாராட்டி வாழ்த்துகிறோம்.

---

அரசுத் துறையின் அழகு!




ஒரிஸ்ஸாவில் உணவு கார்ப்பொரேஷன் அரிசிக் கிடங்குகளில் ஸ்டாக் எடுத்தபோது ஏழாயிரம் டன் அரிசி குறைந்திருப்பது தெரியவந்திருக்கிறது. இதன் மதிப்பு 75 லட்ச ரூபாய்!

— டைம்ஸ் ஆஃப் இந்தியா - பாலி

# தலையாய கேச ஸ்டைல் கலைஞர்களின் சிபாரிசு:

# ட்ரு-டோன்

## ஹேர் டைய்

ஆண் பெண்களுக்கென, உலகில் உன்னத விற்பனை உடைய கேசச் சாயத்தைத் தயாரிப்போரின் படைப்பு.



"எத்தனையோ கேசச் சாய முறைகளை நோட்டம் பார்த்து விட்டோம். கேசத்திற்கு இயற்கை மெருகும் பளபளப்பும் அளித்து எளிதில் இளமைக் களையினை மீட்பது ட்ரு-டோன். எங்கள் வாடிக்கையாளர்களுக்கு நாங்கள் சிபாரிசு செய்வது ட்ரு-டோன் அன்றி வேறில்லை. இத்தகைய அருமையான தயாரிப்பு ஒன்றை உருவாக்கிய உங்களுக்கு நன்றி."

(அஸ்மி)
லேகஸ் ஹேர் ஸ்டைலிஸ்ட்,
123 மவுண்டு ரோடு, சென்னை-6.

ட்ரு-டோன் உங்கள் கேசத்திற்கு உயிர்த் துடிப்புள்ள இளமைப் பொலிவூட்டுகிறது ☐ ஒருசீராகப் பரவியமைகிறது, உடனடியாகச் செயல்படுகிறது ☐ இயற்கை மெருகும் பளபளப்பும் அளிக்கிறது ☐ அடிக்கடி கழுவினாலும் மங்கவோ நிறம் மாறவோ செய்யாது




தயாரிப்போர்:
ஜே.கே.ஹெலன் கர்ட்டிஸ் லிட்.,
பம்பாய்-1

**ஹெலன் கர்ட்டிஸ்**
லண்டன் • பாரிஸ் • நியூ யார்க்

தவிரவும் கிடைப்பவை: ஹேர் டைய் உபயோகிப்போருக்கென, தனித்திறமுடன் தயாரிக்கப்பட்ட ட்ரு-டோன் ஸ்டெயின் ரிமூவர், ட்ரு-டோன் ஷாம்பூ

ARMS-HC 4472.80.D TM

# புரவி நாட்டிய பூபதி

புரவி நாட்டியம் கற்று, அதில் முப்பத்தைந்து ஆண்டுகளாகப் புகழுடன் விளங்கி, 'புரவி நாட்டிய பூபதி' என்ற பட்டம் பெற்றிருக்கிறார் பெங்களூர் டி. சி. சுந்தரமூர்த்தி. பட்டமளித்தவர் மைசூர் மகாராஜா திரு ஜெயசாமராஜ உடையார்.

'ரீடர்ஸ் டைஜஸ்டி'ல் இவரைப் பற்றிய கட்டுரையும் படமும் வெளியாகி யிருக்கின்றன. செக்கோஸ்லோவேகியாவிலிருந்து வந்த கலைக் குழுவினர், சுந்தரமூர்த்தியின் புரவி ஆட்டத்தை, மகாபலிபுரப் பின்னணியில் திரைப்படமெடுத்துச் சென்றார்கள்!

டெலிவிஷனில் தன் குழுவினருடன் சுந்தரமூர்த்தி கரகம், மயிலாட்டம் முதலிய நிகழ்ச்சிகளை நடத்திக் காண்பித்திருக்கிறார்.

'ஸ்ரீ சுந்தர் புரவி நாட்டியக் கலாமன்றம்' பெங்களூரில் 1936ல் நிறுவப்பட்டதாகும். இங்கு சுந்தரமூர்த்தியிடம் புரவி ஆட்டம், மயிலாட்டம், கரகம், காவடி ஆட்டம் முதலியவற்றை முறையாகப் பயின்ற மாணவர்கள், இப்போது இந்தத் துறைகளில் புகழ் பெற்று விளங்குகிறார்கள், பல ஊர்களில்.

பெங்களூர் சுந்தர மூர்த்தியின் ஆட்டம் எங்கேனும் நடைபெற வேண்டுமானால், முதலில் ஒரு லாரி ஏற்பாடு செய்யப்பட வேண்டும்! ஏனென்றால், பொய்க்கால் குதிரைகள், மயில்கள், ரிஷபங்கள், சிம்ம வாகனங்கள், கருடன், கிளி, எருமைக்கடா மற்றும் ஆடை ஆபரணங்கள், பின்னணி வாத்தியங்கள், பெட்டிகள்—இப்படி நிறைய இருக்கின்றன.

சுந்தரமூர்த்தியின் குழுவில், அவருடன் அவரது மனைவி திருமதி அநுசூயை, இரண்டு பிள்ளைகள், இரண்டு பெண்கள் மற்றும், 'ஆர்க்கெஸ்ட்ரா' குழுவினர் உள்பட மொத்தம் இருபத்திரண்டு பேர்கள் இன்று இடம் பெற்றுள்ளனர்.

இரவு ஏழு மணி முதல், அதிகாலை ஐந்து மணி வரை 'ஓர் இரவு' நிகழ்ச்சியில் இத்தனை 'அயிட்டங்கள்' இடம் பெற்றுள்ளன : 'சிவசக்தி', 'மதுரை வீரன்', முருகனும் மயில் வாகனமும், சிவாஜி — பவானி அம்மனிடம் வீரவாள் பெறுதல், கட்டபொம்மன், ராமசாஸ்திரியும் பேஷ்வாவும், நாதிர்ஷாவும் அரசியும், கிரிஜா கல்யாணம், மார்வாரி நாட்டியம், கரகம் — காவடி.

சுந்தரமூர்த்தி தன் நிகழ்ச்சிக்கான கதைகளையும் பாடல்களையும் தாமே எழுதி இருக்கிறாராம். தவிர, அலங்கார உடைகள் ஆபரணங்கள்கூட அவரது சொந்த 'டிசைன்'களில் தயாரிக்கப்பட்டவைதானும் !

''பழைய கால ராஜா என்றால் அதற்கேற்ற படி வெல்வெட் உடை, பட்டுத் தலைப்பாகை, கிரீடம், தோடாக்கள், அணிகலன்கள் எடுப்பாக இருக்க வேண்டும்... இரு பதினாயிரம் ரூபாய் செலவில் இவைகளைத் தயாரித்துள்ளேன்'' எனக் குறிப்பிடுகிறார்.

முதல் காட்சியில் 'தஞ்சாவூர் ராஜாராணி'யுடன் வரும்போது, தமக்குக் கிடைத்த இருபத்து நான்கு தங்க மெடல்களையும் அணிந்து கொள்கிறார்.

ஒரு சமயம் குடியரசு தினத்தன்று நேருவின் இல்லத்தில் கலைஞர்களுக்கு விருந்து கொடுக்கப்பட்டது.

நேருவின் முன்னால் புரவி நாட்டியம் ஆடிக் காட்டியதும், அவர் சுந்தரமூர்த்தியின் அருகே வந்து நின்று, ''ராஜஸ்தானில் இப்



படி ஆடுவார்கள். அதையெல்லாம்விடப் பன் மடங்கு இந்தப் புரவி ஆட்டம் சிறப்பாக இருக்கிறது. உங்கள் தமிழ்நாட்டின் கலையே கலை!'' எனப் பாராட்டிக் கைகுலுக்கினார். சுந்தரமூர்த்திக்கு மூச்சுத் திணறிவிட்டதாம்!

சென்னையில், இருபதாண்டுகளுக்கு முன்பு, பொங்கல் திருநாளன்று, தென்னிந்திய நடிகர் சங்கத்தாரின் கலை விழாவில் பங்கு கொண்டார். சினிமா உலகமே வடபழனி விஜயா பூங்காவில் திரண்டிருந்தது. விசேட அலங்கார மேடை மீது கதம்ப நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

சுந்தரமூர்த்தியும், அவரது மனைவியும் தோன்றும் முதல் காட்சி–தஞ்சாவூர் ராஜா–ராணி. திடீரென்று வலக் கால் வழுக்கி விட்டது!.... அபாயமான நிலையில் பூமியில் கால் நீண்டு விட்டது!.... முன் வரிசையில் அமர்ந்திருந்த திரு எம். ஜி. ஆர்., கலைவாணர் கிருஷ்ணன் மற்றும் பலர் 'ஆ' என்றபடி இடம் விட்டு எழுந்து விட்டனர்.

பின்னணிக் கலைஞர் கைகொடுக்க, உடனே எழுந்து, சுந்தரமூர்த்தி குதிரைமீது சவுக்கால் அடித்து, 'ஹிய்ய்ய்...' எனக் குதிரை மாதிரி மும்முறை கனைத்துவிட்டு மீண்டும் நாட்டியம் ஆட ஆரம்பித்தார்!

பார்த்தவர்கள் குதிரை சறுக்கி விழுந்து விட்டதாகவும், அரசன் குதிரையைச் சவுக்கால் அடித்த பிறகு குதிரை மறுபடியும் பழைய நிலைக்கு வந்ததாகவும் எண்ணிவிட்டார்கள்... மகிழ்ச்சி ஆரவாரம் பெருகக் கைதட்டலும் ஒலித்தது.

ஆனால் – விபத்தைச் சமயோசிதமாகச் சமாளித்திருந்த சுந்தரமூர்த்திக்கு, முழங்காலில் பெரிய 'சிராய்ப்பு' ஏற்பட்டு ரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது! இது ரசிகர்களுக்குத் தெரியாது!....

இந்தச் சம்பவத்தைச் சொல்லி அவர் கனைப்புக் குரல் கொடுத்தபோது நிஜக் குதிரையின் ஒலி அப்படியே கேட்டது! குபீரென்று சிரித்துவிட்டேன்!

பேட்டி: ஏ. சுவாமிநாதன்





## மரியாதையும் தொல்லையே!

லிப்டின் எலிவேட்டர் கதவு திறந்தது. ஸ்வீடனின் இளவரசர் பிலிப்ஸ் அமெரிக்க எழுத்தாளரிடம், "நீங்கள் முதலில் ஏறுங்கள்!" என்றார் மரியாதையாக. "இல்லை! மேன்மை தங்கிய இளவரசருக்குப் பிறகுதான்....!" என்று எழுத்தாளர் இழுத்தார்.

"நீங்கள் எங்கள் நாட்டுக்கு வந்த விருந்தாளி. நான் பண்போடு நடக்க இடம் தாருங்கள்!"

"நாம் இப்போது அமெரிக்க எல்லையில் (அமெரிக்கத் தூதராலயம்) நிற்கிறோம். ஆக நீங்கள்தான் அமெரிக்காவின் விருந்தாளி!" என்றார் அமெரிக்க எழுத்தாளர்.

"நீங்கள் தப்பாகச் சொல்கிறீர்கள்! இங்கு ஓர் அடி உயரத்துக்கு மேல் உள்ளது அமெரிக்காவைச் சேர்ந்ததாயிருக்கலாம். ஆனும் நாம் ஸ்வீடன் மண்ணுக்கு மேலேயே இருக்கிறோம்!" என்றார் இளவரசர்.

அந்தச் சமயம் அவர்களை விருந்துக்கழைத்திருந்த பெண்மணி வந்துவிட்டாள். அவர்களது உரையாடலைக் கேட்டுவிட்டு, "இது என்ன, பேசாமல் இரண்டு பேரும் தோளோடு தோள் இணைந்து லிஃப்டுக்குள் நுழையுங்கள்!" என்றாள். - பி.எஸ்.



## கோலாகலமான மூடு விழா

1947ல் இந்திய சுதந்திர தின விழா உலகம் முழுவதும் விமரிசையாகக் கொண்டாடப்பட்ட அந்த நேரத்தில் ஓர் இடத்தில் மூடு விழா ஒன்றும் நடைபெற்றது! போதாக் குறைக்கு இதில் ஒரே கோலாகலம்! இந்திய விவகாரங்களைக் கவனித்துக்கொண்டிருந்த "இந்தியா ஹவுஸ்"ஸுக்குத்தான் அன்று மூடு விழா. அடக்குமுறையின் அலுவலகமாகத் திகழ்ந்த அது அன்றோடு நிரந்தரமாக மூடப்பட்டு விட்டது.

— லக்ஷ்மி ராஜரத்தினம்

## தலையிடு!



"சிங்கத்தின் வாயில் தலையிடுற என் நடிப்பு முடிஞ்சு போச்சு! நான் வரட்டுமா?"

"சிங்கத்தின் வாயை மூடிட்டு வந்தாயா? அது இன்னும் திறந்தபடியே உட்கார்ந்திண்டிருக்கே?"

# பெருமை யாருக்கு?

ஸ்ரீரங்கம் நரசிம்மன்

சூடவாசல் கோவிந்துவின் சஷ்டியப்த பூர்த்திக்கு வேதராமன் தம்பதியரை அழைத்திருந்தார்கள். "நீங்கள் மட்டும் போய் வாருங்களேன்... நானும் வரணுமா?" என்று இழுத்தாற்போலக் கேட்டாள் வேதராமனின் மனைவி கமலம். கல்யாணம், சீமந்தம் என்று யார் வீட்டில் அழைத்தாலும் முதலில் போய் நிற்கும் கமலம், இவ்வாறு கேட்டது வேதராமனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

"ஒரு பரிசாரகனின் சஷ்டியப்த பூர்த்திக்குப் போவதா என்று யோசிக்கிறயா?" என்று கேட்டார் வேதராமன்.

"அதில்லே... போனால் சாப்பிடச் சொல்லிக் கட்டாயப்படுத்துவார்...."

"சாப்பிட்டுவிட்டு வருவோம்!"

"பாவம், அவரே ஏழை!... இரண்டு பேர் சாப்பிடணுமான்னு யோசிக்கிறேன்..."

"கமலம்! இருபத்தைந்து ரூபாய் ஓதியிடப் போகிறேன். நாம ரெண்டு பேர் சாப்பிடுவதால் ஒன்றும் அதிகம் செலவாகிவிடாது. உண்மையில் மனுஷன் ரொம்பச் சந்தோஷப்படுவார்!" என்றார் வேதராமன். கமலம் மேற்கொண்டு எதுவும் கூறாமல் கிளம்பினாள்.

சூடவாசல் கோவிந்து ஒரு சமையற்காரர். கல்யாண காலங்களில் அவருக்கு ஏகக் கிராக்கியிருக்கும். அவருடைய சுவையான சமையலுக்காக மட்டும் அவரை எல்லாரும் தங்கள் வீட்டு விசேஷங்களுக்கு ஏற்பாடு செய்வார்கள் என்றில்லை. முக்கியமாக அவருடைய குணம், பொருள்களை வீணாக்காமல் சிக்கனமாகக் கையாண்டு ஒரு நிறைவைக் காட்டும் பாங்கு எல்லாம் அவருக்கு ஒரு நன்மதிப்பைத் தேடிக் கொடுத்தன. முகூர்த்தங்கள் இல்லாத காலங்களில் யார் வீட்டில் என்ன பட்சணங்கள் செய்ய வேண்டுமென்றாலும் போய்ச் செய்து கொடுப்பார். கூலி எதுவும் பேசமாட்டார். கொடுத்ததைச் சிரித்த முகத்துடன் வாங்கிக் கொள்வார்.

கோவிந்துவுக்கு இரண்டு பிள்ளைகள். ஒருவன் லாரி ஓட்டிக் கொண்டிருந்தான். இன்னொருவன் வேத அத்யயனம் செய்தவன். பிரபல கனபாடிகள் ஒருவரிடம் பல்லாண்டு காலம் குருகுலவாசம் செய்து முறைப்படி வேதங்கள், உபநிஷத்துக்கள் எல்லாம் பயின்றவன். வயிற்றுக்காக 'வைதிகம்' செய்து கொண்டிருந்தான்!

பிள்ளைகள் இருவருமாகச் சேர்ந்து கடன் வாங்கி அப்பாவின் ஆயுள் விருத்திக்காகச் சஷ்டியப்த பூர்த்தியைக் கொண்டாடினார்கள்.

வேதராமனும் கமலமும் இவ்வளவு விமரிசையாக நடைபெறும் என்று எதிர்பார்க்கவில்லை. பிள்ளைகள் இருவரும் தங்கள் சக்திக்கு மீறியே செலவழித்திருந்தார்கள்.



சாப்பிட்டுவிட்டு வீடு திரும்புகையில் "மனுஷன் நிறையச் சேர்த்து வைத்திருப்பார் போலிருக்கு!" என்றாள் கமலம்.

"கோவிந்துவைச் சொல்றியா?"

"ம்..."

"அதெல்லாம் ஒன்றும் கிடையாது. இரண்டு உத்தமன்களைப் பெற்றிருக்கிறார். அதுதான் பகவான் அவருக்குக் கொடுத்த செல்வங்கள்!..." என்றார் வேதராமன். கமலத்தின் வயிற்றை என்னவோ செய்தது.

நாலு பிள்ளைகளைச் சுமந்த வயிறு. தாயின் குடல் விளக்கம் செய்ய வந்த பிள்ளைகள் நால்வரும் நன்றாகச் சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள். இருந்தாலும் வேதராமனின் நூற்றிருபது ரூபாய் பென்ஷனில்தான் கணவன் மனைவி காலட்சேபம் நடந்து கொண்டிருந்தது.

கோவிந்துவின் சஷ்டியப்த பூர்த்திக்குப் போய்விட்டு, நிறைந்த உள்ளத்துடன் வீடு திரும்பினார் வேதராமன். ஆனால் கமலத்தின் உள்ளத்தில் ஏக்கம்தான் நிரம்பியது.

இன்னும் ஒருசில மாதங்களில் வேதராமனுக்கும் அறுபது வயது நிரம்புகிறது. நல்ல உத்தியோகத்தில் இருந்து நிறையச் சம்பாதித்தார். நான்கு பிள்ளைகளைப் பெற்று ஒரு குறைவில்லாமல் வளர்த்தார்.



அரிச்சுவடியிலிருந்து கல்லூரிப் படிப்பு முடியும் வரை ஒவ்வொரு பிள்ளைக்கும் ட்யூஷன் வாத்தியார் உண்டு. பிள்ளைகள் வண்டியில்தான் பள்ளிக்குச் செல்வார்கள். பையன்களுக்கு உடைகள் வாங்கித் தருவதில் மிகவும் தாராளமாயிருந்ததோடு தினமும் வேத ராமனே சோப்புப் போட்டுத் துவைத்துக் கொடுப்பார். குழந்தைகளின் உடைகளில் துளி அழுக்கு இருக்கக் கூடாது. படிப்பு முடிந்ததும் ஒவ்வொரு பிள்ளையையும் ஒரு நல்ல உத்தியோகத்தில் அமர்த்துவதற்கு அவர் பட்ட பாடு....! நான்கு பிள்ளைகளுக்கும் அவர்கள் ஆசைப் பட்ட பெண்களையே திருமணம் செய்து வைத்தார். ஒவ்வொரு திருமணத்துக்கும் அவருடைய கைப்பணம் இரண்டாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் செலவாயிற்று. ஒரு தந்தை என்ற முறையில் பிள்ளைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை பூரணமாகச் செய்து விட்டார். பையன்களின் சந்தோஷத்துக்காக அவர் சேமித்து வைத்திருந்ததையெல்லாம் செலவழித்துவிட்டு இப்பொழுது தமது பென்ஷன் ஒன்றையே நம்பி வாழ்ந்து கொண்டிருந்தார்.

ஆறு மாதங்களுக்கு ஒரு முறை ஒவ்வொரு பிள்ளையும் தன் மனைவி குழந்தைகளுடன் அப்பா அம்மாவைப் பார்க்க வருவார்கள். பத்து இருபது நாட்கள் தங்குவார்கள். ஆனால் ஒரு பைசா செலவழிக்க மாட்டார்கள்!— அவர்கள் ஊருக்குத் திரும்புகையில் பேரக் குழந்தைகளுக்கு வேதராமன்தான் சட்டையோ பாவாடையோ வாங்கிக் கொடுத்து அனுப்புவார்.

''ஏண்டா! நாலு பசங்களும் நன்னா சம்பாதிக்கிறீர்கள். வயசான காலத்திலே அப்பாவும் அம்மாவும் எதுக்காகத் தனியாக இருக்கணும் என்று ஒருத்தனுக்காவது தோணல்லியே? 'என்னுடன் வந்து கொஞ்ச நாளாவது தங்கியிருங்கள்' என்று ஒரு பயலாவது சொல்ல மாட்டேங்கிறீங்களே? சரி, அது வேண்டாம்; ஆளுக்கு மாசம் ஒரு பத்து ரூபா அனுப்பி வைக்கக் கூடாது? உங்கப்பா உங்களிடம் காலணா எதிர் பார்க்கல்லே... ஆனா உங்களிடமிருந்து ஒரு பைசா வந்தாலும் ஒரு லட்சம் வந்ததைப் போல் 'பிள்ளைகள் அனுப்பியிருக்கிறார்கள்' என்று மகிழ்ந்து போவாரே! உங்களையெல்லாம் எப்படி வளர்த்தார் என்று கொஞ்சம் எண்ணிப் பாருங்கடா!...'' என்று ஒவ்வொரு முறையும் பிள்ளைகள்

வந்து போகையில் அங்கலாய்த்துக் கொள்வாள் கமலம்.

''அப்பா ஏதாவது வருத்தப்பட்டுக்கொண்டாரா அம்மா?''

''அவர் வாயைத் திறந்து ஒரு குறை சொன்னது கிடையாது. க்ஷேம சமாசாரத்துக்கு ஒரு கடுதாசி கூடப் போட மாட்டேங்கறாங்களே என்று மட்டும் அடிக்கடி சொல்வார்....''

''அம்மா! இனிமே மாசம் தவறாமல் ஐம்பது ரூபாய் அனுப்பி வைக்கிறேன்'' என்று கூறிவிட்டுப் போவார்கள். அதன் பிறகு அடுத்த முறை வரும்பொழுதுதான், ''அனுப்பணும்னுதாம்மா நினைச்சேன். ஆனா ஒவ்வொரு மாதமும் எதிர்பாராத செலவு ஏதாவது வந்து விடுகிறது!'' என்று சமாதானம் சொல்லுவார்கள்.

''தெரியுமே! ஒருத்தன் மச்சினி கல்யாணத்தைச் செய்வதிலும், ஒருத்தன் மைத்துனனை வீட்டோடு வைத்துக் கொண்டு கல்லூரியில் படிக்க வைப்பதிலும் இன்னொருத்தன் மாமனார் மாமியாரைக் காசி யாத்திரைக்கு அழைத்துச் சென்றதிலும் நிறையச் செலவழித்திருக்கிறீர்கள் என்று தெரியும்!'' என்று அழுத்தலாகக் கூறுவாள் கமலம்.

இப்பொழுது கோவிந்துவின் சஷ்டியப்த பூர்த்திக்குச் சென்று வந்ததிலிருந்து அவள் மனம் ஏங்கத் தொடங்கியது. தன் கணவரின் சஷ்டியப்த பூர்த்தி சிறப்பாக நடந்து தன் கழுத்தில் திரும்பவும் திருமாங்கல்யம் ஏறுமா என்ற ஆசை அவளை அரிக்கத் தொடங்கியது. வைதிகம் பார்க்கும் ஒரு பிள்ளையும் லாரி ஓட்டிக் கொண்டிருக்கும் ஒரு பிள்ளையுமாகச் சேர்ந்து தங்கள் தந்தையைக் கௌரவித்தது போல் தங்கள் பிள்ளைகள் செய்வார்களா?

கமலத்திடமிருந்து ஏக்கப் பெருமூச்சுதான் வெளிவந்தது. 'சவரணை இல்லாத பிள்ளைகள்' என்று அவள் உதடுகள் அடிக்கடி முணுமுணுத்தன.

தன் உள்ளத்தில் தோன்றியுள்ள இந்தக் குறையும் ஆசையும் ஒருவேளை அவர் மனத்திலும் தோன்றியிருக்குமோ? தாம் பெற்ற பிள்ளைகள் அன்போ, பாசமோ இல்லாமல் இருக்கிறார்களே என்று அந்தரங்கத்தில் வேதனைப்பட்டுக் கொண்டிருப்பாரோ!

பிள்ளைகளுக்கு அவருக்குத் தெரியாமல் கடிதம் எழுதி அப்பாவின் சஷ்டியப்த பூர்த்தியைச் சிறப்பாகச் செய்ய வேண்டுமென்று யோசனை கூறலாமா என எண்ணினாள். ஆனால் எண்ணத்தைச் செயலாக்கத் துணிவு வரவில்லை. கடிதம் எழுதியும் அவர்கள் ஏதாவது சாக்குச் சொல்லித் தட்டிக் கழித்துவிட்டால் இன்னும் அதிக அளவில் மனம் வேதனைப்படுமே என்று எழுதவில்லை!

குடவாசல் கோவிந்துவின் வீட்டுக்குப் போய் வந்து பதினைந்து நாட்கள் ஓடிவிட்டன. கமலம் ஒன்றும் புரியாமல் குழம்பிக் கொண்டிருந்தாள். ''என்ன கமலம், ஒரு மாதிரியா இருக்கே?'' என்று இரண்டு மூன்று முறை வேதராமன் கூடக் கேட்டு விட்டார். ''எப்பொழுதும் போலத்தானே இருக்கேன்'' என்று மழுப்பி விட்டு நழுவி விடுவாள். எதையோ மனத்தில் வைத்துக் குமைந்து கொண்டிருக்கிறாள் என்பதை மட்டும் வேதராமன் புரிந்து கொண்டார்.

இந்தச் சமயத்தில் கமலத்தின் தம்பி வெங்கடேசன் கிராமத்திலிருந்து வந்திருந்தார்.

''வெங்கிட்டு! அந்த நிலத்தை இப்பொழுது விற்றால் என்ன விலைக்குப் போகும்?'' என்று கேட்டாள். கமலத்துக்கு அவள் தாயார் கொடுத்த நிலம் கொஞ்சம் இருந்தது. ஐந்தாறு வருஷங்களுக்கு முன்பு அந்த நிலத்துக்கு நல்ல கிராக்கி இருப்பதாகவும் விற்கும் உத்தேசம் உண்டா என்றும் கேட்டிருந்தார் வெங்கடேசன்.

''அது மூன்று தலைமுறைகளாக நமக்குச் சாப்பாடு போடும் நிலம் வெங்கிட்டு. அம்மா ஆசையா எனக்குக் கொடுத்தது. அதை எதற்காக விற்கணும்?'' என்று அப்பொழுது பதிலளித்தவள் இப்பொழுது அதைப் பற்றிக் கேட்கவும் வெங்கடேசன் ஒரு கணம் திகைத்தார். திடீரென்று நிலத்தை விற்க வேண்டிய அவசியம் என்ன என்று கேட்க நினைத்தவர், ''நிலத்தைக் கொடுத்துடறியா அக்கா?'' என்றார்.

''இரையாதே! அத்திம்பேர் காதிலே விழப் போறது!'' என்று கூறிவிட்டு எங்கிருந்தாவது தன் கணவர் பார்க்கிறாரா வென்று சுற்றிலும் பார்த்தாள். பிறகு மெதுவான குரலில், ''வெங்கிட்டு! அதைச் சீக்கிரமா விற்க முடியுமா?'' என்றாள். வெங்கிட்டு பதில் சொல்வதற்குள் ''அதை விற்கும் விஷயம் அத்திம்பேருக்குத் தெரியக் கூடாது!'' என்றும் எச்சரித்தாள்.

''அவசரத்தில் விற்பதானால் குறைந்த விலைக்குக் கேட்பார்களே அக்கா!... எதற்கும் ஊருக்குப் போய்ப் பத்து நாள் கழிச்சு எழுதறேனே!''

''எழுதாதே. கடிதத்தை அவர் பார்த்து விடப் போகிறார். நீயே நேரில் ஒரு நடை வந்து சொல்லு!''

''சரி அக்கா!'' என்று கூறிவிட்டு ஊருக்குப் போன வெங்கிட்டு நான்கு தினங்களுக்கெல்லாம் திரும்ப வந்து ஆறாயிரம் ரூபாய்க்கு யாரோ கேட்பதாகவும் அந்த அவசரத்தில் அதற்கு மேல் விற்க முடியாதென்றும் கூறினார். முன்பு இதே நிலத்துக்குப் பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் கேட்பதாகச் சொல்லியிருந்தார்.

கமலம் சிறிது நேரம் யோசித்தாள். முப்பது வருஷங்களுக்கு முன்பு அவள் கணவருக்கு அவசரமாக சில ஆயிரங்கள் தேவைப்பட்டன. ''கமலம்! உன் நிலத்தை அடமானம் வைத்துப் பணம் வாங்கலாமா?'' என்று மிகவும் பாத்தியதையோடு கேட்டார் வேதராமன். கமலம் அதற்குச் சம்மதிக்கவில்லை. தன் தாயார் தனக்கு அன்புடன் கொடுத்த நிலத்தை அடமானம் வைப்பதோ விற்பதோ பாபம் என்கிற மாதிரி பதில் கூறினாள். வேதராமன் மேற்கொண்டு வற்புறுத்தவில்லை.

மறு வாரத்தில் ஒரு நாளைக் குறிப்பிட்டு அன்றைய தினம் நிலத்தை விற்பதற்கான ரிஜிஸ்டிரேஷனுக்கு ஏற்பாடு செய்வதாகவும் கமலத்தை முதல் நாளே கிராமத்துக்கு வந்து விடுமாறும் கூறிப் போனார் வெங்கடேசன்.



ஃப்ரெஸ்காவை நேசியுங்கள்
Beauty Talc
fresca
புத்துணர்ச்சியூட்டும்
சுகந்தம் கொண்ட
ஃப்ரெஸ்கா பியூடி
டால்க் வெண்பனியைப்
போன்ற அழகுமெருகை
உங்களுக்குத் தருகிறது.
விசே மாட்-ஃபினிஷ்
கொண்ட ஃப்ரெஸ்கா
உங்கள் வதனப்
பொலிவைச் சோபிக்கச்
செய்கிறது.
மென்மையான,
நறுமணம் கமழும்
ஃப்ரெஸ்கா உங்களை
துடிப்புமிக்க புத்துணர்ச்
சியுடன் திகழச்
செய்கிறது. எனவே,
ஃப்ரெஸ்காவை
நேசியுங்கள்
இரண்டு அளவு-
களில்
கிடைக்கிறது.
கோத்ரெஜ்
அளிக்கும்
ஃப்ரெஸ்கா
பியூடி டால்க்
ஃப்ரெஸ்கா என்றாலே புத்துணர்ச்சிதான்!
Interpub/GSF/8/72 TM

காலஞ்சென்ற திரு ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களும் பேராசிரியர் திரு சீநிவாசராகவன் அவர்களும் ஒரு சொற்பொழிவை முன்னிட்டு இலங்கை சென்றிருந்தார்கள். திரு சேதுப்பிள்ளை பேசினார்.

தேன் மழையை அனுபவித்த சபையோர் முன்னிலையில் பின்னர் சீநிவாசராகவன் எழுந்து நின்றார். "அன்பர்களே! தெள்ளிய செந்தமிழைக் கொண்டு திருவாளர் பிள்ளை அவர்கள் இலங்கைக்கும் எங்கள் தமிழ் நாட்டிற்கும் சேது அமைத்து விட்டார்கள். இதோ இராகவன் வந்து நிற்கிறேன்" என்று சொன்னார்!

அனுப்பியவர்: சோ. பானுமதி
ஆதாரம்: 'சுவை நானூறு'



---

அன்றைய தினமே தன் கணவரிடம் ஊருக்குப் போவதைப் பற்றி மெள்ளப் பிரஸ்தாபித்தாள் கமலம்.

"ஒரு வாரம் நான் ஊருக்குப் போய் விட்டு வரலாம்னு இருக்கேன்..." என்று ஆரம்பித்தாள்.

"எந்த ஊருக்கு?"

"கிராமத்துக்குப் போய் வெங்கிட்டு குழந்தைகளையும் பார்த்துவிட்டு அப்படியே நம்ம பசங்களையும்..."

"இப்ப என்ன திடீர்னு?"

"திடீர்னு ஒண்ணுமில்லே. வெங்கிட்டு ரொம்ப நாளாச் சொல்லிண்டிருக்கான்... 'ஒரு நாலு நாளைக்கு ஊருக்கு வரக்கூடாதா, அக்கா?' என்கிறான்..."

"உன்னை மட்டும்தான் கூப்பிட்டானா?"

"உங்களையும் அழைச்சுண்டுதான் வரச் சொல்றான். ஆனா நீங்கதான் எங்கும் கிளம்ப மாட்டீர்களே!"

வேதராமன் சில நிமிஷங்கள் மௌனமாயிருந்தார். பிறகு, "அதுசரி, அப்படியே நம்ம பசங்களையும் என்றாயே? நம்ம பசங்கள் மூலைக்கு ஒருத்தனாக இருக்கிறான்களே? ஒருத்தன் மதுரை, ஒருத்தன் சேலம், இன்னொருத்தன் குண்டக்கல். ஒருத்தன் பம்பாய்... இவ்வளவு இடங்களுக்குமா போகப் போகிறாய்?" என்று கேட்டார்.

சட்டென்று பதில் கூற முடியாமல் கமலம் தயங்கினாள்.

"இவ்வளவு இடங்களுக்கும் உன்னால் தனியாகப் போய்விட்டு வர முடியுமா?" என்று அடுத்த கேள்வியைப் போட்டார். இதுவரை எங்கும் கமலம் தனியாகப் போய் வந்ததில்லை. ஏதோ தீர்மானித்து விட்டாளே தவிர இப்பொழுது நினைத்துப் பார்க்கையில் ஒரே பிரமிப்பாயிருந்தது.

"நீ இல்லேன்னா ஒரு வாரம், பத்து நாட்களுக்கு என் பாடு ரொம்பத் திண்டாட்டமா போயிடுமே...?" என்றார். இதைக் கேட்டதும் கமலம் பூரித்துப் புளகாங்கிதமடைந்து போனாள். இது கமலத்துக்கே தெரியும். அவள் இல்லாமல் அவரால் ஒரு நாள் கூடச் சமாளிக்க முடியாது. காலை ஐந்து மணிக்குப் பல் தேய்க்க ஜலம் எடுத்துக் கொடுப்பதிலிருந்து ஒவ்வொரு சிறு விஷயத்துக்கும் கமலத்தைத் தான் அழைப்பார். "கமலம்!" என்று அவர் கூப்பிட்டால் போதும். நேரத்துக்குத் தகுந்தாற்போல் இன்ன காரணத்துக்காகத்தான் அழைத்திருப்பார் என்று தயாராகக் காத்திருப்பாள். இப்பொழுது தான் ஊருக்குப் போய்விட்டால் அவரை யார் கவனித்துக் கொள்வார்கள் என்ற கவலை பெரிய பிரச்னையாகத் தோன்றியது. இரண்டொரு தினங்கள் இது விஷயமாகக் குழம்பிக் கொண்டிருந்தாள் கமலம். அப்பொழுது வேதராமனின் ஒன்று விட்ட சகோதரி ஒருத்தி அபூர்வமாக வந்து நின்றாள். அவளைப் பதினைந்து தினங்கள் இருக்குமாறு வேண்டிக் கொண்டு கமலம் பிரயாணத்தைத் தொடங்கினாள்.

முதலில் கிராமத்துக்குச் சென்று நிலத்தை விற்பதில் முனைந்தாள்.

"எனக்கு ஒரு யோசனை தோணறது அக்கா..." என்று தயங்கினாற்போல் சொன்னார் வெங்கடேசன். என்னவென்று கேட்கும் பாவனையில் தம்பியைப் பார்த்தாள் கமலம்.

"என் கைவசம் கொஞ்சம் பணம் இருக்கிறது. அங்கே இங்கே கொஞ்சம் வாங்கிக் கொள்ளலாம். உனக்கு ஆட்சேபனை இல்லேன்னா எனக்கே கிரயம் பண்ணிக்கொடேன்" என்றார். ஆரம்பத்திலிருந்தே வெங்கடேசன் இந்த எண்ணத்தில் இருந்திருக்கிறார் என்பதையும் நொடியில் புரிந்து கொண்டாள், கமலம். உடன்பிறந்தவனே தன்னை ஏமாற்றப் பார்க்கிறானே என்று ஒரு கணம் தோன்றியது. ஆனால் மறு கணமே 'அம்மாவின் நிலம்தானே இது? யாருக்கோ போவதைவிட அவன்தான் அனுபவிக்கட்டுமே!' என்ற எண்ணம் ஒரு திருப்தியை அளித்தது.

"இதில் எனக்கென்ன ஆட்சேபனை வெங்கிட்டு? வெளியில் போகாமல் நம் குடும்பச் சொத்து நம்மிடமே இருப்பதில் சந்தோஷம் தான்" என்றாள்.

இரண்டு தினங்களுக்குள் நிலம் வெங்கடேசனின் பெயருக்கு மாறியது.

பணத்தைப் பெற்றுக் கொண்டதும் ஒவ்வொரு பிள்ளையையும் பார்க்கக் கிளம்பினாள் கமலம். ஒவ்வொரு பிள்ளையின் வீட்டிலும் இரண்டு நாட்கள்தான் தங்கினாள். பம்பாயிலிருந்த பிள்ளையின் வீட்டுக்கு மட்டும் போகவில்லை. பிள்ளைகளுக்கு அம்மா வந்ததில் அளவு கடந்த மகிழ்ச்சி. "அப்பா வரல்லியாம்மா?" என்றார்கள். "அப்பா விஷயமாத்தான்டா நான் வந்திருக்கேன்!" என்றாள்.

"என்னம்மா விஷயம்?"

"அடுத்த மாதம் அப்பாவுக்கு சஷ்டியப்த பூர்த்தி வருகிறது. நான்கு பிள்ளைகள் இருக்கிறீர்கள். படாத பாடுபட்டு உங்களையெல்லாம் ஆளாக்கி நல்ல நிலையில் வைத்திருக்கிறார். பிள்ளைகள் விசுவாசமில்லாதவர்களாக இருக்கிறார்கள் என்று அவர் நினைத்துவிடாதபடி அவருடைய சஷ்டியப்த பூர்த்தியை விமரிசையாகக் கொண்டாட வேண்டும்... பணத்துக்காகக் கவலைப்படாதீர்கள். ஒரு வாரம் முன்னால் நீங்கள் வந்து சேர்ந்தால் போதும். மற்றதையெல்லாம் நான் பார்த்துக்கொள்

கிறேன். ஆனால் நீங்கள் நாலு பேரும் சேர்ந்து செலவழித்ததாக இருக்க வேண்டும்'' என்று கூறிவிட்டுப் பிரயாணச் செலவுக்காக ஒவ்வொரு பிள்ளையிடமும் பணம் கொடுத்துவிட்டு ஊர் திரும்பினான். பம்பாயிலிருந்த பிள்ளைக்கு மட்டும் கடிதம் எழுதிப் பணத்தையும் அனுப்பி வைத்தான்.

* * *

ஒரு வாரத்துக்கு முன்பாகவே நான்கு பிள்ளைகளும் குடும்பத்துடன் வந்துவிட்டனர். நான்கு பிள்ளைகளும் ஏககாலத்தில் இமர் விஜயம் செய்தது வேதராமனுக்கு வியப்பாயிருந்தது.

''உங்கள் சஷ்டியப்த பூர்த்தியைக் கொண்டாட எல்லாரும் வந்திருக்கிறார்கள்!'' என்றாள் கமலம். வேதராமன் சிறிது நேரம் யோசித்தார். ஒரு மாதத்துக்கு முன்பு கமலம் பிள்ளைகளைப் பார்க்கப் போனதன் காரணம் இதுதானா? தாயின் வற்புறுத்தல் காரணமாகத்தான் பிள்ளைகள் இதைச்செய்ய முன்வந்துள்ளார்கள் என்பதைப் புரிந்து கொண்டார் வேதராமன்.

நாளுக்கு நாள் வீடு கல்யாணக் கோலம் பூண்டது. பிள்ளைகள் வந்த நாளிலிருந்தே வீட்டில் குடவாசல் கோவிந்துவின் சமையல்தான்.

சஷ்டியப்த பூர்த்திக்கு முதல் நாள் வெங்கடேசன் வந்தார். எப்பொழுதுமே அவருக்கு வேதராமனிடம் ஒரு மதிப்பும் மரியாதையும் உண்டு. ''என்ன வெங்கிட்டு, இந்த வருஷம் விளைச்சல் எல்லாம் எப்படி?'' என்றார் வேதராமன் யதார்த்தமாக. வெங்கடேசனால் சட்டென்று பதில் கூற முடியவில்லை. ஒரு நிமிஷம் தயங்கினார். பிறகு, ''என்னை மன்னிக்கணும். அக்கா நிலத்தை விற்று விட்டாள்!'' என்றார்.

''விற்றுவிட்டாளா?''

''ஆமாம். வெளியில் கேட்ட விலைக்கு நானே கிரயம் செய்து கொண்டேன்...''

''என்ன விலைக்கோ?''

''ஆறு ரூபாய்!''

வேதராமன் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை. சிறிது நேரம் வேதனையுடன் உட்கார்ந்திருந்தார். மற்றவர்களெல்லாம் மறுநாள் விசேஷத்துக்காக ஓடியாடிக் கொண்டிருந்தனர். எல்லோரையும் விடக் கமலம் சுறுசுறுப்பாகவும் மகிழ்ச்சியாகவும் காணப்பட்டாள்.

''கமலம்!'' என்றழைத்தார் வேதராமன். கமலம் வந்து நின்றதும் ''பிள்ளைகளைக் கூப்பிடு!'' என்றார்.

''எந்தப் பிள்ளையைக் கூப்பிடணும்?''

''நாலு பிள்ளைகளையும் இப்படி வரச் சொல்!''

சில நிமிஷங்களுக்கெல்லாம் நாலு பிள்ளைகளும் வந்து நின்றனர்.

''என்னப்பா விஷயம்?'' என்று கேட்டான் மூத்தவன்.

''உங்கள் அம்மா எனக்கு வாழ்க்கைப்பட்டு நாற்பது வருஷங்கள் ஆகிறது. பதினைந்து வயதுச் சிறுமியாக என் வாழ்க்கையில் நுழைந்தாள். அன்று முதல் இன்று வரை என் சுகம் ஒன்றிற்காகவே பாடுபட்டு வந்திருக்கிறாள். புராணங்களில்தான் பதி சேவை என்பதைப் பற்றி எல்லோரும் விரிவாகப் படித்திருப்பார்கள். ஆனால் உங்களைப் பெற்றவள் ஒரு புராண காலத்துப் பெண்ணைப் போல எனக்குச் சேவை செய்வதையே லட்சியமாகக் கொண்டு வாழ்ந்து வருகிறாள். அப்படிப்பட்ட ஒரு மனைவியை எனக்குப் பிறகு பட்டினி போட நான் விரும்பவில்லை. அதனால்தான் சொல்லுகிறேன், இந்த சஷ்டியப்த பூர்த்தியை நான் செய்து கொள்ளப் போவதில்லை. அவளுக்காக நான் எதையும் விட்டுவைக்கவில்லை. அவளுடைய நிலம் கொஞ்சம் இருந்தது. நான் போய்விட்டாலும் அது அவளுக்குச் சோறு போடும் என்று நம்பிக்கொண்டிருந்தேன். இப்பொழுது அதையும் விற்றுவிட்டாள்! நான் பெற்ற பிள்ளைகளைப் பற்றி நான் பெருமையாக எண்ண வேண்டுமென்று இந்தக் கல்யாணத்தை நீங்கள் எல்லோரும் சேர்ந்து செய்வதைப் போல் பாசாங்கு செய்கிறாள்! இந்த நாற்பது வருஷ தாம்பத்தியத்தில் எனக்குத் தெரியாமல், என்னைக் கேட்காமல் அவள் செய்த காரியம் இந்த நிலத்தை விற்றதுதான்! ஒரு சமயம் அந்த நிலத்தின் மீது கொஞ்சம் கடன் வாங்கலாமா என்று நான் கேட்டதற்குக்கூட அவள் சரியாகப் பதில் சொல்லவில்லை. நானும் வற்புறுத்தாமல் விட்டு விட்டேன். அந்த நிலத்தை இப்பொழுது உங்கள் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று விற்றிருக்கிறாள்! நாளைக்கே நான் கண்ணை மூடினால் அவள் கதி என்ன? அவளை நடுச்சந்தியில் நிறுத்திவிட்டு நான் இந்த சஷ்டியப்த பூர்த்தியைக் கொண்டாட வேண்டுமா?... மாட்டேன்! மாட்டேன்!'' என்று கூறி முடித்தார் வேதராமன். அவர் குரலில் வருத்தமும் உறுதியும் தொனித்தன. கமலத்தின் கண்கள் கலங்கி விட்டன. துக்கம் தொண்டையை அடைத்தது.

''உங்களுக்குப் பிறகு நான் இருக்கணுமா?'' என்றாள் அழுது கொண்டே.

''ஒரு வேளை நான் முந்திக் கொண்டேன்?''

''இந்த நல்ல நாளும் கிழமையுமா இது என்ன பேச்சு?''

''நாலு பிள்ளைகளோடு ஐந்தாவதாக ஒரு பெண்ணும் பிறந்திருந்தால் உன்னைப் பற்றிக் கவலைப்பட மாட்டேன் கமலம். பெண்கள் பெற்றவளை நிர்க்கதியாக விடமாட்டார்கள்!'' என்று கூறுகையில் வேதராமனின் குரல் தழுதழுத்தது.

''ஏண்டா நிலைமாதிரி நிற்கிறீர்கள்? 'அம்மாவை நாங்கள் விட்டு விடமாட்டோம்' என்று சொல்லுங்களேண்டா!...'' என்று அழுதாள் கமலம்.

நான்கு பிள்ளைகளும் ஏக காலத்தில் தாயாரைக் காப்பாற்றுவதாகப் பிரமாணம் செய்தனர்.

''இப்பொழுதே நீங்கள் இருவரும் என்னுடன் வந்துவிடுங்கள் அப்பா!...'' என்றான் ஒருவன். அவனைத் தொடர்ந்து மற்றவர்களும் கெஞ்சினர். வேதராமனின் முகம் மலர்ந்தது. மனைவியைப் பார்த்தார். அந்தத் தாயின் உள்ளக் குதூகலம் முகத்தில் தவழ்ந்தது. ''என் பிள்ளைகளை ஒன்றும் குறைவாக எண்ணிவிடவேண்டாம்!'' என்பதைப் போல் கணவரைப் பார்த்தாள்.

மறுநாள் வேதராமனின் சஷ்டியப்தபூர்த்தி வைபோகமாக நடந்தேறியது. செலவுகளையெல்லாம் பிள்ளைகளே போட்டி போட்டுக் கொண்டு ஏற்றார்கள்.

அநுபூதிமயமான அறிவுச் சிகரத்தில் பிறந்த
ஓர் அற்புத கணித சூத்திரம், இதோ!



# த்வைதம் ÷ பௌத்தம் = அத்வைதம்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் ஸ்ரீ

"பிரம்மம் பூரணமானது : உலகமும் பூரணமானது: பிரம்மம் என்ற பூரண வஸ்துவில் உலகம் என்ற பூரணம் உதயமாயிற்று: இந்த உலகம் என்ற பூரணத்தைப் பிரம்ம பூரணத்திலிருந்து எடுத்துவிட்ட போதிலும் பிரம்மம் பூரணமாகவே இருக்கிறது'' என்று ஓர் உபநிஷத மந்திரம் சொல்கிறது. பூரணத்திலிருந்து பூரணத்தைக் கழித்த பின்னும் எப்படிப் பூரணம் மிஞ்ச முடியும் என்ற கேள்வி எழுகிறது.

இந்த மந்திரத்தின் வாஸ்தவமான தாத்பரியம் என்ன? உலகம் உண்மையில் பிரம்மத்திலிருந்து வேறாகப் பிரிந்து வெளியே வந்துவிட்ட வஸ்து அல்ல. பிரம்மமேதான் உலகமாகத் தோன்றுகிறது. பிரம்மம் வேறேதோ பொருளைக் கொண்டு உலகை சிருஷ்டிக்க (create) வில்லை. பிரம்மமே உலகமாக மாறிவிடவும் (transform) இல்லை. பிரம்மம் உலகமாகத் தோன்றுகிறது (appear). அவ்வளவுதான். இருட்டிலே ஒரு மாலையைப் பார்த்து விட்டுப் பாம்பு என்று நினைக்கிறோம். இப்போது மாலையே பாம்பாகத் தோன்றுகிறது. மாலை பாம்பாக மாறவில்லை. மாலை பாம்பைச் சிருஷ்டிக்கவும் இல்லை. பாம்பாக எண்ணிய போது அது முற்றிலும் (பூரணமாக) பாம்பாகத்தான் தெரிகிறது. மாலை என்று தெரிந்து கொண்டால் பூரணமாக மாலையாகவே இருக்கிறது. மாலை என்ற பூரணத்தில் பாம்பு என்ற பூரணம் உதயமானாற் போல், பிரம்ம பூரணத்தில் உலக பூரணம் தோன்றுகிறது. மாலையில் பாம்பு என்ற தோற்றம் ஏற்பட்டதால் அப்போது அதன் எடை கூடிற்றா என்ன? இல்லை. பாம்பு என்ற தோற்றம் அழிந்து, இது மாலைதான் என்ற தெளிவு ஏற்பட்டபோது மாலையின் எடை குறைந்ததா? அதுவும் இல்லை. அப்படியே பிரம்மத்தில் உலகத்தைக் கூட்டினாலும் குறைத்தாலும் அது மாறாமல் பூரணமாகவே இருக்கிறது. மாலையில் தோன்றும் மாயப் பாம்பாக, "அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவாக இருப்பதே உலகம்" என்கிறார் கம்பர்.

மாலை ஏன் பாம்பாகத் தெரிந்தது? இருட்டினால் அப்படித் தெரிந்தது. மாயை என்கிற இருட்டில்தான் பிரம்மம் உலகமாகத் தெரிகிறது. 'மாயா' என்றால் "எது இல்லையோ அது" என்று அர்த்தம். இல்லாத வஸ்துவான மாயைதான் இருக்கிற ஒரே வஸ்துவான பிரம்மத்தைப் பலவான பிரபஞ்சமாகப் பெருக்கிக் காட்டுகிறது. இல்லாத வஸ்துவால் இப்படிச் செய்யமுடியுமா என்று கேட்பீர்கள். கணித சாஸ்திரப்படி பதில் சொல்கிறேன்.

பிரம்மத்தின் விஷயத்தில் கூட்டல், கழித்தல் கணித நியதி மேலே பார்த்தோம். இப்



போது பெருக்கல், வகுத்தல் கணக்கு ஒன்றும் சொல்கிறேன்.

ஓர் எண்ணை இன்னோர் எண்ணால் வகுக்கிறோம். வகுக்கிற எண் சிறியதாகச் சிறியதாக ஈவு அதிகமாகிக் கொண்டே போகும். பதினாறைப் பதினாறால் வகுத்தால் ஈவு ஒன்று; எட்டால் வகுத்தால் ஈவு இரண்டு; நாலால் வகுத்தால் ஈவு நாலு; ஒன்றால் வகுத்தால் ஈவு பதினாறு. வகுக்கிற எண் சிறியதானால் ஈவு அதிகமாகிறது. வகுக்கிற எண் மிக மிகச் சிறியதாகி பூஜ்யமே (0) ஆகிவிட்டால்? அப்போது ஈவு மிக மிகப் பெரியதான, எண்ணிக்கையிலேயே அடங்காத அனந்தமாகிறது (infinity). பூஜ்யத்தால் எந்த எண்ணை வகுத்தாலும் கிடைக்கிற ஈவு அனந்தம்.

*1/0 = அனந்தம்; 2/0 = அனந்தம்; 3/0 = அனந்தம்;* கோடியைப் பூஜ்யத்தால் வகுத்தாலும் இதே அனந்தம்தான் ஈவு.

ஈவை வகுக்கிற எண்ணால் பெருக்கினால் வகுக்கப்படும் எண் கிடைக்க வேண்டும் என்பது கணித நியதி. $16 \div 2 = 8$; அதாவது $8 \times 2 = 16$. இந்த நியாயப்படி

அனந்தம் × 0 = 1

அனந்தம் × 0 = 2

அனந்தம் × 0 = 3

இப்படி முடிவே இல்லாமல் போய்க் கொண்டேயிருக்கிறது. ஒரே அனந்தம் பூஜ்யத்தால் தன்னை ஒன்று, இரண்டு, மூன்று, கோடி, பத்துக் கோடி என்று அனந்தமாகப் பெருக்கிக் கொண்டே போகிறது.

இந்த ஒரே அனந்தம்தான் பிரம்மம். இல்லாத வஸ்துவான மாயைதான் பூஜ்யம். பிரம்மம் மாயா சக்தியால் தன்னை எல்லையில்லாத பலவாகத் தோன்றுகிற இந்தப் பிரபஞ்சமாகக் காட்டிக் கொள்கிறது. வகுக்கப்படும் பிரபஞ்சத்துக்கு என்ன எண்ணிக்கை வேண்டுமானாலும் தரலாம். எந்த எண்ணிக்கை தந்தாலும் அதை வகுப்பது பூஜ்யமான மாயையாகையால் மாறாத அனந்தப் பிரம்மம் ஈவு ஆகிறது. பிரபஞ்சம் என்பது இவ்விதம் எல்லையற்றிருப்பதால் அதுவும் அனந்தமாகிறது. முதலில் சொன்ன உபநிஷத மந்திரத்தில் பிரம்மத்தைப் பூரணம் என்று சொன்னபோது, அது **மாறாத அனந்தம்** என்றும், பிரபஞ்சத்தைப் பூரணம் என்றபோது அது **மாறிக்கொண்டேயிருப்பதில் அனந்தம்** என்றும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

மாறிக் கொண்டேயிருக்கிற வஸ்து சத்தியமாக இருக்க முடியாது. ஒன்று, இரண்டு, மூன்று, கோடி, பத்துக் கோடி என்று அதற்கு நாம் மதிப்புத் தந்தாலும் உண்மையில் அது அசத்தியம்தான் — இல்லாத வஸ்துதான் — அதாவது பூஜ்யம்தான். 'எந்த எண்ணைப் பூஜ்யத்தால் பெருக்கினாலும் வருகிற விடை பூஜ்யம்தான்' என்ற கணித நியதியை இங்கே எடுத்துக் கொள்ள வேண்டும். அனந்தம் (பிரம்மம்) × மாயை (0) = 1 ; 2 ; 3... என்றெல்லாம் மேலே உபசாரமாகச் சொன்னாலும் உண்மையில் அனந்தத்தை மாயையால் பெருக்கிக் கிடைக்கிற பிரபஞ்சமும் மாயாமயமான பூஜ்யம்தான் எனலாம்.

அனந்தமாக **இருக்கிற** பிரம்மம் ஒன்றே சத்தியம் என்கிறது அத்வைதம்; அனந்தமாகத் **தெரிகிற** பிரபஞ்சமும் சத்தியம் என்கிறது துவைதம்; பிரம்மம், பிரபஞ்சம் என்ற பேதமில்லாமல் எல்லாமே சூனியம், மாயை, பூஜ்யம் என்கிறது பௌத்தம். அதாவது,

பிரம்மம் × மாயை (சூன்யம்) = பிரபஞ்சம் என்பதை

அத்வைதம் × பௌத்தம் = துவைதம் என்று சொல்லலாம். அல்லது

துவைதம் ÷ பௌத்தம் = அத்வைதம் எனலாம்.

## தெரணி ஆலயத் திருப்பணி

ஒரு காலத்தில் புகழ் பெற்றிருந்த சில திருக்கோயில்கள் இடைக்காலத்தில் பெருமை மங்கியிருப்பதும், மீண்டும் திருப்பணி நடந்து பழைய மகிமையைப் பெறுவதும் இறைவன் லீலையே. சென்னை ரேணிகுண்டா மார்க்கத்தில் குசஸ்தலி நதிக் கரையில் அமைந்துள்ள தெரணிக் கிராமம் தற்போது பண்டைப் புகழ் மங்கியுள்ளது. அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வைகுண்டநாதப் பெருமாள், ஸ்ரீ ராமானுஜரின் சிஷ்யரும், 74 சிம்மாசனாதிபதிகளில் பதினொன்றுமவருமான ஸ்ரீ நடாதூரம்மாள் ஸ்வாமியால் பிரதிஷ்டை செய்யப்பட்டவர். பல மகான்களும் யதிகளும் இந்தப் பெருமாளை மங்களா சாஸனம் செய்திருக்கின்றனர். இப்படிப்பட்ட கோயில் தற்போது சிதிலமாகியுள்ளது. திருப்பணி வேலைகள் நடந்து வருகின்றன. தெரணி ஆலயம் பழைய பெருமை பெற ஆஸ்திகரின் திரவிய கைங்கரியம் தேவைப்படுகிறது. பொருளுதவி அனுப்ப வேண்டிய விலாசம்: ஸ்ரீ டி. என். சடகோபாசாரியார், தர்மகர்த்தா, வைகுண்டநாதஸ்வாமி தேவஸ்தானம், தெரணி, ஏகாம்பரகுப்பம் தபால், சித்தூர் மாவட்டம், ஆந்திரப் பிரதேசம்.

## 6. கல்யாணம் அவசியமா ?

# அலை ஓசை

அமரர் **கல்கி**

**சா**ஸ்திரியார் மாடி ஏறிச் சென்றதும், காமாட்சி அம்மாள் வார்த்தைகளைப் பொழிந்தாள்: ''சூரியா! இது என்ன இப்படிப்பட்ட காரியம் செய்து விட்டாய்? இந்த வயதில் சந்நியாசமாவது? இவர் ஓயாமல், 'சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போகிறேன்', 'சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போகிறேன்' என்று பயமுறுத்திக் கொண்டிருக்கிறார். ஆனால் வீட்டை விட்டு அசைகிற வழியாகக் காணோம். வயதாக ஆக, பாசபந்தம் அதிகமாகி வருகிறது. மூத்த நாட்டுப் பெண் வேறு வந்து செல்லம் கொஞ்ச ஆரம்பித்திருக்கிறாள். நீ இந்த வயதில் காஷாயம் வாங்கிக் கொண்டாயே ? கொஞ்சம் கூட நன்றாயில்லை. உன்னை எப்படிக் கூப்பிடுவது என்றே எனக்குத் தெரியவில்லை. 'சுவாமிகளே ! வாங்கள் ! போங்கள் !' என்று மரியாதையாகச் சொல்ல வேண்டுமோ, என்னமோ ?'' என்றாள்.

''மாமி! அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். தாராளமாய்ச் 'சூரியா' என்றும் 'வா' 'போ' என்றும் சொல்லுங்கள். உங்களிடம் நிஜத்தைச் சொல்லி விடுகிறேன். ஒரு காரியார்த்தமாக இந்த வேஷம் போட்டுக் கொண்டேன். உண்மையில் நான் சந்நியாசம் வாங்கிக் கொண்டு சாமியார் ஆகிவிடவில்லை'' என்றான் சூரியா.

''இது என்ன கூத்து ? போயும் போயும் எதற்காக இந்த வேஷம் போட்டுக் கொண்டாய்? இந்தக் காலத்துப் பிள்ளைகளின் காரியமே வேடிக்கையாகத்தான் இருக்கிறது. ஒரு வேளை சினிமாவிலே கினிமாவிலே சேர்ந்திருக்கிறாயா, என்ன?''

'' அதெல்லாம் இல்லை, மாமி ! நான் சுயராஜ்ய இயக்கத்தில் சேர்ந்திருக்கிறேன் அல்லவா?''

'' சுயராஜ்யமும் ஆச்சு, மண்ணாங்கட்டியும் ஆச்சு ! இந்தக் காஷாய வேஷத்தைக் கலைத்துவிட்டு மறு காரியம் பார் ! உனக்குக் கல்யாணத்துக்குப் பெண் பார்த்து வைத்திருக்கிறேன். உன்னை இந்தக் கோலத்தில் பார்த்ததும் எனக்குப் பகீர் என்றது.''

'' மாமி ! கல்யாணம் அவ்வளவு அவசியமான காரியமா ? கல்யாணம் செய்து கொண்டவர்கள் எல்லாரும் சந்தோஷமா யிருக்கிறார்களா?'' என்று சூரியா கேட்டான்.

'' எத்தனையோ பேர் கல்யாணம் செய்து கொண்டு பிள்ளையும் குட்டியுமாய்ச் சந்தோஷமாய்த்தான் இருக்கிறார்கள். சில பேருடைய தலையில் எழுத்து — சந்தோஷமாயிருக்க முடிகிறதில்லை. அப்படிப் பார்த்தால் உலகத்திலே யார்தான் எப்போதும் சந்தோஷமா யிருந்தார்கள்? இராமர் சீதையைக் கல்யாணம் செய்து கொண்டு எவ்வளவோ கஷ்டப்பட்டார். அதனால் இராமர் கல்யாணமே செய்து கொண்டிருக்கக் கூடாது என்று சொல்ல முடியுமா ?'' என்றாள் காமாட்சி அம்மாள்.

'' இராமரும் சீதையும் ஒருவருக்கொருவர் எவ்வளவோ பிரியமாயிருந்தார்கள். அதனால் அவர்கள் சந்தோஷமா யிருந்தார்கள். தம்பதிகள் அன்யோன்யமா யிருந்து மற்றவர்களால் எவ்வளவு கஷ்டம் நேர்ந்தாலும் பொறுத்துக் கொள்ளலாம் ; சந்தோஷமாகவும் இருக்கலாம். ஆனால் இந்தக் காலத்துத் தம்பதிகள் அப்படி இல்லையே?'' என்றான் சூரியா.

'' நீ எதைக் குறிப்பிட்டுச் சொல்கிறாய் என்று எனக்குத் தெரிகிறது, சூரியா ! என் பிள்ளையும் நாட்டுப் பெண்ணும் அன்யோன்யமா யில்லை என்றுதானே சொல்கிறாய் ? அது வாஸ்தவந்தான். பெரியவர்கள் சொல்லுகிறதைக் கேட்காமல் தான்தோன்றித்தனமாகக் காரியம் செய்ததினால் வந்த வினை இது. கல்யாணம் நிச்சயம் செய்வது என்றால், ஜாதகம் பார்த்துச் செய்ய வேண்டும் என்று எதற்காகப் பெரியவர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள்? இந்த மாதிரியெல்லாம் ஏடாகூடமாக ஆகக்கூடாது என்றுதான்

நான் அப்போதே அடித்துக் கொண்டேன்: 'எல்லாவற்றுக்கும் ஜாதகம் வாங்கிப் பார்த்து விடலாம்' என்று. நான் சொன்னதை யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. எப்போது பார்த்தாலும் சாஸ்திரம் சம்பிரதாயம் என்று சொல்லிக் கொண்டிருக்கும் இந்தப் பிராமணருக்குக்கூட அப்போது புத்தி எங்கேயோ போய்விட்டது! உன் அத்தங்காள் ஜாதகத்தில் என்ன தோஷம் இருந்ததோ, என்னமோ? உன் தங்கை லலிதாவைப் பார்ப்பதற்காகத்தானே நாங்கள் உங்கள் ஊருக்கு வந்திருந்தோம்? லலிதாவின் ஜாதகமும் ராகவனுடைய ஜாதகமும் பொருந்தி யிருந்தன. அப்படி நடந்திருந்தால் இந்தக் கஷ்டமெல்லாம் வந்திராது!'' என்றாள் காமாட்சி அம்மாள்.

''இப்போது என் அத்தங்கா படுகிற கஷ்டத்தையெல்லாம் என் தங்கை பட்டிருப்பாள்!'' என்றான் சூரியா.

காமாட்சி அம்மாளுக்குக் கோபம் வந்துவிட்டது. ''நன்றாகச் சொன்னாய், சூரியா! உன் அத்தங்காள் பரம சாது. ராகவன்தான் அவளைக் கஷ்டப்படுத்துகிறான் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயாக்கும்! கல்யாணம் ஆன புதிதில் நானும் உன் அத்தங்காளைச் சாது என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தேன். இப்படிப்பட்ட நாட்டுப் பெண் எனக்குக் கிடைத்தாளே என்று சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தேன். போகப் போகத்தான் தெரிந்தது; உன் அத்தங்காள் எப்படிப்பட்ட ராட்சஸி என்று. அவளுக்குச் சீதை என்று பெயர் வைத்தது ரொம்பத் தப்பு. சூர்ப்பணகை, தாடகை என்று பெயர் வைத்திருக்க வேண்டும்!'' என்றாள்.

''சாதுப் பெண்ணாயிருந்தவள் எப்படித் திடீரென்று ராட்சஸியாகி விட்டாள்? அதற்கு ஏதாவது காரணம் இருக்கவேண்டும் அல்லவா?''

''காரணம் என்ன காரணம்? அவளைச் சாதுப் பெண் என்று நாம் எல்லோரும் நினைத்துக் கொண்டிருந்தோமே, அதுதான் தப்பு! உலகத்தில் துஷ்டைகள் எத்



தனையோ பேரை நானும் பார்த்திருக்கிறேன். ஆனால் உன் அத்தங்காளைப் போல் பார்த்ததேயில்லை! ஒவ்வொரு சமயம் எனக்குப் பயமாயிருக்கிறது, சூரியா! ஏதாவது விஷத்தைக் கிஷத்தைக் கலந்து......''

''ஐயையோ! அப்படிச் சொல்லாதீர்கள், அம்மா! எப்பேர்ப்பட்ட ராட்சஸியாக இருந்தாலும் புருஷனுக்கு விஷம் வைத்துக் கொல்லும்படி அவ்வளவு பாதகியாயிருப்பாளா?'' என்று அலறினான் சூரியா.

''மெள்ளப் பேசடா, அப்பா! மெள்ளப் பேசு! புருஷனுக்கு விஷம் வைத்துவிடுவாள் என்று நான் சொல்லவில்லையே! கிராமாந்தரத்துப் பெண்கள் சிலர் புருஷனை வசப்படுத்தி வைத்துக் கொள்வதற்கு என்று எண்ணிக் கொண்டு மருந்து வைத்துவிடுவதுண்டு. அது புருஷனுக்கு யமனாக முடியும். உன் அத்தங்காள் அவ்வளவு அசடு அல்ல; அப்படிச் செய்யவும் மாட்டாள். தான் விஷத்தைக் கலந்து குடித்துவிட்டு ராகவன் பேரில் பழியைப் போட்டுவிடுவாளோ என்றுதான் பயப்படுகிறேன். 'புருஷன் படுத்தும் கொடுமை தாங்காமல் செத்துப் போகிறேன்' என்று எழுதி வைத்துவிட்டுச் செத்தாலும் சாவாள்! அவளுடைய மூர்க்கத்தனத்தை நினைத்தால் சில சமயம் எனக்கு இப்படியெல்லாம் தோன்றுகிறது......''

''மாமி! விஷங் குடித்துச் செத்துப் போக வேண்டும் என்று நினைப்பதற்குச் சீதாவின் மனம் எவ்வளவு வெறுத்துப் போயிருக்க வேண்டும்? அப்படி மனம் வெறுப்பதற்குக் காரணம் இல்லாமலா இருக்கும்? உங்கள் பிள்ளை பேரில் தப்பே இல்லையென்றால், வேறு என்ன காரணம் இருக்க முடியும்?'' என்றான் சூரியா.

இதற்குக் காமாட்சி அம்மாளின் பதில் சொல் மாரியாக வந்தது:

''என் பிள்ளைபேரில் தப்பு இல்லை யென்று யார் சொன்னது? எவ்வளவோ தப்பு உண்டு. உன் தங்கையைப் பார்ப்பதற்காகப் போனவன், இந்த ரதியைத் தெருவிலே பார்த்துவிட்டு மயங்கிப் போய் 'இவளைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்' என்றானே? அது பெரிய தப்புத்தான். ஒரு செப்புக் காசு வரதட்சிணை இல்லாமல் கல்யாணம் செய்து கொண்டதும் தப்புத்தான். குப்பையில் கிடந்தவளைக் கொண்டு போய்க் கோபுரத்தில் வைத்தானே, அதுவும் தப்புத்தான். அந்த நாளில் எவ்வளவோ நான் அடித்துக் கொண்டேன். 'இவ்வளவு இடங் கொடுக்காதே!' என்று; இவன் கேட்கவில்லை. ஆக்ரா எங்கே, சிம்லா எங்கே, காஷ்மீர் எங்கே என்று அழைத்துக் கொண்டு திரிந்தான். என்னைக் காசிக்கு அழைத்துக் கொண்டு போக அவனுக்குச் சாவகாசம் கிடைக்கவில்லை. சீதாவை லண்டனுக்கு அழைத்துக் கொண்டு போகக்கூடத் தயாராயிருந்தான். வைஸராய் வீட்டுப் பார்ட்டிகளுக்கு அழைத்துக் கொண்டு போனான். இங்கிலீஷ் படிக்க வைத்தான். அந்நிய புருஷர்களோடு கைகுலுக்கவும் ஒரே சோபாவில் உட்கார்ந்து பேசவும் மோட்டார் கார் ஓட்டவும் கற்றுக் கொடுத்தான். அப்படியெல்லாம் செய்த தப்புகளின் பலனை இப்போது அநுபவிக்கிறான். அவனுடைய ஜாதகத்தில் அப்படி எழுதியிருந்தது! இன்னொரு புருஷனாயிருந்தால் இப்படிப்பட்ட பெண்டாட்டியை விறகுக் கட்டையால் அடித்துத் துரத்திவிட்டு வேறு கல்யாணம் செய்து கொண்டிருப்பான்..!''

இந்த ரீதியில் காமாட்சி அம்மாளுடன் பேசுவதில் பயனில்லை என்று சூரியா அறிந்து கொண்டான். பேச்சை வேறு பாணியில் ஆரம்பித்தான்.

''மாமி! நான் ஏதோ என் அத்தங்காளுக்குப் பரிந்து பேசுவதாகவும் உங்கள் பிள்ளையைக் குற்றம் சொல்வதாகவும் நீங்கள் எண்ணிக் கொள்ளக் கூடாது. சீதா தாயில்லாப் பெண் என்பது உங்களுக்குத் தெரியும். தகப்பனார் உயிரோடிருக்கிறாரா, இல்லையா என்பது ஒருவருக்கும் தெரியாது. உங்களையும் உங்கள் பிள்ளையையும் தவிர அவளுக்குக் கதி கிடையாது. அடித்து விரட்டினால் குளத்திலே கிணற்றிலே விழுந்து சாக வேண்டியதுதான். சீதாவை உங்கள் பிள்ளைக்குக் கல்யாணம் செய்து கொடுப்பதற்கு நானும் ஒரு வகையில் பொறுப்பாயிருந்தவன். நான் வற்புறுத்திச் சொன்னபடியினாலேதானே என் அப்பா அம்மா இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதித்தார்கள். சீதாவின் தாயாரையும் நான்தான் சம்மதிக்கப் பண்ணினேன். என் அத்தையை உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதல்லவா? வாழ்நாளெல்லாம் கஷ்டப்பட்டவள். 'நான்தான் கஷ்டப்பட்டே காலங் கழித்து விட்டேன். சீதாவாவது நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட்டுச் சௌக்கியமாயிருக்கட்டும்' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தாள். இந்தக் கல்யாணத்தை நடத்தி வைத்ததற்காக என்னை ஆயிரம் தடவை 'மகராஜனாயிரு!' என்று வாழ்த்தினாள். அதையெல்லாம் நினைத்து, இப்போது உங்கள் பிள்ளையும் நாட்டுப் பெண்ணும் இருக்கிற நிலையையும் எண்ணும்போது

**அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!**

**பியர்ஸ் சருமக் களை...கன்னிப் பருவக் களை**




இப்போது அழகுகளின அட்டைப் பெட்டியிலே கிடைக்கிறது
சென்னை நகரிலும், திருவனந்தபுரத்திலும், கோழிக்கோட்டிலும் மட்டுமே.

லிண்டாஸ்-PS. 24 CP-140 TH.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# எண்ணிய வண்ணமே!

ரூபி டஸ்ட் தேயிலையின்
வெற்றிச் சாதனை உங்களைப் போன்ற
மக்களுக்கே உரித்தானது.

ரூபி டஸ்ட் : நிறைந்த ருசி : நல்ல நிறம் :
நொடியில் தயாராகும் பானம்.
வேறெந்தத் தூள் தேயிலையையும் விட
அதிகக் கோப்பைகள் அளிப்பது கூட.




# லிப்டன்
# ரூபி
# டஸ்ட்

தூள் தேயிலைகளில்
ஒப்புயர்வற்ற
மன்னன்





















LRDC-7R/72 TAH

எவ்வளவோ துக்கமாயிருக்கிறது. அதனால் நான் எடுத்துக் கொண்ட முக்கியமான வேலைகள்கூடத் தடைப்பட்டுப் போகின்றன. ஏதாவது முயற்சி பண்ணி உங்கள் பிள்ளையும் சீதாவும் சந்தோஷமாயிருக்கப் பண்ண வேண்டும் என்று எனக்கு ஆசை. அதனாலேதான் உங்களிடம் வந்தேன். சீதா என்ன தப்புச் செய்கிறாள் என்று தெரிந்தால் அவளுக்குப் புத்தி சொல்லித் திருப்ப முயற்சி செய்வேன்.''

சூரியாவின் இந்த நயமான பேச்சினால் காமாட்சி அம்மாளின் கோபம் கொஞ்சம் தணிந்தது.

''எனக்கும் அந்த ஆசை இல்லையா, சூரியா! ராகவனும் சீதாவும் முன்போல் சந்தோஷமாக இருந்தால் அதைக் காட்டிலும் எனக்குச் சந்தோஷம் வேறு கிடையாது. ஆனால் காரணம் என்பதாக ஒன்று இருந்தால் தானே சொல்வதற்கு? மனத்துக்குள் அவர்களுக்கு ஒருவர் பேரில் ஒருவர் பிரியம் இருக்கிறது என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஆனால் தினம் பொழுது விடிந்தால் சண்டையும் ரகளையும் நடப்பதில் குறைவில்லை. எல்லாவற்றுக்கும் உன் அத்தங்காளின் வாயாடித்தனந்தான் காரணம். வருகிற போது பேசவே தெரியாத ஊமையைப் போல் வந்தாளே, அவளுக்கு இத்தனை வாய் எப்படி வந்ததோ, எனக்கே ஆச்சரியமாய்த்தான் இருக்கிறது. அவன் ஒன்று சொன்னால் இவள் நாலு சொல்லுவது என்று ஏற்பட்டு விட்டது. அவன் எது சொன்னாலும் அதற்கு இவள் மறுத்துச் சொல்லாமல் விடுவதில்லை. எங்கேயாவது இவளை அழைத்துப் போகாவிட்டால் 'ஏன் அழைத்துப் போகவில்லை!' என்று சண்டை பிடிக்கிறது; அழைத்துக் கொண்டு போனால் திரும்பி வரும்போது 'ஏன் அழைத்துக் கொண்டு போனீர்கள்!' என்று சண்டை பிடிக்கிறது; 'ஏன் அவளோடு பேசினீர்கள்?' 'ஏன் இவளோடு பேசினீர்கள்?' என்று ஓயாமல் பிடுங்கி எடுக்கிறது. வெளியிலே வாசலில் போய் உத்தியோகம் பார்த்து விட்டு வருகிறவனை இப்படிப் போட்டு வதைத்தால் அவன்தான் என்ன செய்வான்? சில சமயம் அவனுக்கும் ரௌத்ராகாரம் வந்து விடுகிறது. கோபம் வந்திருக்கும் வேளையிலாவது எதிர்த்துப் பேசாமல் இருக்கத் தெரிகிறதா; அதுவும் இல்லை. உனக்குத்தான் அந்தத் தாரிணி என்கிற பெண்ணை நன்றாகத் தெரியுமே? அவளைக் கேட்டுப் பார்! நான் காசிக்குப் போயிருந்த போது சீதாவுக்கு சுரம் வந்து பிழைப்பது துர்லபம் என்று ஆகி விட்டது. அந்தச் சமயத்தில் தாரிணி வந்து இரவு பகலாக இவளுக்குச் சிசுருஷை செய்து காப்பாற்றினாள். உடம்பு சௌகரியமானதும் சீதா அவளைத் திட்டிய திட்டுக்கு அளவே இல்லை. நாக்கில் நரம்பில்லாமல் அவளையும் ராகவனையும் பற்றிப் பேசினாள். தாரிணி அவ்வளவையும் பொறுத்துக் கொண்டு சமாதானமாக நல்ல வார்த்தை சொல்லிவிட்டுப் போய்ச் சேர்ந்தாள். ஒரு சமயம் அந்தப் பெண்ணின் வயிற்றெரிச்சலை நான் கொட்டிக் கொண்டேன். இந்த வீட்டில் பூஜை அறையில் அவள் என் காலில் விழுந்து நமஸ்காரம் செய்து ராகவனைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதம் கொடுக்கும்படி கேட்டாள். அவள் என்ன சாதியோ, என்னமோ என்ற காரணத்தினால் கண்டிப்பாக முடியாது என்று சொல்லிவிட்டேன். இப்போது நினைத்துப் பார்த்தால் அது பெரிய தப்பு என்று தோன்றுகிறது. தாரிணியைக் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் என் பிள்ளை

எவ்வளவோ சந்தோஷமாக இருந்திருப்பான். அதற்கு நான் தடையாக நின்றேன். அந்தப் பெண்ணின் வயிற்றெரிச்சல்தான் இப்படி என்னையும் என் பிள்ளையையும் படுத்தி வைத்திருக்கிறது என்று தோன்றுகிறது.''

இதைக் கேட்ட சூரியா சிறிது சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். தாரிணியின் பேரில் அவனுக்குக் கோபம் வந்தது. பழைய கதை இப்படியெல்லாம் இருக்கும் போது ராகவன் — சீதாவின் வாழ்க்கையில் தாரிணி தலையிட்டிருக்கவே கூடாது என்று எண்ணினான். அவளுடைய மனத்திலும் ராகவனுடைய மனத்திலும் பழைய சிநேகத்தின் பாசம் இல்லையென்பது என்ன நிச்சயம்? ஆகையால் அவர்கள் விஷயத்தில் சீதா அசூயைப்படுவதிலேதான் என்ன தவறு?

இவ்விதம் எண்ணிக் கொண்டே போன சூரியா சட்டென்று அந்த எண்ணப் போக்குக்கு முட்டுக்கட்டை போட்டு நிறுத்தினான்.

''மாமி! நடந்து போன காரியத்தைப் பற்றி, அது வேறுவிதமாய் நடந்திருக்கக் கூடாதா என்று யோசிப்பதில் என்ன பிரயோஜனம்? பிரம்மா தலையில் எழுதின எழுத்தை யார் மாற்றி எழுத முடியும்? உங்கள் பிள்ளை சந்தோஷமாயிருப்பதற்கு என்ன வழி என்றுதான் இனி மேல் நாம் பார்க்க வேண்டும். சீதாவின் வாயாடித்தனத்தைப் பற்றி நீங்கள் சொன்னதை நான் மனத்தில் வைத்துக் கொண்டிருக்கிறேன். அவளுக்கு என்னால் முடிந்த வரையில் புத்திமதி சொல்லிப் பார்க்கிறேன். நீங்களும் நல்ல முறையில் கொஞ்சம் சொல்லிப் பாருங்கள். தில்லிக்கு எப்போது வரப் போகிறீர்கள்?'' என்று கேட்டான்.

''ராகவனிடமிருந்து எப்போது கடிதம் வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் தில்லிக்குப் போவதென்றால் ஒருவிதத்தில் பயமாகவும் இருக்கிறது. புருஷன் மனைவி சண்டையில் இந்தக் குழந்தைக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடப் போகிறதே என்று பயப்படுகிறேன். உன்னிடம் சொன்னால் என்ன? உனக்குத் தெரிந்திருக்க வேண்டியதுதான். ஒரு தடவை சீதா இந்தப் பச்சைக் குழந்தையிடம் ஏதோ சொல்லிக் கொடுத்திருக்கிறாள். இந்தக் குழந்தை போய் அப்பாவிடம், 'அம்மாவை வையாதே, அடிக்காதே!' என்று சொல்லியிருக்கிறாள். அவனும் முரட்டுத்தனமாகத் தன் கோபத்தை இந்தக் குழந்தையிடம் காட்டி இரண்டு அடி அடித்து விட்டான். குழந்தைக்குச் சுரம் வந்துவிட்டது....''

''ஐயோ!'' என்றான் சூரியா.

''நீ 'ஐயோ!' என்று பரிதாபப்படுகிறாயல்லவா? ஆனால் சீதா என்ன செய்தாள் தெரியுமா? குழந்தைக்குச் சுரம் என்பதை மூன்று நாட்கள் வரையில் ஒருவரிடமும் சொல்லவில்லை. அப்புறம் ராகவனுக்கு எப்படியோ தெரிந்து டாக்டரை அழைத்துக் கொண்டு வந்தான். குழந்தை பிழைப்பது புனர் ஜன்மம் ஆகிவிட்டது. உன் அத்தங்காளின் ராட்சதத்தனத்தைப் பார்த்தாயல்லவா?'' என்றாள்.

சூரியாவின் மனத்துக்குள் அது சீதாவின் ராட்சசத்தனமா, அல்லது தன் புருஷனைக் காட்டிக் கொடுக்கக் கூடாது என்ற நல்ல எண்ணத்தினால் அப்படிச் செய்தாளா என்ற சந்தேகம் தோன்றியது. அதைப் பற்றிக் காமாட்சி அம்மாளிடம் வாதிப்பதில் பயனில்லை என்று தீர்மானித்து, ''போனதெல்லாம் போகட்டும். நான் நாளைக் காலை டில்லி புறப்படுகிறேன். டில்லி போய்ச் சேர்ந்ததும் சீதாவைப் பார்த்துப் பேசிவிட்டு உங்களுக்குத் தகவல் தெரிவிக்கிறேன். எப்படியாவது தகராறைத் தீர்த்து வைத்து உங்கள் பிள்ளையும் நாட்டுப் பெண்ணும் நன்றாயிருக்கும்படி செய்வோம்!'' என்றான்.

''நானும் அதற்காகவேதான் எல்லாத் தெய்வங்களையும் வேண்டிக் கொண்டிருக்கிறேன். சூரியா! உலகத்திலேயே அவர்கள் இரண்டு பேரிடத்திலும் இந்தக் குழந்தையிடத்திலும் தான் எனக்குப் பாசம். நீ சீதாவிடம் பேசுகிறபடி பேசு. அதோடு சீதாவின் ஜாதகம் எங்கேயாவது கிடைக்குமா என்று பார்த்து வாங்கி அனுப்பு. அவளுடைய ஜாதகத்தில் ஒரு வேளை ஏதாவது தோஷம் இருந்தால் அதற்கு வேண்டிய சாந்தியைப் பண்ணச் சொல்லலாம்!'' என்றாள் காமாட்சி அம்மாள்.

## 7. வெள்ளி வீதியில்

சரித்திரத்தில் புகழ்பெற்ற டில்லிமா நகருக்கு மறுபடியும் நேயர்களை அழைத்துச் செல்ல வேண்டியதாகிறது. 1943ம் வருஷத்தின் பிற்பகுதியில் டில்லி நகரம் அதிவிரைவாகப் பணப் பெருக்கமும் ஜனப் பெருக்கமும் அடைந்துகொண்டு வந்தது. யுத்தம் இந்தியாவின் எல்லையை நெருங்கி வந்து கொண்

டிருந்ததை முன்னிட்டுத் தலைநகரில் யுத்த முஸ்தீப்புகள் தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. பிரிட்டிஷ் சோல்ஜர்களும் அமெரிக்க சோல்ஜர்களும் கூர்க்க சிப்பாய்களும் சீக்கியத் துருப்புகளும் தென்னிந்திய வீரர்களும் எங்கே பார்த்தாலும் காணப்பட்டார்கள். டாக்ஸி கார்களுக்கும், டோங்கா வண்டிகளுக்கும், ரிக்ஷாக்களுக்கும்கூட என்றுமில்லாத கிராக்கி ஏற்பட்டிருந்தது. இத்தகைய நிலைமையில் டில்லி ரயில்வே ஸ்டேஷனில் வந்திறங்கிய சூரியாவுக்கு வண்டி எங்கே கிடைக்கப் போகிறது?

ஸ்டேஷன் வாசலில் வந்து நின்ற சூரியா ஐந்து நிமிஷங்கள் தயங்கி நின்று யோசனையில் ஆழ்ந்திருந்தான். புது டில்லிப் பக்கம் நடையைக் கட்டுவதா அல்லது முதலில் பழைய டில்லிக்குப் போவதா என்னும் பிரச்னைதான் அவனை அத்தகைய சிந்தனைக்கு உள்ளாக்கியிருந்தது. கடைசியில் பழைய டில்லிக்கே சீட்டு விழுந்தது. விடுவிடு என்று பழைய டில்லியை நோக்கி நடந்தான்.

பழைய டில்லியில் 'சாந்தினிச் சவுக்' என்னும் வீதிக்கு வந்ததும் சூரியாவின் நடை மெதுவாயிற்று. அவனுடைய உள்ளமோ சில நூறு வருஷங்கள் பின்னால் சென்று அந்தப் பிரசித்தி பெற்ற 'வெள்ளி வீதி'யில் அவ்வப்போது நடந்த சரித்திர நிகழ்ச்சிகளைப் பற்றிச் சிந்திக்கலாயிற்று.

அந்தச் 'சாந்தினிச் சவுக்' ஒரு காலத்தில் உலகத்திலேயே மிகப் பணக்கார வீதி என்று பெயர் பெற்றிருந்தது. தங்க நகைக் கடைகளும் நவரத்தின ஆபரணக் கடைகளும் உலகெங்குமிருந்து வந்த பலவித அபூர்வமான பொருள்களின் கடைகளும் அவ்வீதியில் இருந்தன. மன்னாதி மன்னர்களெல்லாம் அணிய விரும்பக் கூடிய பட்டுப் பட்டாடைகளும் ரத்தினக் கம்பளங்களும் பல கடைகளில் விற்கப்பட்டன. அந்த வீதியில் வசித்தவர்கள், கடை வைத்திருந்தவர்கள் அனைவரும் செல்வத்தில் சிறந்த சீமான்கள். இப்படியாகச் செல்வம் குவிந்திருந்த இடத்துக்கு ஆபத்துக்கள் வருவது இயற்கையேயல்லவா? ஆபத்து ஒரு தடவையல்ல, எத்தனையோ தடவைகள் அந்த வெள்ளி வீதிக்கு வந்தது.

ஐந்நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னால் மங்கோலியா தேசத்திலிருந்து தைமூர் என்னும் அசுரன் ஒரு பெரிய ராட்சதப் படையுடனே வந்தான். அச் சமயம் டில்லியில் முகமது துக்ளக் என்னும் பாதுஷா அரசாண்டான். தைமூரும் முகமது துக்ளக்கும் இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்தவர்கள்தான். இது காரணமாகத் தைமூர் கருணை காட்டினானா? இல்லை. முகம்மது துக்ளக்கின் சைன்யத்தை டில்லிக் கோட்டை வாசலிலே தோற்கடித்து நகருக்குள்



## வக்கில்லாத வக்கா?

மரக்கிளைகளின் ஊடே வைக்கோலால் உண்டாக்கிய கூட்டினுள் பெண் "வக்கா" பறவை மூன்று முதல் ஐந்து வரை முட்டைகள் இட்டு மிகக் கவனமாகப் பாதுகாக்கும்.

முட்டையிலிருந்து வெளிவந்த இளம் குஞ்சுகள் சில சமயங்களில் அறியாத்தனமாகக் கூட்டை விட்டு வெளிவந்து கூட்டின் விளிம்பில் நின்று கொண்டிருக்கும். எதிர்பாராத விதமாக இக் குஞ்சுகள் கூட்டிலிருந்து தடுமாறிக் கீழே விழ நேர்ந்தால் உடன் இக் குஞ்சுகள் தரையில் வந்து விழுவதற்கு முன் இடையில் ஏதாவது மரக் கிளையில் தன் நீண்ட கழுத்தைக் கயிறு போல் சுற்றிக் கொண்டு தொங்கிக் கீழே விழாமல் தற்காத்துக் கொள்ளும்! பின்பு தொங்கிய நிலையில் இருக்கும் தன் உடலை அங்குமிங்கும் அசைத்து மரக் கிளையைப் பற்றிப் பிடித்துக் கஷ்டப்பட்டு மிகக் கவனமாகத் தன் கூட்டை வந்தடையும். சில சமயம் தொங்கிய நிலையில் உள்ள தன் உடலை மரக் கிளைக்குக் கொண்டு வர முடியவில்லை என்றால் பரிதாபத்துக்குரிய இவ்விளம் குஞ்சு மரக் கிளையிலேயே மரணம் எய்தக் கூடும். கிளையிலிருந்து கீழே விழும்போது மரக் கிளையில் தன் கழுத்தைச் சுற்றிக் கொள்ளச் சந்தர்ப்பம் வாய்க்காவிடில் தரையில் பொத்தென்று விழுந்து மரணம் எய்தும். சில சமயம் காயங்களுடன் மரணப் போராட்டத்திலும் இக் குஞ்சுகள் சிக்குவதுண்டு. கூட்டை விட்டு அறியாத்தனமாக வெளிவந்த தன் குஞ்சுகள் மரக் கிளையில் உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும்போதோ, அல்லது தரையில் மரணப் போராட்டத்திலிருக்கும் போதோ, தாய்ப் பறவை அவற்றைக் காப்பாற்ற எவ்வித அக்கறையும் எடுத்துக் கொள்வதில்லை. "வக்கா" தாய்ப் பறவைக்குப் பிள்ளைப் பாசம் இல்லையா? அல்லது கீழே விழுந்த குஞ்சைக் காப்பாற்ற என்ன வழி என்பதை அறியாமல் இருக்கிறதா? பெற்றெடுத்தோம்; முடிந்தவரை வளர்த்தோம். அதன் தலைவிதி இவ்வளவுதான் என்று சும்மா இருக்கிறதா? இக் கேள்விகளுக்கு விஞ்ஞான உலகு கூட இதுவரை பதில் கூறவில்லை.

— அந்தோனிபேசில்

# நீங்கள் எந்த வேலை செய்தாலும், பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் அதை நல்ல முறையில் செய்ய உதவுகிறது.



உங்கள் படிப்பறையில் படிக்கும்போது பிலிப்ஸ் உங்கள் கண்களைப் பாதுகாக்கிறது.



உங்கள் சமையலறையில், நல்ல முறையில் சமையல் செய்ய பிலிப்ஸ் உதவுகிறது.



உங்கள் குளியலறையில், நல்ல முறையில் க்ஷவரம் செய்து கொள்ள பிலிப்ஸ் உதவுகிறது.

பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் 100 வாட் பல்பினைப் போல் இரு மடங்கு ஒளி தருகிறது. இந்த ஒளி சிறந்ததும், பிரகாசமானதும், கூசாததுமானது. கண்களுக்குக் குளிர்ச்சி தருகிறது. இருந்தும், மின்சாரச் செலவு ஒரு 40 வாட் பல்புக்காகும் அளவேதான்.

இந்தக் கச்சிதமான பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் இணைப்பு ஒரு பிலிப்ஸ் 40 வாட் ஃப்ளுரோஸென்ட் பல்ப் கொண்டது. அது சிறந்த, அதிகப் பிரகாசமான ஒளியைத் தருகிறது.

பிரபலமான பிலிப்ஸ் பாலியெஸ்டர் பலாஸ்ட், ஸ்டார்ட்டர், ஸ்டார்ட்டர் ஹோல்டர் மற்றும் ஸ்ப்ரிங் இணைந்த ரோடார் லாம்ப் ஹோல்டர், இவைகளைக் கொண்டது பிலிப்ஸ் ஸ்ட்ரிப் லைட். பொருத்துவதற்கு எளிதானது.

உபயோகத்திற்குச் சிக்கனமானது. குறைந்த சிரமத்தில் நம் வேலைகளை முடிக்க உதவுகிறது.

இன்றே பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்துங்கள் — உங்கள் வீடு, ஆபீஸ், கடை மற்றும் தொழிற்சாலையில்.



## பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்

மூலம் அரைப்பங்கு செலவில் இரு பங்கு வெளிச்சம் பெறுங்கள்.




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

PHL.3558

புகுந்தான். ஆயிரமாயிரம் பிரஜைகளைக் கொன்று குவித்தான்; வெள்ளி வீதியின் செல்வத்தைக் கொள்ளையடித்தான்; இரத்தினக் கம்பளங்களின் மீது இராஜகுமாரர்களும் இராஜகுமாரிகளும் நடமாடிய இடமெல்லாம் இரத்த ஆறு ஓடும்படி செய்தான்.

தைமூர் டில்லியில் இரண்டு வாரங்கள் தங்கியிருந்து ஹததாஹதம் செய்து விட்டுப் புறப்பட்டுச் சென்ருன். அவன் போன பிறகு டில்லி நகரம் ஒரு பயங்கர சொப்பனத்திலிருந்து விழித்து எழுந்தது போல் எழுந்தது. கண்டது கனவல்லவென்றும் உண்மையான பயங்கரம் என்றும் உணர்ந்தது. ஆயினும், அந்த அதிசயமான ஜீவசக்தியுள்ள நகரம் மறுபடியும் அதிசீக்கிரத்தில் சீரும் செல்வமும் பெற்றுக் குபேரபுரியாயிற்று. இரத்த ஆறு ஓடிய 'வெள்ளி வீதி'யில் மறுபடியும் தங்க மோகராக்கள் குலுங்கும் சத்தமும் இராஜகுமாரிகளின் பாதச் சிலம்பின் சத்தமும் கேட்கத் தொடங்கின.

டில்லியின் சரித்திரத்தில் முந்நூற்று நாற்பது வருஷங்கள் சென்றன. பாபர் முதல் அவுரங்கஜீப் வரையில் மொகலாய சக்கரவர்த்திகள் வீற்றிருந்து அரசு செலுத்திய இடத்தில் இப்போது முகம்மது ஷா என்பவன் அரசு புரிந்தான். அப்போது பாரஸிகத்திலிருந்து நாதிர்ஷா என்னும் கொடிய அரக்கன் பெரும் சைன்யத்துடன் படையெடுத்து வந்தான். மறுபடியும் 'சாந்தினிச் சவுக்'குக்கு ஆபத்து வந்தது. 'சாந்தினிச் சவுக்'குக்கு அருகில் இருந்த மசூதியின் கோபுரத்தில் உட்கார்ந்து கொண்டு நாதிர்ஷா தன் மூர்க்கப் படைகள் டில்லிவாசிகளைப் படுகொலை செய்யும் காட்சியைப் பார்த்துக் களித்தான். கொலைக்குப் பிறகு கொள்ளையும் அடித்தான். மீண்டும் அந்த வீதியில் இரத்த ஆறு ஓடியது; இரத்த ஏரி தேங்கி நின்றது. இந்தப் பயங்கர சம்பவத்தின் ஞாபகார்த்தமாக அந்த வீதியின் ஒரு முனையிலுள்ள வாசலுக்குக் 'கூனிதர்வாஜா' (இரத்த வாசல்) என்னும் பெயர் இன்று வரையில் வழங்கி வருகிறது.

நாதிர்ஷா வந்து போன இருபது வருடங்களுக்கெல்லாம் அவனுடைய ஸ்தானத்துக்கு வந்திருந்த ஆமத்ஷா அப்தாலி என்பவன் டில்லிமீது படையெடுத்து வந்தான். நாதிர்ஷா பாக்கி வைத்துவிட்டுப் போன செல்வத்தையெல்லாம் ஆமத்ஷா கொள்ளையடித்தான்; படுகொலையும் நடத்தினன்; இந்தத் தடவையும் அந்த டில்லி நகரில் பெருங் கொடுமைக்கு உள்ளான பகுதி 'வெள்ளி வீதி'தான்.



ஹென்றி ஹைட் என்னும் அமெரிக்கர்தான் உலகத்திலேயே மிகவும் உயர்ந்த மனிதர். இவருடைய உயரம் 8 அடி 2 அங்குலம். தம்முடைய மோட்டாரில் முன் சீட்டையே எடுத்து விட்டார் இவர். பின் சீட்டில் உட்கார்ந்தபடியேதான் காரை ஓட்டிச் செல்கிறார்!

ஆதாரம்: டிட்பிட்ஸ்
தகவல்: கன்னிகா

ஆமத்ஷாவுக்குப் பிறகு ஸிந்தியாக்களும், ஹோல்கார்களும் ரோஹில்லர்களும் படையெடுத்து வந்து தங்கள் தங்கள் பங்குக்குக் கொள்ளையடிக்கும் கைங்கரியத்தைச் செய்தனர்.

கடைசி கடைசியாகப் பிரிட்டிஷாருடைய பெருங் கருணைக்கு டில்லிமாநகரம் பாத்திரமாயிற்று. 1857-ம் ஆண்டில் 'சிப்பாய்க் கலகம்' என்று அழைக்கப்பட்ட புரட்சி தோல்வியுற்றதும் பிரிட்டிஷ் துருப்புகள் டில்லியைப் பழி வாங்கின. ஒரு வாரம் நகரமெல்லாம் கொள்ளையும் கொலையுமாக இருந்தது. ஒரு வாரத்துக்குப் பிறகு பிரிட்டிஷ் அதிகாரிகள் தங்கள் சைன்யத்தைக் கட்டுக்குள் கொண்டு வந்தார்கள். வரைமுறையில்லாமல் கொலை செய்ததை நிறுத்தி, முறைப்படி விசாரித்துக் கலகக்காரர்களைத் தண்டிக்கத் தொடங்கினார்கள். நாதிர்ஷாவும் ஆமத்ஷாவும் படுகொலை நடத்திய அதே வெள்ளி வீதியில் பிரிட்டிஷ் இராணுவக் கோர்ட்டின் தூக்கு மரம் நாட்டப்பட்டது. சுமார் ஆயிரம் பேர் தூக்கிலிடப்பட்டார்கள்.

அத்தகைய பயங்கர சம்பவங்களுக்கு இடமான சரித்திரப் பிரசித்தி பெற்ற 'சாந்தினிச் சவுக்'கென்னும் வெள்ளி வீதியில் சூரியா நடந்து சென்று கொண்டிருந்தான். நடந்து கொண்டிருக்கையில் அவனுடைய மனக் கண்ணின் முன்னால் மேற்கூறிய சரித்திர நிகழ்ச்சிகள் எல்லாம் வரிசைக்கிரமமாக வந்து கொண்டிருந்தன. அந்த நிகழ்ச்சிகளைக் கற்பனை செய்து பார்த்தபோது அவனுடைய உடம்பு சிலிர்த்தது. ஒவ்வொரு சமயம் தலை சுற்றுவதுபோல் இருந்தது.

இன்னொரு பக்கத்தில் அளவில்லாத அதிசயம் அவனைப் பற்றிக் கொண்டிருந்



பாரிஸ் ஓட்டல் ஒன்றில் ''ஆங்கிலம், ஸ்பானிஷ், இத்தாலியன், ரஷ்யன், ஜெர்மன் ஆகிய மொழிகள் இங்கே பேசப்படும்'' என்று அறிவிப்புக் காணப் பட்டது.

''இவ்வளவு மொழிகளைத் தெரிந்து வைத்திருக்கிற அந்தப் பன்மொழி வல்லுநர் யார்? ''

''மொழி வல்லுநரா? அப்படி ஒருவரும் இங்கு இல்லையே!''

''பின்னர் விளம்பரத்தில் மட்டும்....?''

''அதுவா? இந்த ஹோட்டலில் தங்கும் பல நாட்டுப் பிரயாணிகளும் பல மொழிகள் பேசுவார் களே! அதைத்தான் குறிப்பிட்டிருக்கிறோம்!''

- புவனா ரமணி



மாணவன்: சார்! நேற்று என் அப்பா மௌன விரதம். அதனால்தான் சார், பிராக்ரஸ் ரிப்போர்ட்டில் கையெழுத்து வாங்கிட்டு வரமுடியவில்லை.

ஆசிரியர்: மௌன விரதமா யிருந்தால், கை யெழுத்துக்கூடப் போடக் கூடாதா?

மாணவன்: அதெப்படி சார் முடியும்? வழக்கம் போல, ஒரு அரை மணி நேரமாவது என்னைத் திட்டிய பிறகுதானே சார், கையெழுத்துப் போட வேண்டியிருக்கும்!

- கருவூரான்

---

தது. இவ்வளவு கொடூரங்களுக்கும் பயங்கரங்களுக்கும் உள்ளான இந்த வெள்ளி வீதி இன்றைய தினம் எவ் வளவு கலகலப்பாயிருக்கிறது! எத்தனை கடைகள்? அவற்றில் எவ்வளவு விலை உயர்ந்த பொருள்கள்! வீதியில் நடப்ப தற்கு இடமின்றி நெருங்கியிருக்கும் ஜனக் கூட்டத்தை என்னவென்று சொல்வது? எத்தனைவிதமான ஜனங்கள்? எத்தனை நிறத்தினர்? எத்தனை மதத் தினர்? ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கி யர்கள், வங்காளிகள், பஞ்சாப்பியர், தென்னிந்தியர், இங்கிலீஷ் டாம்மிகள், அமெரிக்க நிபுணர்கள் — அம்மம்மா! இது என்ன கூட்டம்? இது என்ன பணப் பெருக்கம்? அமெரிக்கர்கள் எப்படிப் பணத்தை வாரி இறைக்கிறார்கள்? — 'சரித்திரம் திரும்பி வரும்' என்று சொல்கிறார்களே? ஒரு வேளை மறுபடி யும் இந்த வெள்ளி வீதிக்குத் துர்த் தசை ஏற்படுமா? கொள்ளையும் கொலை யும் இங்கே நடக்குமா? இரத்த ஆறு ஓடுமா? ஜெர்மானியரோ, ஜப்பானி யரோ, ருஷியரோ இங்கே படை யெடுத்து வருவார்களா? மறுபடியும் இந்த வெள்ளி வீதி ரணகளம் ஆகுமா?

இப்படியெல்லாம் சூரியா சிந்தித்துக் கொண்டே நடந்தான். மனம் சிந்தனை செய்து கொண்டிருக்கையில் கண்கள் யாரையோ, எதையோ, சுற்றிச் சுழன்று தேடிக் கொண்டிருந்தன. ஆயினும் பலன் கிட்டவில்லை.

சூரியா வெள்ளி வீதியைக் கடந்து இன்னும் அப்பால் சென்று கடைசி யாக ஜும்மா மசூதியை அடைந்தான். ஷாஜஹான் சக்கரவர்த்தி கட்டியதும் இந்தியாவிலே பெரியதுமான அந்தக் கம்பீர மசூதியைக் கீழிருந்து அண் ணாந்து பார்த்தான். பிறகு அதன் படி களில் ஏறினான். முக்கால்வாசிப் படிகள் ஏறியதும் நின்று சுற்றுமுற்றும் உள்ள வீதிகளைப் பார்த்தான். பிறகு சற்றுத் தூரத்திலிருந்த கோட்டையைப் பார்த் தான். கோட்டைக்கும் மசூதிக்கும் நடுவிலிருந்த பகுதி ஒரு காலத்தில் ஜன நெருக்கம் வாய்ந்த பகுதியாயிருந்தது என்றும், அங்கிருந்த ஆயிரக்கணக்கான வீடுகளையும் மசூதிகளையும் பிரிட்டிஷ் துருப்புகள் பீரங்கி வைத்து இடித்து நாசமாக்கித் திறந்த வெளியாகச் செய்து விட்டன என்றும் நினைவு கூர்ந்தான். அவன் நின்று கொண் டிருந்த புகழ்பெற்ற ஜும்மா மசூதி கூடப் பிரிட்டிஷ் துருப்புக்களின் ஆதிக் கத்தில் கொஞ்ச காலம் இருந்தது. தைமூரும் நாதிர்ஷாவும் ஆமத்ஷாவும் காட்டுமிராண்டிகள் என்று சொல்லத் தக்க பழைய காலத்து ராட்சதர்கள். ஆனால் படித்தவர்கள் என்றும் நாகரிக மடைந்தவர்கள் என்றும் சொல்லிக் கொள்ளும் பிரிட்டிஷார் இந்த டில்லிமா நகரில் செய்த அக்கிரமங்களைப் பற்றி என்னவென்று சொல்வது? சூரியாவின் இரத்தம் கொதித்தது.

ஹிந்துக்களும் முஸ்லிம்களும் தங்க ளுடைய அற்ப மாற்சரியங்களை ஒழித் துப் பிரிட்டிஷாரை இந்தியாவைவிட்டு ஓட்டும் காலம் வருமா? பழைய டில்லி யிலும் புது டில்லியிலும் யூனியன் ஜாக் கொடி இறங்கி, இந்தியச் சுதந்திரக் கொடி பறக்கும் நாள் வருமா? அந்த நாளைப் பார்க்கத் தனக்குக் கொடுத்து வைத்திருக்குமா......?

இவ்விதம் சூரியா எண்ணமிட்டுக் கொண்டிருக்கும்போது யாரோ தனது இடது கையை இரும்புப் பிடியாகப் பிடித்ததை உணர்ந்து திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். (தொடரும்)

# ராஜாஜியின் ஜெயில் டைரி

## 1922 ஜனவரி, 2உ

சுரம். சாதம் சாப்பிடவில்லை. அதற்குப் பதிலாகக் கொஞ்சம் கஞ்சி சாப்பிட்டேன். பிற்பகலில் என்னை வைத்திய சாலைக்கு அழைத்துப் போனார்கள். லட்சுமணபுரியிலிருந்து வந்திருந்த முகம்மது ஹுஸேன் சாயபும் நெல்லூரிலிருந்து வந்திருந்த இளைஞர்களும் வைத்திய சாலையில் இருந்தார்கள்.



எனக்குப் பாலும் சவ்வரிசியும் கொடுத்தார்கள். அவர்கள் கொடுத்த அந்தக் கஞ்சி முழுவதையும் என்னால் குடிக்க முடியவில்லை. அதில் பெரும் பகுதியைக் குடிக்காமல் ஒரு மூலையில் வைத்துவிட்டேன்.

முகம்மது ஹுஸேன், வைத்திய சாலையைக் குறித்துப் பல குறைகள் கூறினார். லாகூர் சதி வழக்கில் சம்பந்தப்பட்ட ஹீராசிங்கு இங்கேதான் இருக்கிறார். சில மாப்பிள்ளைமார்களும் இருக்கிறார்கள். ''நீங்கள் ஏன் சிறைக்கு வந்தீர்கள்?'' என்று அவர்கள் கேட்டார்கள். ''நாங்கள் நாலு வருஷங்களானாலும் இருக்க முடியும். நீங்கள் மூன்று மாதங்கள் எப்படி இருக்கப் போகிறீர்கள்?'' என்றும் சொன்னார்கள்.

## 1922 ஜனவரி, 3உ

சுரத்துக்காக 'காலோமல்' மருந்தும் கொய்னாவும் கொடுத்தார்கள். காலை மூன்று மணிக்கு சுரம் நின்றுவிட்டது.

சிறைச்சாலை வாழ்வில் ஏற்படக்கூடிய துன்பங்கள் பல. வைத்தியசாலையில் இருப்பது மற்றும் ஒரு துன்பமாகும். வைத்தியசாலையில் மூன்று பெரிய அறைகள் இருக்கின்றன. சிறு அறைகளோ, அல்லது விசேஷ வார்டுகளோ ஒன்றுமே கிடையாது. முன்னால் ஒரு வராந்தாவும் இருக்கிறது. என்னுடைய வார்டில் பன்னிரண்டு நோயாளிகளுக்குப் படுக்க வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. படுக்கைகள் நிறைய மூட்டைப் பூச்சிகள். சன்னல்களுக்குக் கம்பிகள் போடப்பட்டிருக்கின்றன. ஒரே ஒரு வாசல்தான் இருக்கிறது. இதர பகுதிகளை மாலையில் பூட்டுவது போலவே எங்கள் வார்டையும் மாலையில் பூட்டி விடுகிறார்கள். காவற்காரர்கள், ''எல்லாம் சரியாய் இருக்கிறது'' என்று எங்கள் அருகிலேயே கூப்பாடு போடுவதால் எங்கள் காதுக்குள்ளே புகுந்து கொண்டு கூப்பாடு போடுவதுபோல் இருக்கிறது.

முன்னுள்ள வராந்தா காலியாக இருக்கவில்லை. அதிகக் காற்று வேண்டிய நோயாளிகளை அங்கே படுக்க வைக்கிறார்கள். பின்னுள்ள வராந்தா



தான் இரவில் கதவை இழுத்துப் பூட்டியபின் நோயாளிகள் ஒதுங்குவதற்குள்ள இடம். மூடி போட்ட சட்டிகளை வைப்பதில்லை. எல்லாச் சட்டிகளும் இரவு முழுவதும் திறந்தே கிடக்கின்றன. அதனால் இரவில் இந்த இடம் அசல் நரகமாகத்தான் இருக்கிறது. ஆனால் காலையில் அசுத்தங்களை அப்புறப்படுத்திவிட்டு 'பினாயில்' மருந்தை நிறையத் தெளிக்கிறார்கள். சிறையின் தலைமை அதிகாரி இந்திய வைத்திய வர்க்கத்தைச் சார்ந்த டாக்டர். அவர் காலையில் பத்து மணிக்கு வரும் பொழுது எல்லாம் பரிசுத்தமாகக் காட்சியளித்து விடுகிறது. அவர் எல்லாம் ஒழுங்காக நடப்பதாக எண்ணிக் கொண்டு விடுகிறார். மூடி போட்ட சட்டிகளை ஏன் வைக்கக் கூடாது என்பது எனக்கு விளங்கவில்லை. மண் சட்டிகளை வைக்காமல் மூடி போட்ட பீங்கான் பாத்திரங்களை வைத்தால் செலவும் மிஞ்சும்; சுத்தமாகவும் இருக்கும்.

அதிகாலையில் உதவி அதிகாரி உத்தரவின் பேரில் பஞ்சாப் கைதிகளுடைய சமையலறையிலிருந்து எனக்கு ஒரு கோதுமை ரொட்டி கொண்டு வந்து கொடுக்கப்பட்டது. நிதான்சிங் என்னும் வயதான சீக்கியர்தான் அந்த ரொட்டியைக் கொண்டு வந்தார். ''வந்தே மாதரம்'' என்று கூறிக் கொண்டு வணக்கம் செய்தார். ''எனக்கு ஜீரணமாகாது, வேண்டாம்'' என்று கூறினேன். ஆனால் அவர் விடவில்லை. அதனால் அதை அவரிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்தனம் கூறினேன்.

ஒத்தடம் கொடுத்ததால் குணம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. கால்களில் வலி குறைந்திருக்கிறது. அதி' பலவீனமா யிருக்கிறது. கொய்னாச் சாப்பிட்டதோ அல்லது சுரம் ஏற்பட்டதோ எது காரணம் என்று தெரியவில்லை.

# படித்துப்பாருங்கள்

## பொன் ஊஞ்சல்

கலெக்டர் மூர்த்தி ரிடையரானதும், 'அப்பாடா' என்று நிம்மதியோடு காலங் கடத்த முடியவில்லை. அருமைப் பெண் வாணிக்குத் திருமணம் செய்யவேண்டியிருந்தது. எங்கிருந்தோ அவரது தம்பி ராஜன் இக்குடும்பத்தில் வந்து சேர்ந்து மன உளைச்சலைத் தருகிறான். அவன் சிறைக்குச் சென்று வந்தவன் என்பதினால் அந்தக் குடும்பத்தினர் படும் அவஸ்தை நாவல் பெரிதாக வளர உறுதுணை செய்கிறது. அதோடு பலப்பல சஸ்பென்ஸ்கள் உருவாகி அந்தக் குடும்பத்தை அல்லல் படுத்துவதோடு நாவலுக்கும் சுவை ஏற்றுகிறது. வாணி — குமார் திருமணம் தடைப்படுகிறது. கடைசியில் நீதிபதி விசுவநாதன் தம் மனத்தில் குற்றவாளியாகத் தாமும் இருப்பதை உணர்ந்து தம் மகன் குமார் — வாணி திருமணத்துக்குப் பச்சைக் கொடி காட்டுகிறார்.

பி. வி. ஆர். இந்த நாவலில் குடும்பச் சூழ்நிலைகளை நன்கு சித்திரித்து ஒரே மூச்சில் நாவலைப் படித்து முடிக்கும்படி செய்துவிடுகிறார். 'காம்ப்ளெக்ஸ்' ஒரு மனத்தில் புகுந்து கொண்டு விட்டால் எத்தனை பாடுபடுத்தி விடுகிறது! நாவலையும் பாடாய்ப் படுத்துகிறதைக் காண்கிறோம்.

பிரசுரம்: வானதி பதிப்பகம், சென்னை-17; விலை: ரூ. 7–50.

## எதற்காக உடற்பயிற்சி செய்கிறோம்?

'சுவரை வைத்துக்கொண்டு சித்திரம் எழுத வேண்டும்' என்பது பழமொழி. உடல் நோயுற்று விட்டால் அறிவாற்றலாலும் பலன் இல்லாது போகும். தேகப் பயிற்சி செய்கிறவர்களின் உடல் உறுதி, உற்சாகம், நெஞ்சுரம், தைரியம், தன்னடக்கம், ஊக்கம், சமயோசிதம் இவையெல்லாம் அதிகரிக்கும். இத்தகுதிகளைத் தூய்மையாக்கிக் காப்பது உடற் பயிற்சியே.

உடற் பயிற்சியினால் விளையும் நன்மைகளைப் பற்றிய இந்நூல் அனைவரும் படித்துப் பயனுற வேண்டியது.

ஆசிரியர்: எஸ். நவராஜ் செல்லையா; பிரசுரம்: ராஜ்மோகன் பதிப்பகம், 49, ரயில்வே பார்டர் ரோடு, சென்னை - 33. விலை ரூ. 1-50.

## காணிக்கை

அஜிதாவுக்குப் பதினேழு வயதுக்கு மேலேயே புள்ளி போடுகிற ஒரு வளர்த்தி. மாநிறந்தான். ஆனாலும் செம்மை படர்ந்த முகம். எலிஸபெத் டெய்லர் மாதிரி பளிங்குக் கண்கள். இவள், யாமினி—பாஸ்கரனின் மண வாழ்வில் குறுக்கிடுகிறாள். அதனால் குடும்பத்தில் பல குழப்பங்கள், சிக்கல்கள், பிரிவினை. நாவல் விரிவடைய இவை உதவுகின்றன. பணத்தின் சக்தியினால் பாஸ்கரனைப் பணிய வைக்க முயல்கிறாள் அஜிதா. கடைசியில் பாஸ்கரன் அவள் உண்மை சொரூபத்தை உணர்ந்து, குழந்தை அரவிந்தனோடு உள்ள மனைவி யாமினிக்கே தன் வாழ்க்கையைக் காணிக்கையாக்குகிறான்.

ஆர்வி அவர்களுக்கே உரிய சரளமான நடை, யாமினி, அஜிதா, பாஸ்கரன் மனப் போராட்டங்களைச் சித்திரிக்கும் முறை நாவலுக்கு மெருகு ஏற்றுகிறது. இந்நாவல் கல்கியில் ஏற்கனவே தொடர்கதையாக வெளிவந்து பாராட்டுப் பெற்றதாகும்.

பிரசுரம்: வானதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை—17. விலை: ரூ. 7—50.



ஸ்ரீ
லக்ஷ்மி மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயமுத்தூர்

உயர்ந்த துணிகளின்
உன்னத சின்னம்

மாதரின் அழகு
மேலும்
பரிமளிக்க...

லக்ஷ்மியின்



வாயில்
புடவைகள்

அன்றாடம் உடுப்பதற்கும், எல்லா
விசேஷ சந்தர்ப்பங்களுக்கும்
உகந்த துணி

கவர்ச்சியான அணி
இலேசானது கசங்காதது

இறக்குமதி செய்த
90s & 100s உயர்ந்த
பருத்தியினால்
செய்யப்பட்டவை.

VSK-LM-478 Tm

**விற்பனை ஏஜெண்டுகள்:**
இராம்கோ சுதேசிஸ்
158, ஒப்பணக்கார வீதி
கோயமுத்தூர்-1
வெங்கடேஷ் வஸ்திராலயா
40, பாஷ்யகாரலு வீதி
ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்-2

**எமது ஷோ-ரூம்கள்:**
17-93, ஒப்பணக்கார வீதி
கோயமுத்தூர்-1
9-194, [illegible] ரோடு
கோயமுத்தூர்-13
387, மெயின் ரோடு, கோவில்பட்டி
40, மவுண்ட் ரோடு, சென்னை-6

**பிரத்தியேக விற்பனை நிலையங்கள்:**
எஸ்.பி. எஸ். எஸ். கிளாத் ஷாப்
11-12, தெற்கு சித்திரை வீதி, மதுரை-1
பி. கே. டெக்ஸ்டைல்ஸ், 15, டி.எம்.
பில்டிங், திருநெல்வேலி ஜங்ஷன்
லக்ஷ்மி கிளாத் ஸ்டோர்ஸ்
298, மெயின் ரோடு, இராஜபாளையம்

# ஜாங்கோ ஜக்கு

கதை: **குட்டி கிருஷ்ணன்**

சித்திரம்: ராஜு

**3**

ஜக்கு வாய் குளறிப் பேசக் கேட்டும் பிச்சுவாக் கத்தி பிச்சுமணி ஒன்றும் புரியாமல் திகைத்தான், சில விநாடிகள். பயத்தில் அவன் உளறுவதை உணர்ந்ததும், பிச்சுமணிக்குத் தாங்க முடியாத சிரிப்பு!
















அட அசடே! ஏமாந்துட்டடே! அத்தனையும் கள்ள நோட்டு!
என்ன! என்ன?


நல்லா வெளிச்சத்திலே பார்... உற்றுப் பார்! பேரிலேயே புரியலையா, கப்ஸா பேர் வழின்னு? கப்பண்ணு! அவன் பண்ணுகிற ஊழல் பத்து மைல் தூரத்துக்கு 'கப்' படிக்கும்!


ஆஹா! கப்பண்ணு! இதோ வந்தேன்! உன்னைப் பொடியாக்கி, பிரியாணி பண்ணி நாய்க்குப் போடறேன்!
ளொள், ளொள்!
ரொம்ப தைரியசாலி! இப்போ குரைக்கிறதிலே ஒண்ணும் குறைச்சலில்லே!


ஜக்குவின் தாய் வாசலுக்கு வந்தாள்.
என்னடா இங்கே கலாட்டா?
நிதானமா கேளு! நானும் ஜிம்மியும் சடுகுடு ஆடிக் கிட்டிருக்கோம்!


அதுக்கா இத்தனை ஆர்பாட்டம்? நான் உன்னைக் கொலை பண்ணவே யாரோ வந்துட்டாங்கன்னு நெனைச்சேன்!
?!


இச்சமயம் பொன் மொழி காரில் வந்து இறங்கினாள். அவள் செல்ல நாய் ஜிம்மியும் வெளியே பாய்ந்தது.
ஆபத்து, ஆபத்து! உன்னைக் கொல்லப் பிச்சுவாக் கத்தி பிச்சு மணி வரான்!
அவன் வந்துட்டுப் போயாச்சு!


அப்படின்னா நீ நிச்சயம் செத்துப் போயிட்டே! பிசாசா நிக்கறே! பேய் விருன்னு நீ ஃபோனில் சொன்னது நிஜம் தான்!
ஐயே! நான் பிசாசில்லே! வேணும்னா என்னைத் தொட்டுப் பாரு!

தொடரும்

# நாகரீகத்தின் வரலாறு



ஆதி மனிதன், குகைகளில் வசித்து வந்தான்; அங்கு, தான் வாழ்ந்ததை வெளிக்குப் புலப்படுத்த, ஓவியங்களை தன் போக்கில் கிறுக்கிவைத்தான். பின்னர், கட்டிடம் கட்டக் கற்றுக்கொண்ட அவன், சாலச் சிறந்த கட்டிடப் பொருளைத் தேடிக் கண்டறியும் ஆராய்ச்சியில் இறங்கினான்: நூற்றாண்டு காலமாய், களிமண், வைக்கோல், கல், மூங்கில் போன்றவற்றைப் பயன்படுத்தினான்; இன்னமும் மேலான பொருள்களையே தேடி ஆராய்ந்து, இறுதியில் அதைக் கண்டறியவும் செய்தான். விரைவாக கெட்டிபட இறுகும், உறுதி வாய்ந்த ராக்ஃபோர்ட் பிராண்ட் டால்மியா சிமெண்டைப் பயன்படுத்தி, இன்று அவன் கட்டிடம் எழுப்புகிறான்.



**ராக்ஃபோர்ட்**

பிராண்ட்

**டால்மியா சிமெண்ட்**

டால்மியா சிமெண்ட் (பாரத்) லிமிடெட்.,
பதிவு அலுவலகம் மற்றும் தொழிற்சாலை:
டால்மியாபுரம், தமிழ்நாடு.
தலைமையகம்: 4, சிந்தியா ஹவுஸ், புதுதில்லி-1

GOVAN

# கூட்டுக் கல்வி கூடாதா? — விவாத அரங்கு

எல்லாவற்றிலும் மேலைநாட்டுப் பழக்க வழக்கங்களை நாம் மேற்கொள்ள வேண்டிய அவசியம் என்ன வந்தது? நம் முன்னோர்கள் நல்லவை என்று கண்டுணர்ந்த நல்ல பழக்கங்களைக் கைவிட்டு விடுவானேன்? பெண் கல்வி அவசியமே. ஆனால் அவர்கள் ஆண்களுடன் சேர்ந்து கல்வி கற்க வேண்டியது அவசியமில்லை.

எனக்குத் தெரிந்து, ஓர் எட்டு வயதுப் பெண் ஆரம்பப் பள்ளியில் படிக்கிறாள். அது கூட்டுக் கல்வி நிறுவனம். மாதம் இருபது ரூபாய்க்கு மேல் சம்பளம் கட்டிப் படிக்கிற பள்ளி. 'பையன்களின் தொல்லை பொறுக்கவில்லை, எனக்கு அடுத்த ஆண்டு இந்தப் பள்ளியில் படிக்க விருப்பமில்லை' என்று தீர்மானமாகக் கூறுகிறாள் தன் தாயிடம். வயது வந்த மாணவர்கள் கல்லூரிப் பருவத்தில் இப்படிச் செய்ய மாட்டார்கள் என்று நீங்கள் சமாதானம் கூறலாம். ஆரம்பக் கல்விப் பருவத்திலேயே இந்த லட்சணத்தில் இருந்தால் போகப் போக இன்னும் மோசமாகக் கூடும் என்றுதான் எண்ணத் தோன்றுகிறது. இப்பிரச்னையைப் பொதுவாகப் பெண்களின் தீர்மானத்


திரு பி. வேங்கடராயலு

துக்கே விட்டாலும், அவர்கள் பெண்களுக்கென அமைந்த கல்லூரிக்கே போக விரும்புவார்கள். சூழ்நிலையால் தங்களுக்கு விளையக் கூடிய அபாயம் இருப்பதை உணர்ந்துள்ள எந்தப் பெண்தான் தன் அழிவைத் தேடிக்கொள்ள விரும்புவாள்? இயற்கையிலேயே 'வீக்கர் செக்ஸ்' (பலவீனமானவர்கள்) அவர்கள். பாதுகாப்பான இடத்தில் இருப்பதே உகந்தது. 'கெட்டுப்போன' பெண்ணை மணக்க யாராவது முன்வருவார்களா? மேலை நாடுகளை மற்ற விஷயங்களுக்கு மேற்கோள் காட்டுபவர்கள் இதற்குப் பதில் சொல்லட்டும். மேலை நாடுகளில் ஒரு பெண் பல தடவைகள்— ஐந்தாறு முறைகள் — திருமணம் செய்து கொள்வது சகஜம். இங்கு விதவா விவாகத்தையே நமது சமூகம் இன்னும் மனதார ஏற்றுக் கொள்ளவில்லை. இருபது வயதில் விதவையான பெண்கள் எஞ்சிய வாழ்க்கை முழுவதையும் தனித்தே வாழ வேண்டியுள்ளது. இந்த நிலையில் கூட்டுக் கல்வி என்ற விஷப் பரீட்சை ஏன்? பெண்களும் ஆண்களும் சேர்ந்து ஒரே கல்லூரியில் படித்தால், மாணவர்கள் 'டிப்–டாப்'பாக டிரஸ் செய்து கொண்டு போக விரும்புவது சகஜம். பெற்றோர்களுக்கு அதிகப்படியான செலவு வேறு! இன்னும் பெண் சிநேகிதிகள் (Girl friends) வேறு ஏற்பட்டு விட்டால் செலவைச் சமாளிப்பது யார்? ●

கூட்டுக் கல்வியால் சமுதாயம் பல வகைகளில் மேன்மையுற வழியுண்டு என்பது என் கருத்து. பெண்களோடு நெருங்கிப் பழகவோ, பேசவோ ஓர் இளைஞனுக்கு வாய்ப்பு இல்லாத வரையில் அவன் மனம் பெண்களைப் பற்றி ஏதேதோ ஆசைக் கனவுகள் கண்டு கொண்டிருக்கும். பெண் அவனுக்கு ஒரு மர்மமாக, புதிராகவே இருப்பாள். பெண்களுடன் நாலு வருடங்கள் சேர்ந்து படிக்கிற சந்தர்ப்பம் கிடைத்து விட்டால், இளைஞன் பெண்களைப் புரிந்து கொள்ளத் தொடங்கு


ஸ்ரீமதி பத்மா முத்தையா

வான். சிநேகம், சகஜ பாவம் வளர்ந்து விட்ட பிறகு பிரச்னைகள் எழ இடமில்லை.

பெண்களை மாணவர்கள் கேலி செய்கிறார்கள், பஸ்ஸிலும் பிற இடங்களிலும் தொந்தரவு கொடுக்கிறார்கள் என்று நீங்கள் கூறலாம். ஒரே கல்லூரியில் சேர்ந்து படிக்கும் வாய்ப்புக் கிடைத்த பிறகு மாணவர்கள் அவர்களை விரைவிலேயே மதிக்கக் கற்றுக் கொண்டு விடுவார்கள். மேலை நாட்டினரை விட நம்மவர்களுக்கு — ஹிந்துக்கள் கிறிஸ்தவர்கள், இஸ்லாமியர் யாராயிருந்தாலும் சரி- தெய்வ பக்தி அதிகம் என்பதை மறுக்க முடியாது. தெய்வ பக்தி உள்ளவர்கள் உடன் படிக்கும் பெண்களை அவமதிக்கவோ, அவமானத்துக்கு உள்ளாக்கவோ மாட்டார்கள்.

இரு வேறு துருவங்களில் இருக்கும் இரு பெரியவர்கள் எதிர்க்கும் அளவுக்கு இன்று சினிமா ஆபாசமாக உள்ளது. அதன் மூலம் கெட்டுப் போகாத இளைஞர்கள் கூட்டுக் கல்வியால்தானா கெட்டுப் போய் விடுவார்கள்?

அபூர்வமாக ஓரிரு மாணவ — மாணவியரிடையே காதல் ஏற்படலாம். அதிலுந்தான் என்ன தவறு? அதிக அளவில் தோன்றினாலும் என்ன குடி முழுகிவிடும்? நல்ல முறையில் திருமணத்துக்கு ஏற்பாடு செய்துவிடலாமே? வரதட்சிணைப் பிரச்னையும் தீரும். வரதட்சிணையால்தானே பல குடும்பங்கள் அழிகின்றன?

சாதி ஒழிப்புக்கும், தேசிய ஒருமைப்பாட்டுக்கும்கூட நாளடைவில் இது வழி வகுக்கும் அல்லவா? ஏழை மாணவியைப் பணக்கார வாலிபன் காதலித்து மணந்தால் ஏற்றத் தாழ்வு உணர்ச்சிகள் நீங்குமல்லவா? மனிதாபிமானம் குறைந்து 'மணி' (Money) அபிமானம் மக்களிடையே அதிகமாக நிலவும் இந்த நிலையில் கூட்டுக் கல்வி வரவேற்கத் தக்கதே. ●

பேட்டி: 'பாணன்'

லட்சக் கணக்கானோர்
பயன்படுத்துவது பிரஸ்டீஜ்
காரணம்-
பெரிய கொள்ளளவு,
துரிதமான சமையல்,
அதிகப் பாதுகாப்பு.




**Prestige**

விற்பனைக்குக் கிடைக்கும் எந்தக் குக்கரையும்விட
பிரஸ்டீஜ் சிறந்தது.

## அதிக இடம் கொண்டது




பிரஸ்டீஜின் மூடி வெளிப்புறம் பொருந்துகிறது. எனவே அதிக உணவைச் சமைக்க உள்ளே நிறைய இடம் கிடைக்கிறது.

சில குக்கர்களில் மூடி உள்புறம் பொருந்தி இடைஞ்சலாக இருக்கும். இதனால் அவற்றின் கொள்ளளவு குறைந்துவிடும்.

பிரஸ்டீஜ் பெரிய அடுக்குகள் கொண்டது. இதர குக்கர்களைவிட 1/3 அதிக இடம் கொண்டது.

## விரைவானது

பிரஸ்டீஜின் மூடியை எளிதில் பொருத்தி விடலாம். அது மிக அழுத்தமாகப் பொருந்தும். எனவே பிரஸ்டீஜ், உணவை விரைவாக தயாரிக்க உதவுகிறது.

சாதாரணமாக ஆகும் நேரத்தில் 1/3 அளவு நேரமே ஆகிறது. ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஏற்ப சரியான அளவுகளில் பிரஸ்டீஜ் கிடைக்கிறது. தேர்ந்தெடுக்க 6 வசதியான அளவுகள் உண்டு.

## பாதுகாப்பானது



ரப்பர் காஸ்கெட், மூன்று நிலை ரப்பர் பாதுகாப்பு அடைப்பான், உருகக்கூடிய உலோகப் 'பிண்டில்' சேர்ந்த பிரஸ்டீஜ் மிகப் பாதுகாப்பான பிரஷர் குக்கர்.

சில பிரஷர் குக்கர்களில் உருகக் கூடிய உலோகக் கலவை மட்டுமேயுள்ளது. ரப்பரை உபயோகிப்பதில்லை. இது முழு பாதுகாப்பு அல்ல.

வேறு அமைப்புகளிலுள்ள குக்கர்களில் ஆவியடித்து கைசுடக்கூடும். ஆனால் பிரஸ்டீஜ் அமைப்பு முழுப் பாதுகாப்பும் அளிக்கிறது.

மிக விரிவான அளவில் விற்பனைக்குப் பின் பராமரிப்புச் சேவை பெறுவது பிரஸ்டீஜ். பிரஸ்டீஜ்—ப்ரீத் உண்மையான மாற்றுப் பகுதிகள் நீண்ட காலத்துக்கு உழைக்கக் கூடியவை.

சரியானபடி உபயோகிக்கும்போது, ரப்பர் பகுதிகள் குறைந்தபட்சம் 2 ஆண்டுகள் நீடிக்கக் கூடியவை. தேய்மானத்துக்கு உட்படக்கூடிய இதர பகுதிகள் குறைந்தபட்சம் 5 ஆண்டுகள் உழைக்கக் கூடியவை.

— கைப்பிடியின் திருகுகள் இற்றுப் போகாமல் இருக்கும்வகையில் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டவை.

— பிரஸ்டீஜ் வாழ்நாள் முழுதும் உழைக்க உத்தரவாதம் உள்ளது.




இரண்டும் ஒன்றே

TTP-7331

அலுவலகத்திலிருந்து திரும்பிய பிச்சாமி உடை மாற்றிக் கொண்டு வெளித் தாழ்வாரத்தில் பிரம்பு நாற்காலியில் வந்து உட்கார்ந்தான்.

எதிரே காலியாகக் கிடக்கும் இடத்தைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்த பிச்சாமி விநாடி நேரம் கண்களை மூடினான்.

போகன்வில்லா, கிறிஸாந்திமம், பல வண்ணரோஜாக்கள்......

மூடிய கண்களுக்குள் இன்னும் என்ன வெல்லாமோ வந்து நின்றன. புதுப் புது ஆசைகள், பரபரப்பான நகர வாழ்வின் எத்தனையோ ஆடம்பர வாழ்க்கை வசதிகள்....! இப்போது எல்லாம் நிழல்கள். பிச்சாமிக்கு இன்னும் பதினேந்து வருஷ 'ஸர்வீஸ்' இருக்கிறது. அதற்குள் எல்லாம் நிஜமாகிவிடும் என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான்.

மீண்டும் பிச்சாமி கண்களைத் திறந்து மாலை வெய்யிலில் எதிரே இருந்த வெற்றுவெளியைப் பார்த்தபோது அதன் ஒரு மூலையில் ஒற்றைச் செடி அந்த விநாடியின் நிஜமாய்க் காட்சியளித்தது. துளசிச் செடி!

ரங்கன் வைத்துவிட்டுப் போனது.

''டேய்! அது என்னடா?'' ரங்கன் செடியை நட்டுவிட்டு அதற்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருக்கும் போது, புதிதாகப் பழகிக் கொள்ளும் ஓர் அலட்சியக் குரலில் கேட்டான் பிச்சாமி.

''துளசிச் செடி மாமா!''

''எதுக்குடா அது?''

''என்ன மாமா, இப்படிக் கேட்கிறீர்கள்? புது வீடு; புதுசாய்த் தோட்டம் போடணும். அதுக்கு முதல்லே துளசிச் செடியை நட்டால் நல்லது தானே மாமா? ரொம்பக் கஷ்டப்பட்டுத் தேடிக் கொண்டு வந்தேன் மாமா! ஏகாதசி அன்னிக்கு ஒரு தளம் இன்னிப் பெருமாளுக்கு....''

''சரி, சரி! எல்லாம் எனக்குத் தெரியும்.'' பிச்சாமிக்கு ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது. ரங்கன் அவன் முகத்தை நிமிர்ந்து பார்த்தவன் மேலே எதுவும் பேசாமல் நகர்ந்து விட்டான்.

'பிச்சாமி மாமாவுக்கு இதிலே ஏன் இத்தனை கோபம்?' — அந்தப் பன்னிரண்டு வயதுச் சிறுவனுக்கு எப்படிப் புரியும்? சே! வெறும் 'ஸெண்டி மெண்டல் பாய்!' புது டில்லி எங்கே, காவேரிக் கரை எங்கே? அப்பன் வரதராஜப் பெருமாள் கோயிலில் மடைப்பள்ளி ஸேவை செய்கிறவன் பிள்ளைக்கு வேறே என்ன தோன்றும்? ஏகாதசி, துளசி தளம்! பிச்சாமி அவசரமாய்ப் பார்வையைத் திருப்பிக் கொண்டான்.

இந்திய சர்க்கார் பிச்சாமியைப் போன மாதந்தான் டிபுடி செக்ரடரி அந்தஸ்துக்கு உயர்த்தியிருக்கிறது. இட்ட மந்திரியின் இலாகாவின் விஞ்ஞான பூர்வமான செயல் முறைகள், ஸோஷலிஸப் பொருளாதாரம் இவைகளைப் பற்றிய கவலைகளில் இப்பொழுது அவனுக்கு அதிகமான தொடர்பும் அக்கறையும் ஏற்பட்டுவிட்டன.

உத்தியோகத்தில் ஒரு நல்ல படிக்கட்டுக்கு வந்ததும் புதுக் கட்டடத்தையும் அவனுக்கு ஒதுக்கினார்கள். அந்தப் பழைய வீட்டை விட்டு வெளியேறிய பிச்சாமி 'மிடில் க்ளாஸ்' மனப்பான்மையையும் விட்டு வெளியேறிவிட வேண்டிய கால கட்டத்தைத் தான் அடைந்துவிட்டதைப் புரிந்து கொண்டான். ஏழைமையைக் கண்டு வெளியில் இரக்கப் படுவதுபோல் காட்டிக் கொண்டது போக, இனிமேல் அதை வெறுக்க வேண்டும். அதன் முடிவு — முதல் செயலாக்கம் — ரங்கனுக்கு ஆயிரத்து ஐந்நூறு மைல் ரயில் பிரயாணத்துக்கு ஒரு மூன்றும் வகுப்பு டிக்கெட்!

ரங்கன் இப்பொழுது பாதி தூரம் போயிருப்பான் தில்லியைவிட்டு, தான் நட்டு வைத்த துளசிச் செடியைவிட்டு.

போன வருஷம் பிச்சாமி கோமளத்தோடு தன் சொந்தக் கிராமத்துக்குப் போயிருந்தான். குறைந்தது இரண்டு வரு



ஷங்களுக்கு ஒரு தடவையாவது போய், 'டில்லியிலே எல்லாம் நான்தான்' என்று காட்டிக் கொள்வதில் இச்சாமிக்கு மனம் கொள்ளாத ஆத்மதிருப்தி; கோமளத்துக்கோ பிடிபடாத பெருமை.

ஊருக்குப் போன மூன்றும் நாள். பெருமாள் கோயிலுக்குப் போன இச்சாமியைப் பார்த்துவிட்டு மடைப்பள்ளியிலேயிருந்து ஓடி வந்தான் நரசிம்மன்.

''இச்சாமியா? வாப்பா ! லீவிலே வந்திருக்கியா ?'' என்று பத்து வயது வரைக்கும் ஒன்ருகக் கோலி விளையாடிய பந்தத்தை மறக்காமல் கொண்டாடினுன்.

பெருமாளையும் தாயாரையும் சேவித்துவிட்டு வந்ததும், ''இரு ! இதோ வந்துவிட்டேன்'' என்று நரசிம்மன் மடைப்பள்ளிக்குள் நுழைந்தான். அவன் மறுபடியும் வெளியே வரும்போது, வெட வெடவென்று ஒரு பன்னிரண்டு வயதுப் பையனும் கூடவே வந்தான்.

''இவன்தான் பெரிய பையன் ரங்கன்.''

''ஓ !''

ரங்கன் கையில் ஒரு பாத்திரம் இருந்தது. ''போடா ! மாமா பின்னுலே போய் இதை அவா அகத்திலே கொண்டு கொடுத்துவிட்டு வா'' என்று பையனையும் இச்சாமியோடு அனுப்பினுன்.

திருமண் தீட்டிய ரங்கனின் முகத்தை— அதில் ஏதோ இந்த நாட்டின் பொருளாதாரப் பிரச்னை, தந்சார்புக் கொள்கை அது இது என்று எல்லாமாகக் கூடியிருப்பது போன்ற நினைப்பில் — நோக்கினுன் இச்சாமி.

''ஒண்ணுமில்லே, மாமா ! சுவாமி பிரசாதம்'' என்று முன்னுல் நடந்தான் ரங்கன்.

கோமளம் ரங்கனேடு இரண்டு வார்த்தைகள் பேசியதுமே, ''கொஞ்சம் மளிகைக் கடைக்குப் போயிட்டு வரயாடா ?'' என்று கேட்டாள்.

பயல் உடனே தயாரர்ய்க் கிளம்பிவிட்டான். இரண்டு பைகள் நிறையச் சாமான் களைத் தூக்கிக் கொண்டுவந்து சேர்த்துவிட்டு, ''சரியாய் இருக்கிறதா மாமி?'' என்றுன்.

''பையன் தேவலே'' என்று சொன்னுன் இச்சாமி. தில்லியில் இது மாதிரி ஒரு பையன் இருந்தால் எத்தனை சௌகரியமாய் இருக்கும் ?



''அவனுக்குக் கீழே மூன்று பெண். இரண்டு தம்பிகள். சமர்த்தாய் இருந்தால்தானே பிழைக்க முடியும்?'' என்று அபிப்பிராயம் தெரிவித்தாள் கோமளம்.

ரங்கன் அடுத்த நாளும் வந்தான். பிஞ்சாய்க் கத்திரிக்காய் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தான். கோமளம் சொல்லாமலே கிணற்றிலிருந்து 'மங்கு, மங்கு' என்று தண்ணீர் கொண்டு வந்து கொட்டினான். அங்கேயே சாப்பிட்டான்.

''மாமி! டில்லி ரொம்பப் பெரிய ஊராமே?''

ரங்கனின் கேள்வியிலேயே ஒரு பரபரப்பான ஆசை தொனித்தது.

''ஆமாம்டா! நம்ம தேசத்திலேயே பெரிய ஊர்.''

''மாமாவுக்குப் பெரிய வேலையாமே, மாமி?''

''ஆமாண்டா.''

''அங்கே உங்களுக்கு வீட்டு வேலையெல்லாம் செய்ய வேலைக்காரன் இருக்கானா?''

''ஏண்டா ரங்கா, இதெல்லாம் விசாரிக்கிறே?''

''சும்மாத்தான் கேட்டேன்.''

கொஞ்ச நேரத் தயக்கம்.

''எனக்கு அங்கே வந்து ஊரெல்லாம் பார்க்கணும்னு ஆசையாய் இருக்கு, மாமி!''

'டில்லியில் இது மாதிரி ஒரு பையன் இருந்தால்?' என்ற எண்ணம் கோமளத்துக்கும் ஏற்பட்டிருந்தது. இப்போது அது உறுதிப்பட்டது.

''ஏண்டா ரங்கா! எங்களோட நீயும் வரயா?''

''வரேன், மாமி! அப்பாவையும் கேட்கணும். நான் கேட்டால் என்ன சொல்வாரோ? நீங்க மாமாவையே விட்டுக் கேட்கச் சொல்லுங்கோ.''

கோமளமும் கிச்சாமியும் பேசி முடிவு செய்தார்கள்.

''ரங்கன் நன்றாய் ஓடி ஓடி எல்லாம் செய்கிறான். இது மாதிரி அங்கே கிடைக்கிறது கஷ்டம். சாப்பாடு போட்டுத் துணிமணி வாங்கிக் கொடுத்து விடலாம். கேளுங்கோ?'' என்றாள் கோமளம்.

நரசிம்மன் உடனே ஒப்புக் கொண்டுவிட்டான். ''உன் தயவிலே பயல் எல்லாம் பார்த்துவிட்டு வரட்டுமே!'' தெருவில் இன்னும் நாலு பேர்கள் அதைப் பெரிய உபகாரமாய்ப் பாராட்டினார்கள்.

ரங்கன் டில்லிக்கு வந்து ஒரு வருஷம் ஆகிவிட்டது.

அப்பொழுது ரங்கன் மிகவும் உதவியாய் வந்து சேர்ந்த சில நாட்களிலேயே ஒரு தவிர்க்க முடியாத தேவையாய்க்கூட இருந்தான். ஆனால் —

கிச்சாமி புதிய பதவிக்கும், புதிய வீட்டுக்கும் வந்து சேர்ந்ததும் கோமளத்துக்குப் புதிய சிநேகிதிகள் ஏற்பட்டார்கள். மாலதி பாஸ்கரன் வந்தபோது ரங்கன் வழக்கம் போல் கோமளத்தை, ''மாமி! மாமி!'' என்று கூப்பிட்டது, கோமளத்துக்கே என்னமோ போல் இருந்தது.

''பையன் உங்களுக்குச் சொந்தமா?'' என்று கேட்டுவிட்டாள் மாலதி.

''இல்லே.....'' என்று கோமளம் தயங்கினாள்.

''எங்கப்பாவும், இந்த மாமாவும்....'' என்று ஆரம்பித்தான் ரங்கன்.

அவனைப் போய்க் காப்பி கொண்டு வரச் சொல்லிவிட்டு, ''எங்க ஊர்ப் பையன். அவன் அப்பாவுக்கு மாசம் ஐம்பது ரூபாய் அனுப்புகிறோம்'' என்று எதையோ சொல்லிச் சமாளித்தாள் கோமளம். இருந்தாலும் தன்னுடைய புதிய சிநேகிதி தன்னை ஒரு மாதிரி பார்த்தது போலிருந்தது. தன் பேச்சை நம்பவில்லையோ என்று சந்தேகமாய் இருந்தது.

இதைப் பற்றி அன்று மாலையிலே கணவனும் மனைவியும் விவாதித்தார்கள். ''ஆமாம்! அவள் திருமண்ணும் அவளும்! எங்கே போனாலும் இதுகள் மூட நம்பிக்கையை விடாதுகள்'' என்று புதிய 'விஞ்ஞானபூர்வமான பொருளாதாரப் பார்வை'யில் விமரிசனம் செய்தான் கிச்சாமி.

கோமளம் சிந்தித்துப் பார்த்தாள். ரங்கன் இருப்பது சௌகரியமாய்த்தான் இருக்கிறது; கவலைப்படாமல் நினைத்தபடி வெளியே போய்வர முடிகிறது. இதற்கெல்லாம் அவள் ஆள் வைத்துக் கொண்டால் செலவும் ஆகும்; தொல்லைகளும் உண்டாகும். ஆனால்.... இவற்றையெல்லாம்விட ஏதோ முக்கியமான ஒன்றை இழப்பது போன்ற மனத் தவிப்பு அவளுக்கு உண்டாகிவிட்டது.

''ஏதோ நம்மால் முடிந்தது ஒரு வருஷம் வைத்துக் கொண்டுவிட்டோம். இதற்குமேல் இதுகளுக்கெல்லாம் நாம் இரக்கப்பட்டுக் கொண்டிருக்க முடியாது'' என்று சொல்லிவிட்டாள் கோமளம். கிச்சாமி இதற்காகத்தான் காத்திருந்தான், ரங்கனை ஊருக்கு ரயிலேற்றி அனுப்பிவிட்டான்.

கோமளமும் கிச்சாமியும் ஏதோ சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். இடைவேளை இசையை அமுக்கிவிட்டு ரேடியோவில் செய்தி அறிக்கை ஒலித்தது: ''சென்னை செல்லும் துரித வண்டி நடு வழியில் தடம் புரண்டு முதல் இரண்டு பெட்டிகள் முற்றிலும் சேதமுற்றன.''

''என்னது?'' இருவருமே அதிர்ந்தனர்.

''அந்த வண்டிதானா?'' என்று கேட்டாள் கோமளம்.

''ஆமாம்.... வந்து இரண்டாவது பெட்டியில்தான் ரங்கனை ஏற்றிவிட்டேன்.''

மௌனத்தைக் கலைக்க இருவருமே முனையாமல் உட்கார்ந்திருந்தார்கள். விபத்தின் விவரங்களைச் செய்தி அறிக்கை தொடர்ந்து சொல்லிக் கொண்டே போயிற்று.

''நாம் என்ன செய்ய முடியும்? புதிதாய் நிறையத் துணிகள் வாங்கிக் கொடுத்தோம். செலவுக்கும் பணம் கொடுத்து அனுப்பினோம்.'' கோமளம் செய்தி முடிந்ததும் மெதுவாகச் சொன்னாள். ''அதுதான் அவன் தலையெழுத்து!''

''தலையெழுத்தா? பெரிசாய்த் தினம் பூஜை எல்லாம் பண்ணினானே?''

''அது சரி! உங்கள் சிநேகிதர் நரசிம்மனுக்கு விவரம் எப்படித் தெரியும்?''

# இழுதிறன் கொண்ட உறுதி!

எப்பொருளையும் கட்டி வைக்க
என்றும் பயன்படுத்துங்கள்..
ஆந்திரப் பிரதேஷ்
பேப்பர் மில்ஸ் காகிதம்....
அதன் உறுதியான கட்டமைப்பு,
உங்கள் பொருளைப்
பத்திரமாகப் பாதுகாக்கிறது.



**ஆந்திரப் பிரதேஷ் பேப்பர்**
(வெஸ்ட் கோஸ்ட் பேப்பர் கம்பெனியுடன
தொழில்நுட்ப கூட்டுறவு கொண்டது).
ரிஜிஸ்டர்ட் அலுவலகம் & மில்ஸ்: ராஜமுந்திரி (ஆ.பி.)
பம்பாய் அலுவலகம்: ஸ்ரீனிவாஸ் ஹவுஸ், ஹஸாரிமால் ஸோமானி மார்க்.
ஹைதராபாத் அலுவலகம்: 1 2-33/2, மதுபன், ககன் மஹல் ரோடு.

mcm/app/9 tam

'' ரங்கன் இந்த வண்டியில் வருகிறான் என்று தபால் எழுதியிருக்கிறேன். இதே செய்தி அங்கேயும் ஒலிபரப்பாகி இருக்கும். நாளைக்குப் பேப்பரில் எல்லாம் வரும்.''

''இருந்தாலும்...'' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

''எல்லாம் நாளைக்குப் பேசிக் கொள்ளலாம். நான் விசாரித்துக் கொண்டு வருகிறேன்'' என்று அவள் பேச்சை முடித்து விட்டான் பிச்சாமி.

மறு நாள் ரயில்வே அதிகாரிகளை விசாரித்தான் பிச்சாமி. அடையாளம் காண முடியாத பல உடல்கள் கிடைத்திருக்கின்றனவாம்.

''அப்படியானால் என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று கேட்டாள் கோமளம்.

'' நரசிம்மனுக்கு நம் அனுதாபத்தைத் தெரிவித்து ஒரு கடிதம் எழுதுகிறேன். அதோடு கொஞ்சம் பணமும் அனுப்பலாம்.''

'' தாராளமாகவே அனுப்பி விடுங்கள். அப்போதுதான் ஊரில் நாலு பேர்கள் நம்மைப் பற்றி நல்லபடியாகப் பேசுவார்கள்.''

'' ஆயிரம் ரூபாய் அனுப்பி விடட்டுமா?''

கோமளம் ஒப்புக் கொண்டாள்.

'' நரசிம்மன் ஏதாவது தபால் எழுதினால் அப்புறம் மேற்கொண்டு ஏதாவது அனுப்புவோம்'' என்று தாராளமாகச் சொல்லி வைத்தான் பிச்சாமி.

**ப**த்து நாட்களுக்குப் பிறகு, பிச்சாமி புதிதாய் வந்த தோட்டக்காரன், வீட்டின் முன்புறத்தில் வேலை செய்ய ஆரம்பிக்கும் போது பக்கத்தில் நின்று பார்த்தான்.

தபால்காரர் ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போனார். கோணல் — மாணலாய் விலாசம் எழுதிய உறை.

''நரசிம்மன் தண்டம் சமர்ப்பித்து எழுதிக் கொண்டது. பெருமாள் கிருபையால் ரங்கன் தப்பிப் பிழைத்து நல்லபடியாய் இங்கே வந்து சேர்ந்துவிட்டான். இது உனக்கு ரொம்பவும் ஆச்சரியமாய் இருக்கும். ஆனால்—''

''யார் தபால் எழுதியிருக்கா ?'' என்று கேட்டுக் கொண்டு வந்தாள் கோமளம்.

'' நரசிம்மன் ! ரங்கன் வந்து சேர்ந்து விட்டானாம்.''

'' என்ன?''

பிச்சாமி தொடர்ந்து படித்தான்.

''நீ ரொம்பவும் மன வருத்தம் அடைந்து கவலைப்பட்டிருப்பாய்..... ரங்கன் அவ்விடத்தைப் பற்றியே பெருமையாய்ப் பேசிக் கொண்டிருக்கிறான். தோட்டத்தில் துளசிச் செடி ஒன்று வைத்துவிட்டு வந்தானாம்....''

'சே! இப்பவும் அந்தச் செடி நினைப்புத் தானா? சுத்த அபத்தம் ! ஸெண்டிமெண்டல்!' — பிச்சாமியின் வாய் முணுமுணுத்தது. அவனுடைய கையிலிருந்த கடித உறை நழுவியது. அப்போது அதற்குள்ளிருந்து மற்றொரு காகிதம் விழுந்தது. காற்றில் பறந்த அதைக் கோமளம் குனிந்து எடுத்தாள்.

'' நீங்க அனுப்பிய ஆயிரம் ரூபாய் செக் திரும்பி வந்திருக்கு.''

பிச்சாமியின் காதில் அவள் பேச்சு விழவில்லை. ஆனால் அவன் பார்வை அந்தச் 'செக்' போய் விழுந்த இடத்தில் நிலைத்தது.

அங்கே இலைகளெல்லாம் உலர்ந்து சருகுகளாய் உதிர்ந்த பிறகு வெறும் குச்சியாய் நின்றது ஒரு செடி — துளசிச் செடி !

''வேறே ஒரு துளசிச் செடி கொண்டு வந்து வைக்கணும் '' என்றாள் கோமளம்.

'கடைசியில் நீயும் வெறும் ஸெண்டிமெண்டல் பெண்தானா ?' என்று பிச்சாமி அவளைக் கேட்கவில்லை.

---

## ஒலிம்பிக் அதிசயங்கள் !

■ ஜப்பானில் அணுகுண்டு விழுந்ததால் பாதிக்கப்பட்ட ஹிரோஷிமாவிலிருந்து மூன்று இளம் சிறுவர்கள் ''நாங்கள் ஒலிம்பிக் போட்டிகளைக் காண ஆசைப்படுகிறோம். எங்களுக்கு உதவி செய்வீர்களா?'' என்று உருக்கமாக மேற்கு ஜெர்மனி ஜனாதிபதிக்குக் கடிதம் எழுதியிருந்தனர். பச்சிளம் பாலகர்களின் மனத்திலுள்ள ஆசையைத் தீர்த்து வைக்க மேற்கு ஜெர்மனி ஜனாதிபதி விரும்பினார். மூன்று சிறுவர்களையும் அழைத்து வர விமானம் பறந்தது. அம்மூன்று சிறுவர்களும் ஒலிம்பிக் விளையாட்டுக்களைக் கண்டு களித்தார்கள்.

■ ஒலிம்பிக் விளையாட்டைக் காணவந்த மக்களின் தொகை ஒரு ரிகார்டு: நான்கு மில்லியன்.

■ மியூனிக்கில் உருவான பிரும்மாண்டமான ஒலிம்பிக் நகரில் ஒரு விளையாட்டுக் கல்லூரியை நிறுவ மேற்கு ஜெர்மானியர் உத்தேசித்திருக்கிறார்கள்.

■ ஒலிம்பிக் போட்டிகளைப் பற்றி விமர்சனம் செய்ய 4,200 நிருபர்கள் வந்திருந்தார்கள்.

■ ஒரு போட்டியில் இரு ஓட்ட வீராங்கனைகள் ஒருவரோடொருவர் இணையாக ஓடிக் கொண்டிருந்தனர். தன்னோடு நெருங்கிவந்த ஓட்ட வீராங்கனை வெற்றி பெற்றுவிட்டாள் என்று அறிவித்ததும் தோல்வியுற்ற பெண்மணி அங்கலாய்த்தது : ''இதயமில்லாத கம்ப்யூட்டர் ஒழியணும் !''

ஆம்! அந்தக் கம்ப்யூட்டர் அந்த இரு பெண்மணிகளுக்குள்ளும் இடையேயுள்ள நேர வித்தியாசத்தை 1/1000 நிமிஷம் என்று காட்டி வெற்றியை நிர்ணயித்துவிட்டது.

■ பம்பாயில் இறங்கியதும் இந்த விளையாட்டு நிருபரிடம் கஸ்டம்ஸ் அதிகாரிகள் கேட்ட முதல் கேள்வி : ''அராபியர் இஸ்ரேல் ஆட்டக்காரர்களைக் 'கடத்தல்' செய்ய உண்மைக் காரணம் என்ன?''

-''ஹிந்து'' விளையாட்டுப் பகுதி ஆசிரியர் கே. சுந்தரராஜனின் 'ஒலிம்பிக்' பற்றிய பேச்சிலிருந்து தொகுத்தவர்: பி.எஸ்.எம்.



அவளுக்கு
இளமையிலேயே
கற்பியுங்கள்



# தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.

ஈறுகளை உறுதியுடனும் ஆரோக்கியத்துடனும் வைத்திருக்க, அவற்றைத் தினமும் தவறாமல் தேய்த்துக் கொடுப்பது சிறந்த வழி என்று பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள். அது போலவே, பற்சிதைவைத் தடுக்கும் சிறந்த வழி, இரவிலும் காலையிலும், ஒவ்வொரு முறை உணவருந்திய பின்னும், தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, பற்சிதைவைத் தோற்றுவிக்கும் உணவுத் துகள்களை அகற்றுவது. தவறாமல் போர்ஹேன்ஸால் பற்களைத் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுக்க, உங்கள் குழந்தைக்குக் கற்பியுங்கள். ஏனெனில், போர்ஹேன்ஸ் பற்பசை பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப் பட்டது.

**போர்ஹேன்ஸ் பற்பராமரிப்பு பற்றிக் கற்பிக்க இதுவே தக்க வயது.**




---

**இலவசம்** "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்* பெற, 25 பைசா தபால் தலையுடன் (தபால் செலவுக்காக) கீழ்க்கண்ட கூப்பனை 'மானர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய்-1' என்னும் முகவரிக்கு அனுப்புக.

K6

பெயர் ____________________ வயது __________

முகவரி ______________________________

*விரும்பும் மொழியின் கீழ் கோடிடவும்—ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

101F-81-172 TM

வட்ட மேஜை

# ஐயா, கணியன் பூங்குன்றனாரே!

ஐயா கணியன் பூங்குன்றனாரே! நீர்பாட்டுக்கு எத்தனையோ நூற்றாண்டுக்கு முன்பு ஒரு பாடலை எழுதி வைத்துப் போய்விட்டீர். அதன் முதல் அடியை வைத்துக் கொண்டு 'ஓஹோஹோ!' என்று பண்பு பேசுகிறோம். நடத்தை வேறு மாதிரி இருக்கிறது!

''யாதும் ஊரே, யாவரும் கேளிர்!'' என்று சொல்லிவிட்டீர்! கூலிக்குப் பிழைக்கப் போன வரை அந்நியர் என்று விரட்டுகிறார்கள் இலங்கையிலும் உகாந்தாவிலும்.

மொழிவாரி மாநிலங்களைப் பிரித்தோம். ஒரே மொழி பேசுவோரிடையே கூட 'அன்னியர்' உண்டு என்பதைப் புலப்படுத்தினோம்— தெலுங்கானா, ஹரியானா கிளர்ச்சிகளால்.

அந்தந்தப் பகுதி மண்ணிலே பிறந்தவருக்குத்தான் அங்கங்கே தொழில் புரிய உரிமை உண்டு, வேலை வாய்ப்பு உண்டு என்று கிளர்ச்சி நடக்கிறதே இப்போது. தங்கள் வாக்கையும் இந்தப் போக்கையும் ஒப்பிட்டால்?

வரும் நாட்களில் அந்தந்த ஊரினர் பக்கத்து ஊர்க்காரரை 'அன்னியரா'கக் கருதக் கூடும்; ஒரு தெருக்காரன், அடுத்த தெருக்காரனை அன்னியனாகக் கருதலாம்!

ஐயா கவிஞரே, தங்கள் அரும் பெரும் வாக்கு பொய்யாகிவிட்டதா? அல்லது.... ஒருவேளை....

''யாது உம் ஊரே?
யாவர் உம் கேளிர்?''

என்று பொருள்படத்தான் எழுதி வைத்தீரோ, அன்றைக்கு?

சென்னை—4
29—9—72 அ. ஆசீர்வாதம்

இப்பொழுது நியாய விலைக் கடைகளில் அஸ்கா ரூ. 1—85க்கு விற்கப்படுகிறது. நியாய விலைக் கடைகள் என்று அழைக்கப்படும் இக்கடைகள் விலையில் மட்டும்தான் நியாய விலைக் கடைகளா, எடையில் அநியாய எடைக் கடைகள்தாமா என்று கேட்கத் தோன்றுகிறது. ஏனென்றால் 2 கிலோ சர்க்கரை வாங்கினால் ஒன்றே முக்கால் கிலோ சர்க்கரைகூடத் தேறுவதில்லை. அவ்வளவு நியாயமாக இக்கடைகளில் சர்க்கரை நிறுத்துப் போடுகின்றனர். இரண்டு கிலோவுக்குக் கால் கிலோ வீதம் மீதமாகும் சர்க்கரை எங்கே போகிறது?

மேலும் இரண்டு கிலோ சர்க்கரை வாங்கிக் கொண்டு நான்கு ரூபாய் நோட்டுக்கள் கொடுத்தால், 30 ந. பை. சில்லறை கொடுப்பதற்குப் பதிலாக நமக்கு வேண்டாத சோப்புக்கட்டி ஒன்று நம் தலைமீது சுமத்தப்படுகிறது. எனவே, 'வேதாளம் மறுபடியும் முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டது' என்றபடி, பழைய ரேஷன் கடை அட்டூழியங்களெல்லாம் மீண்டும் ஆரம்பித்துவிட்டன!

அதோடு அக்டோபர் முதல் அஸ்காவின் 'நியாய விலை' இரண்டு ரூபாயாமே!

குமாரபாளையம்
1—10—72 'கருணன்'

தமிழ்நாட்டிலும் மற்ற மாநிலங்களிலும் எத்தனையோ பொதுக் காரியங்களுக்கும் அறப் பணிகளுக்கும் நிதி திரட்டுவதையும் செலவிடுவதையும் பார்க்கிறோம். கேள்விப்படுகிறோம். ஆனால் தஞ்சை மாவட்டத்தில் மிகவும் வசதி படைத்த சட்ட மன்ற உறுப்பினர் ஒருவர் ''கார் நிதி'' திரட்டி இதுவரை கார் வாங்காமல் பணத்தை எடுத்துக் கொண்டு விட்டார். மேலும் தற்சமயம் அவருக்குக் கல்யாணம் நடக்க இருப்பதால் அதற்குக் ''திருமண நிதி'' என்று ஓர் அதிசய நிதி திரட்ட முற்பட்டிருக்கிறார்! பொது மக்களுக்குச் சேவை செய்வதாகவும், கீழ்நிலை மக்களின் முன்னேற்றத்துக்குப் பாடுபடுவதாகவும் கூறுவது வெறும் ஏமாற்று வித்தை போலும்! இவரைப் போன்றவர்கள் தி. மு. க.வின் பெயரைக் கெடுக்க வந்தவர்கள்தான்.

திருப்பயித்தங்குடி.
5—10—72 எஸ். சொக்கலிங்கம்

பெங்களூரில் நடைபெற்ற அகில இந்திய விவசாயிகள் சம்மேளனம் நில உச்ச வரம்பால் விளையும் தீமைகளை உணர்ந்து எச்சரித்துள்ளது.

ஐந்து பேர்கள் கொண்ட ஒரு விவசாயக் குடும்பத்துக்குப் பதினைந்து ஏக்கர் என்றும், சில மாநிலங்களில் பத்து ஏக்கர் என்றும், அமுல்படுத்தப்படுகின்றது. உபரி நிலத்துக்குப் பெயரளவில் நஷ்ட ஈடே தவிர அது உண்மையில் நஷ்ட ஈடாகாது. பரம்பரையாக நிலத்தைப் பண்படுத்தி ஏராளமானமுதலீடுசெய்து விவசாயத்தையே நம்பி வாழும் ஒரு விவசாயிக்கு 2 ஏக்கர் நிலம் வைத்துக் கொள்ளத் தான் உரிமை என்பது அநீதியாகும். அவன் சந்ததிகள் அதை அடையும்போது தலா 0.50 செண்ட் நிலம்கூடக் கிடைக்காதென்பது பரிதாபத்துக்கு உரியது.

இம்மாதிரிக் கட்டுப்படியாகாத நிலையில் கொண்டு வைத்து விவசாயிகளை அழிப்பது தான் நில உச்ச வரம்பை விதித்திருப்பதன் நோக்கம்.

உணவு உற்பத்தி பாதிக்கப்படும் நிலை வரும்போது நிலம் முழுதும் அரசாங்கம் எடுத்துக்கொண்டு, ஆயிரம், இரண்டாயிரம் ஏக்கருக்கு ஒரு பண்ணையாக ஏற்படுத்தி அதில் நில உடைமையாளர்களைக் கூலியாட்களாக நியமித்து, ரஷியா பாணியில் கட்டாய வேலை வாங்கும் நாள் விரைவில் வரும். இந்திரா அரசாங்கம் மறைமுகமாக மக்களை கம்யூனிஸ சித்தாந்தத்துக்கு அழைத்துச் செல்வதை மக்கள் உணர வேண்டும்.

சின்னப்பள்ளிபாளையம்,
5—10—72 வி. மாரப்ப கவுண்டர்

ஆண்மை—
திடவடிவம்,
தீரம், திறமை,
கம்பீரம்.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த
படைப்பு
'எஸ்டர்காட்'




எஸ்டர்காட்®

ஆண்மகன் இதோ ஆளவருகிறான். எங்கும் அவன் செங்கோல். 'எஸ்டர்காட்' அவன் உடுப்பு.
'எஸ்டர்காட்' பாலியெஸ்டர் இழைகலந்த காட்டன் சூட்டிங்குகள். தவிர, 'மெஃப்ரின்' 100% பாலியெஸ்டர் சேலைகள், பாலியெஸ்டர் இழைகலந்த உடுப்புத் துணிகள்; 'டெரோஸெல்' பாலியெஸ்டர் இழைகலந்த காட்டன் ஷர்ட்டிங்குகள்.

**மபத்லால் க்ரூப்**

AIYARS-M.300 TM

# சத்திய வெள்ளம்

## நா. பார்த்தசாரதி

### பதினோராவது அத்தியாயம்

மேரி தங்கத்தின் தற்கொலை பற்றியும், மாணவர்களின் உண்ணாவிரதம் பற்றியும், பிற கோரிக்கைகள் பற்றியும் மதுரையிலிருந்தும், சென்னையிலிருந்தும் வெளிவருகிற எல்லாத் தினசரிகளிலுமே விரிவாகச் செய்திகள் பிரசுரிக்கப்பட்டு விட்டதால் பிரச்னை நாடளாவியதாக மாறிவிட்டது. மல்லிகைப்பந்தலைச் சேர்ந்த மாணவர்களின் கோரிக்கைகளை ஆதரித்து சென்னை, மதுரை, கோவை, திருச்சி, நகரங்களின் மாணவர்களும், அநுதாப ஊர்வலங்களும், கூட்டங்களும் நடத்தினார்கள். மிகவும் துணிவுள்ள சில பத்திரிகைகள், 'மேரி தங்கத்தின் தற்கொலைக்கு மந்திரியின் உறவினரான ஒரு விரிவுரையாளர்தான் காரணம் என்று மல்லிகைப்பந்தல் மக்களிடையே பரவலாக ஒரு பேச்சு இருப்பதை' மறைக்காமல் முன்வந்து பிரசுரித்திருந்தன. பல்கலைக் கழகத்தைக் காலாண்டுத் தேர்வுக்கும் முன்பே மூடி, விடுமுறையையும் விட்டுவிட்டதால் பெரும்பாலான வெளியூர் மாணவர்கள் மூடிய ஐந்தாறு தினங்கள் வரை விடுதிகளுக்கு வெளியே அலைக்கழிக்கப்பட்டு ஊர் திரும்பியிருந்தனர். மாணவர்களின் உண்ணாவிரதம் மிகவும் தந்திரமாகவும் சமயம் பார்த்தும் ஒடுக்கப்பட்டதை எதிர்க்கப் போதுமான எண்ணிக்கை பலமுள்ள அளவு மாணவர்கள் அப்போது அங்கே பல்கலைக் கழக நகரத்துக்குள் இல்லை. முந்நூற்றொன்பதாவது செக்ஷன்படி கைது செய்யப்பட்ட மாணவ மாணவிகளுக்கு இன்ஜெக்ஷன் மூலம் உணவுச் சத்து அளித்து அவர்களுடைய உண்ணா நோன்பை அரசாங்கமே முறித்துவிட்டது. ஐ. பி. சி. 309ன்படி பல்கலைக் கழக வாயிலில் உண்ணாவிரதம் இருந்தவர்கள் கைது செய்யப்பட்ட மாலை வேளையில் உடனே நகரப் பொதுமக்களிடமும், பெற்றோர்கள், தொழிலாளர்களிடமும் ஏற்பட்ட குமுறலையும்கொதிப்பையும் கூடப் போலீசார் தடையுத்தரவின் மூலம் ஒடுக்கி விட்டார்கள். தடையை மீறியும் அவர்கள் பொதுக் கூட்டம், ஊர்வலம் நடத்தத் துணிந்திருந்தார்கள். 'கட்சிச் சார்புள்ள அரசாங்கத்தினர் சட்டங்களையெல்லாம் தீயவர்களிடமிருந்து நல்லவர்களைப் பாதுகாப்பதற்குப் பயன்படுத்துவதைவிடத் தங்கள் கட்சியையும் ஆட்சியையும் எதிர்ப்பவர்களிடமிருந்து தங்களை மட்டுமே பாதுகாத்துக் கொள்ளப்பயன்படுத்தி விடுகிறார்கள். பெரும்பாலான சமயங்களில் சட்டங்களால் பொது மக்கள் பாதுகாக்கப்படுவதில்லை. ஆட்சிகளும் ஆள்பவர்களுமே பாதுகாக்கப்படுகிறார்கள்' என்ற உணர்வு அப்போது மல்லிகைப்பந்தல் நகர் முழுவதும் பரவியிருந்தது. அந்த நகரத்தில் அப்போது ஏற்பட்டிருந்த குமுறலையும் கோபத்தையும் போலீசாரின் தடையுத்தரவு மட்டுமின்றி இயற்கையும் வேறு சேர்ந்து கொண்டு தடுத்துவிட்டது. மாணவ மாணவிகள் கைது செய்யப்பட்டு ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்ட தினத்தன்று இரவே மழை பிடித்து விட்டது. மற்ற நகரங்களில் வரும் மழைக் காலத்துக்கும், மல்லிகைப்பந்தலைப் போன்ற மலை நாட்டு நகரம் ஒன்றில் வரும் மழைக் காலத்துக்கும் வேறுபாடு இருந்தது. மல்லிகைப்பந்தல் நகரில் வரும் மழைக் காலம் என்பது தொடர்ந்து சில மாதங்களுக்கு நகரின் பொது வாழ்க்கையையே அடங்கச் செய்து விடக் கூடியது. புறாக் கூடுகளில் ஒடுங்கும் புறாக்களைப் போல் மக்கள் கம்பளிப் போர்வைகளிலும் உல்லன் கோட்டுகளிலும் நனையாத மழை அங்கிகளிலும் கணப்புக்கள் கதகதப்பாக எரியும் வீடுகளிலும், அறைகளிலுமே தங்கிவிடக் கூடிய காலம் அது. இந்த மாதங்களில் பல்கலைக் கழகத்திலிருந்து நகருக்குள் வருவதும், நகரிலிருந்து பல்கலைக் கழகத்துக்குள் போவதும் குறைந்து விடும். பல்கலைக் கழகம் மிக மிக அமைதியானதொரு தனி நகரம் போல் விலகித் தெரியும். போராட்டங்கள், பூசல்கள், அதிகம் நடக்க முடியாத மாதங்கள் இவை.

பல்கலைக் கழக மைதானமும், பூங்காக்களும், ஏரியும், படகுத் துறையும் மரத்தடிகளும் ஆளரவமின்றி — மௌனமாக அடைமழையில் குளித்துக்கொண்டிருக்கக் கூடிய இந்த மாதங்களில் வகுப்பறைகளில், பரிசோதனைக் கூடங்களில், நூல்நிலைய நாற்காலிகளில் விடுதி அறைகளில் மாணவர்களை நிறையப் பார்க்க முடியும். எங்கும் ஒருவித அமைதி தென்படும். இந்த மழைக் காலத்து மாதங்களில் பல்கலைக் கழகமும், நகரமும் ஆரவாரமோ, கலகலப்போ இன்றி மிகவும் 'ஸீரியஸ்ஸாக' இருப்பது போல் தோன்றுவதை முதற் பார்வையிலேயே யாரும் சுலபமாகப் புரிந்து கொண்டு விட முடியும். மழைக் காலத்தின் அடையாளமே இதுதான்.

ஆனால் இந்த ஆண்டிலோ மழையே சில வாரங்கள் தாமதமாகத்தான் தொடங்கியிருந்தது. இதே மழை நான்கைந்து தினங்களுக்கு முன்பாகத் தொடங்கியிருக்குமேயானால் பாண்டியனும் மற்ற மாணவ மாணவிகளும் உண்ணாவிரதத்துக்காகக் கொட்டகை போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கவே முடியாமற் போயிருக்கும். போலீஸார் அவர்கள் மேல் 'தற்கொலை செய்து கொள்ள முயற்சி' என்ற குற்றத்தைச் சுமத்திக் கைது செய்த இரவே மழை பிடித்துக் கொண்டதனால் அடுத்த இரண்டு தினங்களில் எதையும் யாரும் செய்ய முடியவில்லை.

மூன்றும் நாள் துணைவேந்தர் சென்னையிலிருந்து திரும்பியிருந்தார். பல்கலைக் கழக 'சிண்டிகேட்' அந்த வாரத்திற்குள் மிகவும் முக்கியமாகச் சந்திக்கப்போகிறது என்ற செய்தியும் நம்பத்தகுந்த வட்டாரங்களில் பேசப்பட்டுக் கொண்டிருந்தது. துணைவேந்தர் அவசர அவசரமாகப் பல்கலைக் கழகத்தை மூடியதும், விடுதிகளைக் காலி செய்து மாணவர்களை விரட்டியதும் உடனே மாநிலத் தலைநகருக்குச் சென்றதும், திரும்பிய உடன் வரப்போகிற பட்டமளிப்பு விழாவுக்கு முன்பாக நல்ல மழைக் காலத்தில் அங்கே சிண்டிகேட் கூட்டத்தைக் கூட்டியிருப்பதும் சந்தேகத்துக்குரிய காரியங்களாக மற்றவர்களுக்குத் தோன்றின. பொது மக்களிடையேயும், மாணவர்களிடையேயும் பல வதந்திகள் உலாவின. அவர்கள் ஏதேதோ பேசிக் கொண்டார்கள்.

உண்ணாவிரதப் பந்தலிலிருந்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்ட பன்னிரண்டு பேரில் மாணவிகள் ஆறு பேரையும் இரண்டாம் நாளோ, மூன்றாம் நாளோ விடுவித்து விட்டார்கள். அதற்குள்ளேயே பத்திரிகைகளில் செய்தியைப் பார்த்துவிட்டு உண்ணாவிரதம் இருக்கும் மகளின் நிலைமையை அறிவதற்காகக் கண்ணுக்கினியாளின் தந்தை கந்தசாமி நாயுடு மதுரையிலிருந்து புறப்பட்டு வந்திருந்தார்.

கந்தசாமி நாயுடு மல்லிகைப்பந்தல் பஸ் நிலையத்தில் வந்து இறங்கினவுடன் நேரே அங்கிருந்து அண்ணாச்சி கடைக்குத்தான் போய்ச் சேர்ந்தார். பழைய நாடகக் கம்பெனி முதலாளியைச் சந்தித்ததில் அண்ணாச்சிக்கு மகிழ்ச்சி தலை கால் புரியவில்லை.

''உங்க தள்ளாத வயசிலே குளிர் காலத்திலே இந்த மலைக்காட்டு ஊரைத் தேடி நீங்க ஏன் அலையணும் நாயினா? எனக்கு ஒரு வரி எழுதியிருந்தீங்கன்னா செய்யவேண்டியதை நானே செஞ்சிருப்பேனே?'' என்று அவரை வரவேற்றார் அண்ணாச்சி.

கந்தசாமி நாயுடு அதே சிவப்புக் கல் கடுக்கனும் கதர் மயில் கண் கரை வேஷ்டியும் முக்கால் கைச்சட்டையும் ராஜபார்ட் முகக் களையும், முன் தலையில் வழுக்கையும், பிடரியில் சுருள் சுருளாக நரைத்த கிராப்புமாக முன்னை விடப் பத்து வயது முதுமையையும் ஏற்று, மாறாத புன்னகையோடு விளங்கினார். தன்னைக் கும்பிட்ட அண்ணாச்சியை வாழ்த்திவிட்டு, ''ஏதோ உண்ணாவிரதம்னு பேப்பர்லே பார்த்தேன் தம்பீ! நவராத்திரி வேறே வருது. 'கண்ணு' தான் வீட்டிலே கொலு வைக்கிறது வழக்கம். அதுக்கு நெனைவு தெரிஞ்ச நாளிலேயிருந்து அதுதான் கொலு வைக்குது. இந்த வருசம் இங்கே கொண்டாந்து சேர்த்துப் பிட்டோம்கிறத்துக்காகக் கொலு இல்லாமப் போயிடக் கூடாது. லீவோ விட்டாச்சு. இனிமே இங்கே என்ன வேலை? அதான் நாமே கூட்டிக்கிட்டுப் போயிடலாம்னு புறப்பட்டு வந்தேன். அது என்ன பேப்பர்லே என்னென்னமோ போட்டிருந்தானே தம்பீ, அந்த நிலக்கோட்டைக்காரப் பொண்ணு ஏன் தண்ணிலே விழுந்து செத்துப் போச்சு...? அதுலே யாராரு சம்பந்தப்பட்டிருக்காங்க? என்ன சமாசாரம்? ஊர்லே பத்தும் பலதுமாப் பேசிக்கிறாங்களே?'' என்று விசாரித்தார் நாயுடு. நடந்த விவரங்களை அண்ணாச்சி அவரிடம் தெரிவித்தார்.

''நீ சொல்றதைக் கேட்டாப் பயமாயில்ல இருக்கு! இந்த மாதிரி வாத்தியாருங்க இருக்கிற எடத்திலே வயசு வந்த பொண்ணுங்களைப் படிக்க விடறது கூடத் தப்பு போலிருக்கே'' என்று

அழுத்துக் கொண்டார் அண்ணாச்சி கூறிய விவரங்களைக் கேட்ட நாயுடு.

''எல்லா வாத்தியாருங்களையும் அப்படி சொல்லிட முடியாது நாயினா! இந்த யூனிவர்ஸிடியிலே மொத்தம் எண்ணூறு வாத்தியாருங்க இருக்காங்க. டீச்சிங் ஸ்டாஃப்புங்கிற இந்த எண்ணூறு பேரைத் தவிர நான் — டீச்சிங் ஸ்டாஃபுனு மத்தவங்க ஒரு ஐந்நூறு பேர் தேறும். அப்பிடி இருக்கிற ஆயிரத்து முந்நூறு பேர்லே ஒரு பத்து இருபது பேர்தான் மோசமானவங்களா இருக்காங்க. மத்தவங்கள்ளாம் ரொம்பப் படிப்பு மானம் மரியாதையோடு நல்லா இருக்கிறவங்கதான். மோசமாகவும் ஒழுக்கக் குறைவாகவும் நடந்துக்கிற பத்து இருபது பேரும்கூட நிர்வாகமும், அரசாங்கமும் தங்களுக்கு வேண்டியவங்க கையிலே இருக்குதுன்னு தான் எதுக்கும் துணிஞ்சிடறாங்க. எதையும் தங்களால் மூடி மறைச்சிட முடியும்னு தான் தப்பாகப் போறாங்க... மத்தவங்க அத்தனை பேரும் தங்கள் தங்கள் படிப்பிலே மலையா உயர்ந்தவங்கன்னு. இந்தப் பத்திருபது பேரும் அரசியல் சிபார்சிலே வேலைக்கு வந்தவங்களா இருப்பாங்க... இவங்களுக்குத் தொழில் திறமை குறைவாகவும், கட்சி அதிகாரச் செல்வாக்கிலே ஒரு மிருக பலம் அதிகமாகவும் வந்திடுது... இதுதான் நிலைமை'' என்றார் அண்ணாச்சி.

நல்ல வேளையாக மதுரையிலிருந்து நாயுடு வந்த தினத்தன்று காலை மழை இல்லை. கண்ணுக்கினியாள் முதலிய மாணவிகள் அறுவரும் விடுதலையாகி இருந்தனர். கண்ணுக்கினியாள் மல்லிகைப்பந்தல் நகரிலேயே ஒரு கல்லூரித் தோழியோடு அவள் வீட்டில் தங்கியிருந்தாள். நாயுடு வந்திருக்கும் செய்தியைக் கடைப் பையன் ஒருவன் மூலம் கண்ணுக்கினியாளுக்கு அண்ணாச்சி சொல்லி அனுப்பினார். கண்ணுக்கினியாள் பத்தே நிமிஷங்களில் வந்து சேர்ந்தாள். தன் கடையிலிருந்து அண்ணாச்சி அவளைத் தேடி அனுப்பிய பையனைப் பின்னால்



நடந்து வரச் சொல்லி விட்டு அவன் வந்த சைக்கிளில் தானே ஏறிக்கொண்டு நாயினாவைப் பார்க்க விரைந்து வந்தாள் அவள்.

''அடேடே! நீயே சைக்கிளில் ஏறிக்கிட்டு அவனை நடந்து வரச் சொல்லிட்டியா தங்கச்சி...? தங்கச்சிக்கு சைக்கிள் விடத் தெரியும்கிறதையே இன்னிக்குத்தான் பார்க்கிறேன் நான்...'' என்று அவளை வரவேற்றார் அண்ணாச்சி. அவள் பதில் கூறினாள்: ''இந்த ஊர்லே காலாற நடக்கிறதைப் போல சுகமான காரியம் வேறே எதுவும் இல்லே அண்ணாச்சி! நாயினாவை உடனே பார்க்கணும்கிற அவசரத்துக்காக இன்னிக்குச் சைக்கிளிலே வந்தேன். எனக்குச் சைக்கிள் நல்லா விடத் தெரியும். ஸ்கூட்டர் கூடப் பழகியிருக்கேன் — இங்கே வந்தப்புறம் அதுக்கெல்லாம் வாய்ப்பில்லே....'' என்று அண்ணாச்சியிடம் கூறிவிட்டுத் தந்தையின் பக்கம் திரும்பி, ''வாங்க நாயினா'' என்றாள் அவள்.

''என்னம்மா? உன்னை ஊருக்குக் கூட்டிக்கிட்டுப்போகலாம்னுதான் வந்தேன். நவராத்திரிக் கொலு வருது. நீ என்னவோ உண்ணாவிரதம் கிண்ணாவிரதம்னு இங்கேயே ஊரைக் கலங்கப் பண்ணிக்கிட்டிருக்கிறதா பேப்பர்லே பார்த்தேன். பயமாயிருந்தது. அதுதான் நானே புறப்பட்டு வந்திருக்கேன். இன்னிக்கே கடைசிப் பஸ்ஸிலே புறப்படலாமா? உன் சௌகரியம் எப்பிடி? எனக்கு இந்த ஊர்க் குளிரு தாங்க முடியலே'' என்று அவள் தந்தை உடனே பிரயாணத்தைப் பற்றிக் கூறினார்.

''நாயினா! இப்பிடி அவசரப்பட்டீங்கன்னா எப்படி முடியும்? தங்கச்சி சிநேகிதிங்க கிட்டச் சொல்லிட்டுப் புறப்படணுமில்லே? கொஞ்சம் டயம் குடுங்க...'' என்று அவள் கவலையை அந்தரங்கமாகப் புரிந்து கொண்டு அவள் சார்பாகத் தாமே வேண்டினார் அண்ணாச்சி. அவரும் அதற்கு இணங்கினார். தந்தையும் மகளும் அண்ணாச்சி கடையின் பின்புறம் இருந்த அறையில் அரை மணி நேரம் குடும்ப விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அண்ணாச்சி அங்கேயே நாயுடுவின் பகல் உணவிற்கு ஏற்பாடு செய்தார்.

''நாயினா! நீங்க சாப்பிட்டு முடிக்கிறதுக்குள்ளே நான் சொல்ல வேண்டியவங்களைப் பார்த்துச் சொல்லிக்கொண்டு வந்திடலாம்னு பார்க்கிறேன். நான் சாப்பிட்டாச்சு. நீங்க சாப்பிட்டதும் பகல் மூணரை மணிக்கு நேரா மதுரைக்கு ஒரு எக்ஸ்பிரஸ் பஸ் இருக்கு. அதிலே போயிடுவோம்'' என்று தந்தையிடம் கூறிவிட்டு அண்ணாச்சியைத் தன்னோடு ஒரு நிமிஷம் வெளியில் வந்து போகுமாறு குறிப்புக் காட்டினாள் கண்ணுக்கினியாள். அண்ணாச்சியும் அதைப் புரிந்து கொண்டு நாயுடுவை உள்ளறையிலேயே விட்டு விட்டு அவளோடு கடை முகப்புக்கு வந்தார்.

இன்னும் விடுவிக்கப் படாமல் ஆஸ்பத்திரியில் போலீஸ் காவலிலேயே இருந்த பாண்டியனையும் மோகன்தாஸையும் மற்றவர்களையும் சந்திப்பது எப்படி என்று அண்ணாச்சியிடம் கவலை தெரிவித்தாள் அவள். ஆஸ்பத்திரியில் இருந்தபோதும் கூட மாணவர்களும் மாணவிகளும் தனித் தனி வார்டுகளில் இருந்ததனால் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள முடியாமல் போய்விட்டது. போலீஸ் காவலும் கடுமையாக இருந்தது. மாணவிகளை மட்டும் விடுவித்த பின்பும் கூடப் பாண்டியன் முதலியவர்களை மற்ற மாணவர்களோ, அரசியல் தொடர்புடையவர்களோ வந்து சந்திக்க முடியாமல் போலீஸார் தடுத்திருந்தனர்.

''அங்கே ஆஸ்பத்திரியிலே வார்டில் காவலுக்கு இருக்கிற போலீஸ்காரங்க அவ்வளவாக் கெடுபிடிக்காரங்க இல்லே. நான் போனப்ப அத்தனை தடையிருந்தும் என்னைப் பார்க்க விட்டாங்க. நீயும் போய்ப் பாரு, தங்கச்சி! முடியலேன்னா என்கிட்ட வந்து நீ சொல்ல வேண்டியதை ஒரு லெட்டரா எழுதிக் குடுத்திட்டா நான் அதைத் தம்பிகிட்டச் சேர்த்திட முடியும்'' என்றார் அண்ணாச்சி. அவளுக்கும் அதுதான் . சரி என்று தோன்றியது. தோழியின் வீட்டுக்குச் சென்று அவளையும் துணைக்கு அழைத்துக் கொண்டு மழைக்குப் பாதுகாப்பாகக் குடைகளோடு பேராசிரியர் பூதலிங்கத்தின் வீட்டுக்கு முதலில் போனாள் அவள். அவர் உதவி செய்தாலோ, உடன் வந்தாலோ ஆஸ்பத்திரியில் பாண்டியனைச் சந்திப்பது சுலபமாயிருக்கும் என்று அவளுக்குத் தோன்றியது. அவளும் அவள் தோழியும் பல்கலைக் கழக ஆசிரியர் வீடுகள் இருந்த பகுதிக்குள் சென்று பேராசிரியர் பூதலிங்கத்தின் இல்லத்தை அடைந்தபோது அவருடைய மகள் கோமதி தான் ஹாலில் அமர்ந்து வீணை வாசித்துக்கொண்டிருந்தாள். அந்த மனத்துயரம் நிறைந்த வேளையில் வீணை வாசிப்பைக் கேட்பது இதமாக இருந்தது. ''அப்பா இல்லையா கோமதி? எனக்கு ஒரு முக்கியமான காரியமாக அவரைப் பார்த்தாக வேண்டும். சாயங்காலம் நான் ஊருக்குப் போகணும்கிற

# எல்லோரும் என்னை குட்டி பயில்வான் என்கிறார்கள்



என்கிறான் 6 மாதம் நிறைந்த அம்ரித். அவனது உடலையும் எடையையும் பார்ப்பவர்கள் அவன் வயது இன்னும் அதிக மிருக்கும் என்று நினைக்கிறார்கள். இந்த அமோக வளர்ச்சிக்குக் காரணம், அமுல்ஸ்ப்ரே.





என் கால் விரல்களை எப்படித் தொடுகிறேன், பாருங்கள்.

அமுல்ஸ்ப்ரே, வியக்கும்படியான குறுகிய காலத்துக்குள் மக்களின் நம்பிக்கையைப் பெற்றுவிட்டது. அறிமுகப்படுத்திய இரண்டே ஆண்டுகளுக்குள், அமுல்ஸ்ப்ரே, இந்தியாவில் விற்பனையாகும் குழந்தை உணவுகளுள் உச்ச விற்பனையை எய்திவிட்டது.

உங்கள் குழந்தைக்கு, பிறந்த முதல் வாரத்திலிருந்தே அமுல்ஸ்ப்ரே தரலாம். அமுல்ஸ்ப்ரே எளிதில் சீரணிக்கக் கூடியது; சரிவிகித ஊட்டச் சத்துக்கள் நிறைந்தது; அவசியமான வைட்டமின்கள், தாதுப் பொருள்கள் மற்றும் சீரான வளர்ச்சிக்காக அதிக அளவிலே தாமுயர்ந்த புரதச் சத்துக்கள் கொண்டது.




## அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது**

ASP/AS-21

தாலே இப்ப வந்தேன்'' என்று கண் ணுக்கினியாள் வினவியதும் ''வி.ஸி. இமீர்னு ஸ்டாஃப் கவுன்ஸில் எமர் ஜென்ஸி மீட்டிங்னு கூப்பிட்டனுப்பி அப்பா போயிருக்கிறார். வர எவ்வளவு நேரமாகுமோ தெரியலேயே?'' என்று பதில் சொன்னாள் கோமதி.

இதைக் கேட்டதும் வெளியே யாருக் கும் தெரியாமல் பல்கலைக் கழக எல் லைக்குள் மாணவர்களின் இயக்கத் துக்கு எதிராக என்னென்னவோ நடந்து கொண்டிருப்பது போல் தோன்றியது. துணைவேந்தர் மிகவும் தந்திரமாகத் தம் மைக் காத்துக் கொள்ளும் காரியங்களில் முனைந்திருக்கிறார் என்பதும் புரிந்தது. இந்த வேளையில் பாண்டியன் முதலிய வர்களோடு அங்கே தங்காமல் தான் மட்டும் ஊருக்குப் போகலாமா என்று அவள் மனம் மெல்லத் தயங்கியது. கோமதி மேலும் சில விவரங்களைக் கூறினாள்:

''உனக்குத் தெரியுமா கண்ணுக்கினி யாள்? அந்த லெக்சரர் மதனகோபால் இங்கிருந்து பத்திரமாகத் தப்பிப் போவதற்கும் நம் வி. ஸி. சொல்லித் தான் போலீஸும்வேண்டிய உதவிகளைச் செய்ததாம். காலையில் அப்பாவைத் தேடி ஜுவாலஜி டிபார்ட்மெண்ட் தங்க ராஜ் சார் வந்திருந்தார். தங்கரா ஜிடம் அப்பா சொல்லிக் கொண்டிருந்த போது நான் கேட்டேன். 'ஒழுக்கமில் லாதவர்களைப் பாதுகாத்துத் தப்புச் செய்து கொண்டே மற்றவர்களுக்கு அமைதியையும் ஒழுக்கத்தையும் உபதே சித்தால் யார்தான் நம்புவார்கள்? இந்த வி. ஸி. இரகசியமாக மதுரைக்குப் போய் அங்கிருந்து விமானத்தில் சென் னைக்குப் பறந்து அமைச்சரின் பிறந்த தின நாளில் அவருக்கு மாலை சூட்டி மலர்க் கிரீடம் வைத்து விட்டுத் திரும்பு கிறார். பல்கலைக் கழகம் என்ற சுதந்திர அமைப்பின் தலைவராக நடந்துகொள் ளாமல், மந்திரிகளின் ஏஜெண்டுபோல் செயல்படுகிறார். தேர்தலில் வென்ற மாணவர்கள் அதைக் கொண்டாட அனு மதி கேட்டதற்குப் 'பல்கலைக் கழக எல் லைக்குள் கொண்டாடக் கூடாது' என்று மறுத்து விட்டார். இப்போது வென்ற மாணவர்கள் தோற்று, மந்திரிகளின் கட்சிக்கு வேண்டிய மாணவர்கள் வென் றிருந்தால் இவர் நிச்சயமாக இப்படி இடம் தர மறுத்திருக்க மாட்டார். இவரே ஒரு தரப்புக்கு ஆதரவாக இருந்து கொண்டு அப்புறம் எல்லாத் தரப்பு மாணவர்களின் தலைவராகவும் எப்படி விளங்க முடியும்? மேரி தங்கத் தின் தற்கொலைக்கு மதனகோபால் தான் காரணம் என்று தெரிந்த பின் பும் அவரை இவர் ஏன் பதவியிலிருந்து வெளியேற்றத் தயங்குகிறார்? தவறு செய்த ஒருவர் மந்திரிக்கு உறவினர் என்பதற்காக இவர் ஏன் தாட்சண் யப்பட வேண்டும்? தவறு செய்தவர் களிடம் தாட்சண்யப்படுவது என்பது தவறுகளிடமே தாட்சண்யம் காட்டு வதற்குச் சமமானதுதான் என்பது இவருக்கு ஏன் புரியவில்லை? இவ் வளவு தவறுகளுக்கு நடுவே 'ஸ்டாஃப் கவுன்ஸிலை'க் கூட்டி மற்றவர்களிடம் பூசி மெழுக என்னதான் இருக்கிறதோ, தெரியவில்லை' என்று அப்பா தங்க ராஜ் சாரிடம் கோபமாகப் பேசிக் கொண்டிருந்ததை நான் கேட்டேன். அப்பாவுக்கு 'ஸ்டாஃப் கவுன்ஸில்' மீட் டிங்குக்குப் போகவும் வி. ஸி.யைப் பார்க்கவுமே பிடிக்கவில்லை தங்கராஜ் சார்தான், 'நாம் நாலு பேர் போகா



## சத்திய வெள்ளம்

**பெரும்பாலான சமயங்களில் சட்டங்களால் பொதுமக்கள் பாது காக்கப்படுவதில்லை. ஆட்சிகளும், ஆள்பவர்களுமே பாதுகாக்கப் படுகிறார்கள்.**

மல் விட்டால் எதிர்க் குரல் கூட இருக் காது. அவர்கள் விருப்பம் போல் எல்லாவற்றையும் முடிவு செய்து விடு வார்கள். அது நடக்காமல் இருக்கவா வது 'நாம் போக வேண்டும்' என்று வற்புறுத்தி அப்பாவைக் கூப்பிட்டுக் கொண்டு போயிருக்கிறார். அநேகமாகத் திரும்பி வருகிற நேரம்தான். நீ இன் னும் அரை மணி நேரம் காத்திருந்தால் அப்பாவைச் சந்தித்து விடலாம்'' என் றாள் கோமதி.

கண்ணுக்கினியாளும் அவளுடைய தோழியும் காத்திருந்தார்கள். பகல் இரண்டரை மணிக்குப் பேராசிரியர் பூத லிங்கமும் தங்கராஜ் சாரும் திரும்பி வந்தார்கள். வரும்போதே அவர்கள் இருவரும் எதற்காகவோ துணைவேந் தரைக் கடுமையாக விமர்சனம் செய்து கொண்டு வந்தார்கள். அவர்கள் உள்ளே நுழையவும் காலையி லிருந்து

சற்று வெளிவாங்கி யிருந்த வானம், மூடிக் கொண்டு மழை கொட்டத் தொடங்கவும் சரியாக இருந்தது. கண்ணுக்கினியாளும், அவளுடைய தோழியும் பேராசிரியர்களுக்கு வணக்கம் தெரிவித்தார்கள்.

''வா அம்மா! நீ இன்னும் ஊருக்குப் போகவில்லையா? மாணவிகளைத்தான் விடுதலை செய்து விட்டார்களே? நீ அன்றைக்கே ஊருக்குப் போயிருப்பாய் என்றல்லவா நினைத்தேன்?'' என்று கண்ணுக்கினியாளைக் கேட்டார் பூதலிங்கம். தந்தை ஊரிலிருந்து வந்திருப்பதையும் மாலையில் தான் அவரோடு ஊர் திரும்ப இருப்பதையும் கண்ணுக்கினியாள் அவரிடம் கூறினாள். போலீஸ் காவலில் இருக்கும் மாணவர்கள் ஆறு பேரையும் எப்படி விடுவித்து வெளியே கொண்டு வருவது என்பது பற்றியும் ஆஸ்பத்திரிக்குப் போய் அவர்களைச் சந்திப்பது பற்றியும் யோசனை கேட்டாள்.

'''பெய்'லில் வருவதோ மன்னிப்புக் கடிதம்' எழுதிக் கொடுத்து விட்டு வருவதோ மாணவர்களுக்குப் பிடிக்காது அம்மா! பாண்டியனே அப்படி எல்லாம் செய்ய விரும்ப மாட்டான்..... இப்போதிருக்கிற நிலைமையைப் பார்த்தால் அவர்களாகச் சீக்கிரம் விடுதலை செய்யவும் மாட்டார்கள் போலிருக்கிறது. ஏதேதோ பொய்க் குற்றச் சாட்டுக்களை மாணவர்கள்மேல் சுமத்தவும் இரகசிய ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. என்ன செய்யலாம்? தேவதைகள் நிதானமாக நுழைய அஞ்சும் இடங்களில் முட்டாள்கள் சரேலென்று அவசரமாகவே நுழைந்துவிடுகிறார்கள். அதிகாரச் செல்வாக்கு உள்ளவர்களின் தலையீடு இந்த நாட்டின் பல்கலைக் கழகங்களை எப்படி எப்படியோ ஆக்கிவிட்டது. சர்க்கார் அதிகாரிகளை நண்பர்களாகவும் மாணவர்களை விரோதிகளாகவும் நினைக்கும் மனப்பான்மை உள்ளவரை நம் வி.ஸி.யை யாரும் திருத்த முடியாது அம்மா! இன்னிக்கு 'ஸ்டாஃப் கவுன்ஸி'லேயும் ஒரே தகராறுதான். எங்களைப் போன்ற ஆசிரியர்கள் எல்லாரும் மாணவர்களுக்காக அநுதாபப்படுகிறோம். ஆனால் நாங்கள் ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கிறது. இப்போது நான் உன்னோடு ஆஸ்பத்திரிக்கு வந்தால்கூட என்னைக் கூப்பிட்டு, 'ஏன் நீ ஆஸ்பத்திரிக்குப் போய் மாணவர்களைப் பார்த்தாய்?' என்று கேட்பார்கள் போலிருக்கிறது. நீங்கள் எல்லாம் உண்ணாவிரதம் இருந்தபோது நான் வந்து பார்த்தேன் இல்லையா? அதுவே வி.ஸி.க்குப் பிடிக்கவில்லை. இன்றைக்கு 'ஸ்டாஃப் கவுன்ஸில்' மீட்டிங்கில், 'நம்மில் சில ஆசிரியர்கள் உண்ணாவிரதம் இருக்கும் மாணவர்களைத் தூண்டிவிடுவது போல் அடிக்கடி போய்ப் பார்க்கிறார்கள். அது எனக்குத் தெரியும்' என்று என்னை மறைமுகமாகக் குத்திக்காட்டிப் பேசினார் வி.ஸி. டாக்டர் பொழில்வளவனும், பண்புச் செழியனும் நாள் தவறாமல் வி.ஸி.யிடம் என்னைப் பற்றிக் கோள் சொல்லுகிறார்களாம். இதற்கெல்லாம் நான் பயப்படவில்லை என்றாலும் நிலைமையை உணர்ந்து எச்சரிக்கையாயிருக்கிறேன்'' என்றார் பேராசிரியர் பூதலிங்கம். பேராசிரியர் தங்கராஜும் கூட இருந்ததால் பூதலிங்கத்திடம் மேலும் அதிகமாக எதையும் பேச முடியாமல் போகவே சொல்லி விடைபெற்றபின் மழையோடு மழையாய்த் தன் தோழியோடு ஆஸ்பத்திரிக்குச் சென்றாள் கண்ணுக்கினியாள். ஆஸ்பத்திரியில் பாண்டியனை அவளால் சந்திக்க முடியவில்லை. வேறு எந்த வெளி மாணவர்களும் உள்ளே காவலில் இருக்கும் அந்த ஆறு மாணவர்களைச் சந்திக்க முடியாமல் போலீஸ் காவல் விதிகள் கடுமையாக்கப்பட்டிருந்தன. உடனே அவசரமாக அண்ணாச்சி கடைக்குத் திரும்பிப் பாண்டியனுக்கு ஒரு சுருக்கமான கடிதத்தை எழுதிக் கொடுத்துவிட்டு அண்ணாச்சியையும், பஸ் ஸ்டாண்டு வரை உடனழைத்துக் கொண்டு நாயினாவோடும், வழியனுப்ப வந்த தோழியோடும் ஊர் புறப்பட பஸ்ஸுக்குச் சென்றாள் அவள். மழை கடுமையாயிருந்ததால் பஸ் ஸ்டாண்டுக்குப் போய்ச் சேருவது சிரமமாயிருந்தது. எப்படியோ குடைகளைக் கொண்டு சமாளித்துப் பஸ் ஸ்டாண்டை அடைந்து விட்டார்கள். நாயினாவையும், கண்ணுக்கினியாளையும், அவள் தோழியையும், மழைக்கு நனையாமல் நிற்க வைத்துவிட்டு டிக்கட் வாங்கச் சென்ற அண்ணாச்சி கால் மணி நேரம் கழித்து வெறுங் கையோடு திரும்பி வந்து, ''இருபத்தேழாவது மைலில் ஆடுகாத்தான் பாறைக்குப் பக்கத்திலே மலை சரிந்து பதினைந்து இருபது கெஜ தூரத்துக்கு ரோடு மண் மூடிப் போச்சாம்! நாளைச் சாயங்காலம்வரை பஸ் போகவோ, வரவோ முடியாதாம் தங்கச்சி! நாளன்னிக்குத்தான் பார்க்கணும். நாயினாவுக்கு இந்த ஊர்க் குளிரை இன்னும் கொஞ்சம் அனுபவிக்கணும்னு தலையிலே எழுதியிருக்கிறப்ப என்ன பண்ணலாம்?'' என்றார்.

(தொடரும்)

# ராஜஸ்ரீயின் உண்மையான விருப்பங்கள்

ராஜஸ்ரீயை ஒரு நிதியுதவி நிகழ்ச்சியில் கண்டபொழுது அவர் வாழ்க்கையில் உண்மையாக விரும்பும் சிலவற்றைப் பற்றித் தெரிவிக்குமாறு கோரினோம்.

'ஓ! என் விருப்பங்கள் ஏராளமானவை' என்று கூறிச் சிரித்தார். 'நான் மிகவும் விரும்பும் நகரம் சென்னை'.

'தீபாவளியின் வர்ண ஜாலங்களும் வெடிச் சப்தங்களும் எனக்கு மகிழ்ச்சியூட்டுபவை. ஜோஸியம் என்றாலோ, ஒரே மோகம். ஏனென்றால், அதுதானே நமது நண்பர்களை நன்கு அறிய உதவுகிறது.'

அவரது எழில் மற்றும் எடுப்பான தோற்றத்தின் ரகசியம் என்னவென்று கேட்டபொழுது அவர் கூறியதாவது: லக்ஸின் கவர்ச்சியூட்டும் தன்மைதான்'.

லக்ஸ் மிருதுவானது, எனக்குத் துடிப் பூட்டுகிறது. எல்லோருமே லக்ஸ் உபயோகிக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

K. Rajasree




இந்துஸ்தான் லீவரின் ஒரு தரமான தயாரிப்பு.



# இந்த தீபாவளிக்கு 10% விசேட தள்ளுபடி

வண்ணத்துப் பூச்சியின் பிரத்தியேகமான கவர்ச்சி உங்களுக்கு புத்தொளியும், புதுப்பொலிவும் தரும். புத்தம் புதிய கையிருப்பு- நவீன நாகரிக டிசைன்கள், புரட்சிகரமான மாதிரிகள், ஒவ்வொரு கோ-ஆப்டெக்ஸ் விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும்.

புகழ் பெற்ற காஞ்சிபுரம், ஆரணி, மற்றும் கும்பகோணம் பட்டுகள், பரவசம் தரும் பருத்தி ஆடைகள், கிளாசிக் ரெடிமேட் கைத்தறி ஷர்ட்டுகள், மற்றும் பட்டு டைகள் கிடைக்கும்.

வண்ணத்துப்பூச்சி உங்கள் நல்வரவுக்காக நாடெங்கிலுமுள்ள முன்னூற்று ஐம்பது விற்பனை நிலையங்களில் காத்திருக்கிறது.

வண்ணத்துப்பூச்சி 10% விசேட தள்ளுபடியில் தருகிறது. (தள்ளுபடியை தமிழக அரசு ஏற்றுக் கொள்கிறது) தமிழக அரசு ஊழியர்களுக்கு கடன் வசதித் திட்டம் வழக்கம் போல் வழங்கப்படும்.

**விசேட தள்ளுபடி 1—10—'72 முதல் 9—11—'72 வரையில்.**

கோ-ஆப்டெக்ஸ்



கைத்தறிஆடைகள்

Criterion CO 2779TMB

பம்பாய் நகர மக்களுக்கு ஒரு நற்செய்தி! தமிழ்ச் சங்க கட்டிடத்தில் நடைபெறும் (1-10-72 முதல் 15-10-72 வரை) கோ-ஆப்டெக்ஸ் கைத்தறி பட்டுக்களின் கண்காட்சிக்கு விஜயம் செய்யுங்கள்.



# உனக்கும் எனக்கும்

ஜெய்சங்கர் கிடைத்திருக்கும் சந்தர்ப்பங்களிலெல்லாம் விட்டுக் கொடுக்காமல் நன்றாய் நடிக்கிறார். 'கும் கும்' சண்டைக் காட்சிகளில் சுறுசுறுப்பாகவும் விறுவிறுப்பாகவும் வெளுத்து வாங்குகிறார். தள்ளாடித் தளர்நடை போடும் கிழவனாகத் தோன்றும் போது சில நிமிஷங்களேயானாலும், மிக இயல்பாக நடித்து ரசிகப் பெருமக்களின் கையொலியைப் பெறுகிறார். அசல் கிழவனைப் போன்ற 'மேக்கப்' அவரது நடிப்புக்கு உறுதுணையாயிருக்கிறது. ஜெய்சங்கரைப் பொறுத்தவரை இது வெற்றிப் படம்தான்.

நவநாகரிகக் கதாநாயகியாக வரும் பாரதி பலவிதமான உடைகளில் 'போஸ்' கொடுக்கிறார்; கிளப் டான்ஸ் ஆடுகிறார். ஓர் ஆண்மகனை எதிர்த்துச் சவால் விடும்போது நடிப்பில் கொடிகட்டி முழக்குகிறார். கடைசிக் காட்சியில் கணவனுக்கு அடிபணியும்போதுதான் அவர் நடிப்பில் நாம் லயிக்க முடிகிறது.

வெகுநாட்களுக்குப் பிறகு எம். என். ராஜத்தைத் திரையில் அம்மாவாகக் காணும் போது அவரது அனுபவ நடிப்பு மனத் திருப்தியை அளிக்கிறது.

மனோரமா — 'சோ' தமாஷ் ஜோடியின் நடிப்பு சில இடங்களில் மிகைபாகத் தோன்றினாலும், பல இடங்களில் களைகட்டுகிறது!

தேங்காய் சீனிவாசன் அப்பாவாக வருகிறார். நன்றாய்த்தான் நடிக்கிறார் என்றாலும் 'சீரியஸா'க இருக்க வேண்டிய கட்டங்களில் கூடத் தமாஷாக நடித்துவிடுகிறாரே!

இந்தப் படத்தில் சில அதிசயங்கள்! பல ஆச்சரியக் குறிகள்! சந்தர்ப்பவசத்தினால், இயற்கையின் விகாரவசப்பட்டு எஜமானரின் பெண்ணைக் கெடுத்துவிட்டதாக அவருடைய கார் டிரைவர் கூறியதைக் கேட்டுக் கொஞ்சம் கூட அதிர்ச்சி அடையாமல், அவனுக்கே தங்கள் மகளை மணம் முடித்து வைக்கத் தீர்மானிக்கும் பெற்றோர்களைத் திரைப்படக் கதையில்தான் காண முடியும்! எந்த மகா பிரபுவும் பெற்ற மகளைத் தன் கார் டிரைவருக்கு ஊர் அறியத் திருமணம் செய்து வைக்கும் அளவுக்குப் பெரிய மனம் படைத்தவனாயிருக்க மாட்டான்! எந்த லேடி டாக்டரும் ஒரு பெண்ணை அவள் கர்ப்பந் தரிக்காமல் இருக்கும்போது அவள் தாயாகப் போகிறாள் என்று எந்தக் காரணத்தைக் கொண்டும் பொய் சொல்லமாட்டாள்!

**உனக்கும் எனக்கும்** திரைப்படத்தில் இது போல் பலப் பல அசம்பாவிதங்கள்!

ஒளிப்பதிவு எந்த இடத்திலும் பாராட்டும் படியாயில்லை. சிறப்பாயிருப்பது வசனம். கதை, வசனம், டைரக்ஷன் பொறுப்பை ஏற்றிருப்பவர், என். எஸ். மணி. ஆலங்குடி சோமு இப்படத்தின் நான்கு பாடல்களையும் நன்றாய் இயற்றியிருக்கிறார். ஆனால் இசையமைப்பில் கவர்ச்சியில்லை.

உனக்கும் எனக்கும் மட்டும் ரசிக்கக் கூடியதாயிருப்பதில் பலனில்லை. எல்லாரும் ரசிக்கும் விதத்தில் இருப்பதுதான் சிறந்த படத்தின் இலக்கணம். — **காந்தன்**





# தமிழகத்துக்கு



- மைசூர் தசரா ஊர்வலம்
- வங்காளிகளின் துர்கா பூஜா
- டில்லி ராம்லீலா: மேகநாத், ராவணன், கும்பகர்ணன்.

தமிழகத்து நவராத்திரி மைசூரில் தசரா என்றும், வங்காளத்தில் ''துர்கா பூஜா'' என்றும், பாரதத்தின் வடக்குப் பிராந்தியத்தில் உள்ள மாநிலங்களில் ''ராம் லீலா'' என்றும் பல பெயர்களில் பலவிதமாகக் கொண்டாடப்படுகிறது.

1610ஆம் ஆண்டு முதல் தவறாமல் தொடர்ந்து மைசூரில் தசரா உற்சவம் நடந்து வருகிறது. விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட வீதிகளின் வழியே பவனி வந்து அரண்மனையில் மைசூர் மகாராஜா தர்பார் நடத்துவது தசரா திருவிழாவின் ஒரு முக்கிய அம்சமாகும். கடந்த ஆண்டு வரை கடைசி நாளான விஜயதசமியன்று தர்பாருக்கு மகாராஜா யானை மீது பவனி வருவது வழக்கமாக இருந்தது. கடந்த ஆண்டு முதல் மகாராஜாவுக்குப் பதிலாகப் பாரத மாதாவின் சிலையை வைத்து ஊர்வலம் வருவது வழக்கமாகக் கொள்ளப்பட்டது.

நடப்பு நூற்றாண்டின் ஆரம்பத்தில் பண்டித ராம்தத் ஜ்யோதிர்வாத் என்ற அறிஞர் வாரணாசி, பிரயாகை, மதுரா முதலிய நகரங்களுக்குச் சென்று இராமாயணக் கதையை ராம்லீலா நாடகமாக்குவதற்கான முறைகளைப்பற்றி ஆராய்ந்தார். தொடர்ந்து துளசிதாஸரின் ராம சரிதமானஸுடன், வால்மீகி ராமாயணத்தின் சில சுலோகங்களையும் அத்யாத்ம நேபான ராமாயணத்திலிருந்து சில பகுதிகளையும் எடுத்துக் கொண்டு அவற்றை ஜய ஜய்வந்தி, பைரவி, கமாஸ், பிஹாக் முதலிய ஹிந்துஸ்தானி ராகங்களில் மெட்டு கட்டி இசை நாடகமாகத் தயாரித்தார். முதலில் குமாவூன் (Kumaon) மலைப் பிரதேசத்தில் தோன்றிய இந்நாடகம் தொடர்ந்து உத்தரப் பிரதேசம் மற்றும் அருகில் உள்ள மாநிலங்களுக்குப் பரவி தற்சமயம் டில்லி, பஞ்சாப், ஹரியானா முதலிய மாநிலங்களிலும் ராம்லீலாவாகக் கொண்டாடப்படுகிறது. வாரணாசி நகரில்



# அப்பால் தசரா

ஜனார்த்தனன்

நடிக்கப்பட்ட முதலாவது ராம்லீலா நாடகத்தில் வாரணாசி ஊரே ஒரு நாடக மேடையாக மாறியது. அந்நகரின் பல்வேறு பகுதிகளை அயோத்தி, இலங்கை, பஞ்சவடி முதலிய பிராந்தியங்களாகப் பாவித்து நாடகம் நடிக்கப்பட்டது.

இக்காலத்தில் ராம்லீலா நாடகம் ஊரின் பொதுவான திறந்தவெளி யொன்றில் நூறு அடிக்கு மேற்பட்ட நீளமுள்ள மேடையொன்றில் நடிக்கப்படுகிறது. பத்து தினங்கள் நடைபெறும் இந்நாடகத்தின் ஒவ்வொரு நாளும் ஆரம்பத்திலும் முடிவிலும் நாடகத்தில் பங்கு பெறும் வேடமணிந்த கலைஞர்கள் பிரதான வீதிகளில் ஊர்வலமாகச் செல்வது வழக்கம். இராமன் சீதை, லட்சுமணன், ஹனுமான் முதலிய வேடங்கள் தாங்கிய இளைஞர்கள் இவ்வாறு ஊர்வலம் செய்யும்போது மக்கள் அவர்களைத் தெய்வமாகப் பாவித்து வணங்குவதுண்டு. சிலர் தமது குழந்தைகளுக்கும் வேடம் போட்டு விழாவுக்கு அழைத்து வருவார்கள். விழாவின் கடைசி தினமான விஜயதசமியன்று இராவணன், கும்பகர்ணன், அவன் மகன் மேகநாத் ஆகிய மூவருடைய — வெடிகளால் நிரப்பப்பட்ட இராட்சஸ உருவங்களை ராமலட்சுமணர்கள் வீசும் பாணங்களின் மூலம் எரிப்பது வழக்கம்.

சிவபக்தனான இராவணனை வதம் செய்ய முற்பட்ட ராமபிரான் இலங்கேசுவரனுக்கு அன்னை பராசக்தியின் அருள் இருப்பதை அறிந்தார். ஆகவே சரத் காலத்தில் 108 தாமரைப் பூக்களை அருச்சித்து அன்னை துர்க்கையை வழிபட முற்பட்டார். இராமபிரானது மனத்தைச் சோதிக்க விரும்பிய அன்னை பராசக்தி அப்பூக்களில் ஒன்றை முந்திய இரவே இராமபிரானுக்குத் தெரியாமல் மறையச் செய்தாள். 108ல் ஒன்று குறைந்திருப்பதைக் கண்ட இராமபிரான், தமது கண்ணை மலராகக் கருதி அம்பினால் குத்தி அதை அன்னைக்கு அருச்சிக்கக் கருதினார். அச்சமயம் பராசக்தி தோன்றி, ராமபிரானுக்கு அருள் புரிந்து இராவணனுடைய உயிர் பற்றிய இரகசியத்தையும் கூறிச் சென்றதாக ஒரு கதை



- மைசூர்
- தில்லி ராம்லீலாவில் வேடம் தரித்த குழந்தைகள்
- தில்லி ராம்லீலா நாடகத்தில் ஒரு காட்சி






பாங்க் சிப்பந்தி: நீங்க கேட்கிறபடி ஒரு லக்ஷ ரூபாயை நான் அப்படியே தூக்கி உங்களிடம் கொடுத்தால் என் மேலதிகாரிகள் என்னைக் கட்டி விடுவார்கள்!

---

கூறுகிறது. இக்கதையை முன்னிட்டுச் சக்தியை வழிபடும் நவராத்திரி திருவிழாவை ராம் லீலாவாகப் பாரத நாட்டின் வடக்குப் பிராந்தியத்தில் கொண்டாடுவதாகத் தெரிகிறது.

மகாராஷ்டிர மாநிலத்துப் பெண்கள் தசரா உத்சவத்தின் ஆரம்ப தினத்தன்று மண், பித்தளை அல்லது செம்பினாலான பாத்திரத்தில் பாலிகை தெளித்து ஒன்பது நாட்கள் தேவி பூஜை செய்து விஜயதசமியன்று பாலிகையைத் தூக்கிக் கொண்டு ஆவேசத்துடன் ஆடி, பூசை முடிந்தவுடன் பாலிகையை, ஆற்று நீரில் கரைத்து விடுவார்கள். இதை மராத்தியில் ''காகர் புங்க்ணே'' என்று கூறுவார்கள்.

பண்டைக் காலத்தில் மகாராஷ்டிர மாநிலத்தில் க்ஷத்திரிய வகுப்பினர் எதிரிகளை வெற்றி கொண்டு கிடைக்கும் தங்கம் முதலிய விலையுயர்ந்த பொருட்களைக் கொண்டு வந்து பெரியவர்களிடம் கொடுத்து வணங்குவர். இந்த வழக்கத்தை இன்றைக்கும் கடைப்பிடிப்பதற்கு அடையாளமாக நவராத்திரி பூசை முடிந்ததும் ஆயுதம் தாங்கி ஊருக்கு வெளியே சென்று ''ஷாமி'' என்ற மரத்தின் இலை, கிளைகளைக் கொண்டு வந்து, அதைத் தங்கமாகப் பாவித்து, பெரியவர்களிடம் கொடுத்து அவர்களது ஆசியைப் பெறுகிறார்கள்.

ராஜஸ்தான் மாநிலத்தில் தசரா, வீரர்களின் திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. தம் கணவர்களின் நலனுக்காகப் பெண்கள் விரதமிருந்து சக்தியைப் பூசித்து வழிபடுவது வழக்கம். தசரா நன்னாளில் அன்னை பராசக்தி அம்மாநிலத்தின் ஒவ்வொரு வீட்டுக்கும் ஒரு தடவையாவது வந்து செல்வதாக ஐதிகம். பெண்கள் தமது வழிபாட்டுக்கு அன்னையின் விக்கிரகம் எதையும் உபயோகிப்பதில்லை. சுவரில் எழுதப்பட்டுள்ள மந்திரம் ஒன்றையும், அதன்கீழ் வரையப்பட்டுள்ள ஸ்வஸ்திக் சின்னத்தையும் அன்னை பராசக்தியாகப் பாவித்து அவர்கள் வழிபடுவார்கள். தீவிர ஆஸ்திகத் தன்மை படைத்த சிலர் மணலில் தமது உடலில் பாதியைப் புதைத்துக் கொண்டு ஒன்பது தினங்கள் தீவிர வழிபாடு செய்வதாகவும் கூறப்படுகிறது.

குஜராத் மாநிலத்தில் அன்னை பராசக்தி அம்பாஜி என்ற பெயரால் அழைக்கப்படுகிறாள். கடைசி நாளன்று இளம் பெண்கள் எரியும் மெழுகுவத்தி அடங்கிய துளையிடப்பட்ட மண்பானைகளைத் தலையில் ஏந்தி 'கர்பா' என்ற கிராமிய நடனத்தை ஆடிக்கொண்டே தங்களது உறவினர்கள், நண்பர்களுடைய வீடுகளுக்குச் சென்று வருவது வழக்கம்.

மற்ற மாநிலங்களில் நவராத்திரி திருநாள் முடிவடையும் விஜயதசமி அன்று, வடக்கு ஹிமாசலப் பிரதேசத்து மக்கள் தசரா திருவிழா கொண்டாடத் தொடங்குகிறார்கள். அவர்களுடைய கொண்டாட்டம் ஒரு சரித்திரக் கதையை ஆதாரமாகக் கொண்டது. கூலு பள்ளத்தாக்கைச் சேர்ந்த ராஜா ஜகத்சிங் என்ற அரசனுக்கு ஒரு சாபம். அது நீங்க அயோத்தியில் உள்ள ரகுநாத்ஜி என்ற இராமபிரானது விக்கிரகத்தைக் கொண்டு வந்து தம் நாட்டில் கோயில் கட்டி பிரதிஷ்டை செய்யும்படி கூலுவின் கற்றறிந்த அந்தணர்கள் சிலர் யோசனை கூறினார்கள். ஜகத்சிங்கின் நம்பிக்கைக்குப் பாத்திரமான தாமோதர தாஸ் என்ற தூதுவன் ஒருவன் அயோத்திக்குச் சென்று ரகுநாத்ஜி விக்கிரகத்தைத் தூக்கி வந்தான். இதற்குள்ளாக ரகுநாத்ஜி வீற்றிருப்பதற்கான கோயில் ஒன்றும் கூலுவில் கட்டப்பட்டது. ஜகத் சிங் ரகுநாத்ஜியின் விக்கிரகத்தை தன் சிம்மாசனத்தின் மீது வைத்துத் தன் நாட்டை அதற்கு அர்ப்பணித்து, பின் கோயிலில் பிரதிஷ்டை செய்து, தானே அக்கோயிலுக்குக் காப்பாளனாக இருந்து பணிவிடை செய்து வந்தான். விஜயதசமியன்று இங்கு ரகுநாத்ஜியின் விக்கிரகத்தை அழகாக அலங்கரிக்கப்பட்ட 28 சக்கரங்களுடைய பெரிய ரதத்தில் ஊர்வலமாக எடுத்து வந்து, பொது அரங்கில் கொலுவிருக்கச் செய்வார்கள். ரகுநாத்ஜியின் ரதத்தை இழுப்பதை அம்மாநிலத்தவர் புனிதமாகக் கருதுகிறார்கள். பொது அரங்கை அடைந்தவுடன் ரகுநாத்ஜி தேவ தர்பார் நடத்துவதாகக் கூறப்படுகிறது. பக்கத்து ஊர்களில் உள்ள எல்லாக் கோவில்களின் விக்கிரகங்களையும் மேள தாளங்களுடன் எடுத்து வந்து ரகுநாத்ஜியின் அருகில் கொலுவிருக்கச் செய்வது அங்குள்ள வழக்கம்.

வங்காள மாநிலத்தவர் தசராவை, ''துர்கா பூஜை'' என்ற பெயரில் கொண்டாடுகின்றனர். மகாளய அமாவாசையையடுத்து ஆறாவது நாள் முதல் விஜயதசமிவரை அழகாக அலங்கரிக்கப்பட்ட விநாயகர், சிவன், முருகன், லட்சுமி, சரஸ்வதி முதலிய தெய்வ உருவங்களுக்கிடையில் நடுநாயகமாக மகிஷாசுரனை வதம் செய்வதற்காகச் சிங்க வாகனத்தில் வீற்றிருக்கும் துர்க்கையின் விக்கிரகத்தை வைத்து 'துர்க்கா பூஜை' நடத்துவர். விஜயதசமியன்று அந்த விக்கிரகங்களை ஊர்வலமாக எடுத்துச் சென்று அருகில் உள்ள கங்கை அல்லது வேறு ஆறு, குளத்தில் கரைத்து விடுவார்கள்.

தசரா பாரதத்தின் பல மாநிலங்களில் பலவிதமாகக் கொண்டாடப்பட்டாலும் அவை யாவற்றிலும் ஒரே தத்துவமே அடிப்படை. அதர்மம் விலகி, தர்மம் ஓங்க வேண்டும் என்ற பிரார்த்தனைதான் அது.

அக்டோபர்
# 20௳
முதல்

சென்னை
## குளோப் · ஸ்ரீகிருஷ்ணா
## மகாலட்சுமி · ராஜகுமாரி (ஏர்கண்டிஷண்ட்)
மற்றும் தமிழ்நாடெங்கும்

---

'பாரத்' புரட்சி நடிகர் **எம். ஜி. ஆர்** அளிக்கும்
மணியனின்
# இதய வீணை
உதயம் புரொடக்ஷன்ஸாரின் வண்ணக்காவியம்



டைரக்ஷன்: **கிருஷ்ணன் பஞ்சு** தயாரிப்பு: **மணியன்.** வித்வான் **வே. லட்சுமணன்**

# நயமிகு துணிகள் எவை?



# டுவின் டஸ்கர்

டிரில் • பாப்ளின் • காபர்டைன் • டஸூர்
முதலியன



**மதுரை மில்ஸ்** மதுரை, தென் இந்தியா

Bensons — 1841 AJITAM

---

## தனிப்பட்ட ஃபார்முலா... அபூர்வ மருந்து !
## அறுவை சிகிச்சை இன்றியே
## மூலத்தை சுருக்க உதவுகிறது

**நமைச்சலை நிறுத்துகிறது — நிமிடங்களில்**
**வலியைப் போக்குகிறது.**

**நியூ யார்க்** — இப்போது விஞ்ஞானத் துறை, ஒரு புதிய மருந்தைக் கண்டுபிடித்துள்ளது. அந்த மருந்து, முற்றிவிட்ட மூலநோய் கண்டவர்களைத் தவிர மற்றவர்களின் மூலத்தை, அறுவை சிகிச்சை இன்றியே சுருக்குகிறது. மூலநோய் கண்டிருந்த கணக்கற்றவர்களுக்கு அம்மருந்து 'கருத்தைக் கவரும் அபிவிருத்தி' அளித்துள்ளது. டாக்டர்களின் பரிசோதனைகளும் அதை உறுதி செய்துள்ளன. மூலநோயால் ஏற்படும் வலியும் நமைச்சலும் அதி விரைவில் நீங்கி, மூலம் சுருங்கி, குணமேற்பட்டிருக்கிறது. அம்மருந்தின் விளைவுகள் போற்றும் படியாக உள்ளன. மூலநோயால் 10, 20 ஆண்டுகளாகத் துன்புற்றோர்கூட, "இப்போது மூலநோய்க்கு சிகிச்சை அளிப்பது ஒரு பிரச்சனையே இல்லை" என்று கூறுகிறார்கள். தூக்க மருந்து, உணர்விழப்பு மருந்து மற்றும் சுருங்கச் செய்யும் மருந்துகளைப் பயன்படுத்தாமலேயே இந்த சிகிச்சை வெற்றி தந்துள்ளது.

இந்தப் புதிய, தனிப்பட்ட மருந்தின் பெயர் பிரிபரேஷன் எச்*! இது மூலத்தை சுருக்குவதோடு, நமைச்சலை நீக்கி, வலியைத் தணிக்கிறது; மலம்போக்கின்போது வலி ஏற்படுவதில்லை.

உங்கள் மருந்து வியாபாரியிடம் "பிரிபரேஷன் எச் ( இடும் குழாயுடன் ) வேண்டுமெனக் கேளுங்கள். 30 கிராம் அல்லது அதிக சிக்கனமான 50 கிராம் ட்யூப் வாங்குங்கள்.

Regd. User of TM: Geoffrey Manners & Co. Ltd.



# விசுவாமித்திரர்

சரித்திர, புராண நாடகங்களை அரங்கேற்றுவதில் புதுமைப் புரட்சி செய்யும் மனோகர் இம்முறை ஒரு புரட்சிக்காரரின் கதையையே தமது புதிய படைப்பாக்கிக் கொண்டிருக்கிறார்.

மகோதய நாட்டு மன்னன் கௌசிகன் செய்த புரட்சி, க்ஷத்திரியனான அவன் தபஸ்வியாகி அதிலும் பிரும்ம ரிஷியாக முயன்றது தான். முடியாது, கூடாது என்று தடைகள் ஏற்பட்டபோது அவைகளைத் தகர்த்தெறிந்து வெற்றி கொண்டான். கௌசிகன் விசுவாமித்திரராக மாறி, பிரும்ம ரிஷியாக உயர்ந்ததை விளக்கும் ஒப்பற்ற படைப்பு இது.

நமது இதிகாச புராணங்களில் விசுவாமித்திரரைப் பற்றித் துண்டு துண்டாகக் கிடைக்கும் சம்பவங்களைக் கோத்து ஒரு முழு நீள வாழ்க்கைச் சித்திரமாக்கி அதற்குத் தம் அருமையான வசனங்களால் மெருகூட்டியிருக்கிறார் பேராசிரியர் ஏ. எஸ். பிரகாசம் அவர்கள். முதல் பாதியில் கௌசிகனாகவும் மறு பாதியில் விசுவாமித்திரராகவும் வரும் மனோகர் பேராசிரியரின் உழைப்புக்கு உயிரூட்டி நம் முன்னே விசுவாமித்திரராகவே உலவுகிறார்.

இந்நாடகத்தில் ஒரு சங்கடம். தாடிகளும், காவியுடையும், கமண்டலமுமே தாங்கி வரும் பாத்திரங்களைக் கொண்ட கதை இது. அப்படியும்கூட இதை அவையோர் அசையாமல் அமர்ந்து பார்க்கும் அளவுக்கு 'டெம்போ'வோடு உருவாக்கித் தந்திருக்கிறார் மனோகர்.



இதுவரை யாரும் செய்யாததையே செய்து சாதனை புரியும் மனோகர், இந்நாடகத்தை ஒரு 'டிராமாஸ்கோப்'பாக்கி அளித்துள்ளார். அரங்கத்தின் நீளம் அகலம், ஆழம் ஆகியவைகளை உணர்ந்து திகைத்துப் போகிறார்கள் ரசிகப் பெருமக்கள். திரையுலக ஜாலங்களை நாடக மேடையிலும் ஆக்கிக் காட்டிய பெருமைக்கு உரியவராகிறார். டிராமாஸ்கோப்புக்கு ஏற்ப 'ஸ்டீரியோ போனிக் சவுண்'டையும் அளிக்க மறக்கவில்லை மனோகர். மேடையில் இடி இடிக்கிறது. மின்னல் வெட்டுகிறது. மழை கொட்டுகிறது! சினிமாவில் மட்டுமே முழுமை பெறக் கூடிய காட்சிகளை நாடக மேடையிலே தத்ரூபமாகக் காட்டியிருக்கிறார். நெருப்பு ஆற்றிலே நடந்து போகிறார் கௌசிகன். திரிசங்குவுக்குப் புஷ்பக விமானம் வருகிறது. வான வீதியிலே பறக்கிறது. இப்படி ஒவ்வொரு காட்சியையும் சொல்லிக் கொண்டே போகலாம். எத்தனை சம்பவங்கள் அடுக்கடுக்காக! ஆனால் அத்தனையும் எத்தனை வேகமாக முன்னேறுகின்றன!

வசிஷ்டரை வெற்றிகொள்ள விசுவாமித்திரர் பலப் பல தடைகளைத் தாண்ட வேண்டியிருக்கிறது. அரிச்சந்திரன் கதையும் வருகிறது. ராமாயணமும் வருகிறது. சகுந்தலையின் கதையும் இடம் பெற்றுள்ளது.

இவை மட்டுமா? புராண புருஷரான விசுவாமித்திரர் நாடகத்தில் இன்றைய உலக விவகாரங்களும் இடம் பெறுகின்றன!

நாராயணனும் நாகராஜனும் இந்நாடகத்தில் நகைச்சுவை விருந்தைக் குறைவில்லாமல் அளிக்கிறார்கள். தர்ம ரிஷி, கர்ம ரிஷிகளாக வந்து போகப் போக மனிதன் எப்படி மாறுவான் என்று கர்ம ரிஷி விரித்துக் கூறுவதெல்லாம் இன்றைய நடைமுறை வாழ்க்கையையும், அரசியலையும் நினைவுபடுத்தி நம்மைச் சிரிக்க வைக்கின்றன. கண்வராக வரும் ரவிசங்கர், (நகைச்சுவை உரையாடல்களின் பொறுப்பாளியும் இவரே) இந்திரனாக வரும் தங்கராச ஆகிய எல்லாருமே திறம்பட நடித்து இந்த நாடகத்தின் வெற்றிக்கு வழி வகுத்திருக்கிறார்கள். நேஷனல் தியேட்டர்ஸாரின் வெற்றிக் கிரீடத்திலே விசுவாமித்திரர் ஒப்பற்ற ஒரு வைரமாக ஒளிவிடுகிறது. -வி.கே.

# எடுப்பான தோற்றத்திற்கு ஈடிணையற்றது 'டெரீன்'

மிடுக்கான தோற்றம், கசங்காத் தன்மை, குறைந்தபட்ச பராமரிப்பு ஆகிய விஷயங்களில் தம் வாக்குறுதியை நிறைவேற்றுகின்றன 'டெரீன்'® துணிகள். தவிர அவை மிகப் புதுமையான கலர்களிலும், டிஸைன்களிலும் வருகின்றன.

இப்பொழுது 'டெரீன்' என்பதன் பொருள் இன்னும் விரிவடைந்துவிட்டது. 'டெரீன்' தரத்தில் நாட்டமுடைய, தேர்ந்தெடுத்த மில்களில் மேலும் கடுமையான தரநிர்ணயங்களுக்கேற்ப, மேலும் பரபரப்பூட்டும் டிஸைன்களில் தயாராகும் துணிகளைக் குறிக்கிறது. ஏனெனில், இத் துணிகள், 'டெரீன்' போலவே, தமது துறையில் முதன்மையில் இருக்கும் மில்களினால் தயாரிக்கப்படுகின்றன.

**'டெரீன்'—சிறந்த மில்களுடன்...**
**சிறந்த துணிவகைகளின் மீது**

®'டெரீன்' என்பது கெமிகல்ஸ் அண்ட் ஃபைபர்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்டின் ரெஜிஸ்டர்ட் டிரேட்மார்க் ஆகும்.

# உள்ளத்தின் உள்ளே!

கே. ஜெயலக்ஷ்மி

வேலைகளை முடித்துக்கொண்டு அப்போது தான் சமையல் அறையைவிட்டு வெளியே வந்தாள் சாரதாம்பாள். களையிழந்த முகத்துடன் உள்ளே நுழைந்தான் கணபதி.

" என்னடா, இந்த நேரத்தில்....?" கேள்வியைக்கூட முழுமையாக்க முடியாத வியப்பு அவளுக்கு.

"ஒன்றுமில்லே, அம்மா !" அசட்டையாகப் பதில் அளித்தவன் உடைகளைக்கூட மாற்றிக் கொள்ளாமல் அப்படியே தரையில் பாயை விரித்துக் கொண்டு படுத்துவிட்டான்.

இவ்வளவு போதாதா பெற்ற மனத்துக்கு? பதறிப் போனவளாய் மகனின் சிகை கவிழ்ந்த நெற்றியில் சிகையை ஒதுக்கிவிட்டுக் கையை வைத்துப் பார்த்தாள். வியர்வையில் படிந்ததால் விரல்கள் பிசுபிசு என்றிருந்ததைத் தவிர வேறு ஒன்றுமில்லே.

"சுடக் காணுமேடா ?"

"சுடுகிறது என்று நான் சொன்னேனா என்ன? போய் உன் வேலையைக் கவனியம்மா. என்னைக் கொஞ்சம் தனியாக இருக்கவிடு."

"லீவு போட்டுவிட்டு வந்திருக்கிறாயா ?"

"ஆ...மா...ம்...."

"இன்னைக்கு மட்டும்தானே ?"

"இனிமேல் எனக்குத் தினமும் லீவுதான். ஏம்மா, என்னை இப்படிப் பிடுங்கி எடுக்கிறாய்? கொஞ்சம் நிம்மதியாக இருக்கவிடேன்."

"பெற்ற மனசு இல்லையாடா? என்னென்னவோ நினைக்க மனசு பயப்படுகிறதேடா, குழந்தே !" — தழுதழுக்கிறது குரல். மெள்ள நகருகிறது பாசத்தின் உருவம். அவன்தான் கடுகடுக்கிறானே !

அவனுக்கும் பொறுக்கத்தானில்லே.

" நான்.... நான்.... வேலையை வேண்டாம்னு சொல்லிவிட்டு வந்துட்டேனம்மா." அவன் சொல்லியே விட்டான்.

"என்ன! என்ன!" — வியப்பு சிலையாக்கினாலும் வாய் பேசுகிறது.

" எனக்கு அந்த வேலே பிடிக்கவில்லே."

" ஏன் பிடிக்கவில்லே ?"

" என்னமோ பிடிக்கவில்லே. அதையெல்லாம் உன்னிடம் சொல்லிக் கொண்டிருக்க முடியாது."

" இருக்கட்டும்டா ! இதை வேலையில் சேருகிறபோதே சொல்லி யிருக்கலாம் இல்லேயா ? எத்தனை பேரிடம் பல்லைக் காட்டி, எத்தனை பேர்களின் காலில் விழுந்து, எத்தனை அப்பளக் கட்டுக்களை வஞ்சமாகத் தொலைத்து இந்த வேலே கிடைத்தது ? நொடியில் உதறி விட்டு வந்து நிற்கிறாயேடா....." ஆற்றாமை அழுகையாகிறது. புடவைத் தலைப்பு ஈரமாகிறது.

அவள் நகர்ந்து விடுகிறாள்.

படுக்கையில் நிலைகொள்ளாமல் புழுவாக நெளிகிறான் கணபதி. அம்மாவை அதட்டி உருட்டி விரட்டிவிட முடிந்தது. ஆனால் அவனுடைய மனக் குரங்கை அதுபோல் விரட்டி அடிக்க அவனால் முடிந்ததா ? இல்லேயே... ! முடிந்திருந்தால் இப்படி வேலையை விட்டு விட்டு வந்திருப்பானா ? அன்னையைக் கடிந்து கொள்வதில் என்ன பயன் ? எத்தனை பொரிகைகள் பிடித்து.. எத்தனை எத்தனை சிரமப்பட்டு அவள் இந்த வேலையை அவனுக்கு வாங்கித் தந்தாள் ! நொடியில் உதறி விட்டு வந்துவிட்டானே ! அடுத்த வேளைச் சாப்பாட்டுக்கு இருக்கிற கர்வமா ? இருக்கட்டுமே ! அதற்கும் அடுத்த வேளைக்கு....? தலையைத் தலையணையில் போட்டு மொத்திக் கொண்டான். அம்மாவிடமே இன்னும் நாலு வார்த்தைகள் கேட்டிருக்கலாமோ ?

இன்னும் அவனுக்கு வோட்டுப் போடுகிற வயது வரவில்லே. எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்திருந்தான். டைப்ரைட்டிங் பாஸ் செய்ததும் பகீரத முயற்சிகள் செய்து மகனுக்கு வேலே தேடிக் கொடுத்தாள் சாரதாம்பாள். ஆறு மாதங்களாயிற்று. கொஞ்சம் கொஞ்சமாக எண்ணெய் அடுப்பில் வேகுவதைக் குறைத்துக் கொண்டே வந்துவிட்டாள். நூற்றி இருபது ரூபாய் சம்பளத்தில் அவள் மன நிறைவோடு வாழத் தெரிந்தவள். வாழ்க்கை நிம்மதியாகப் போய்க் கொண்டிருந்தது. அப்படியே போய்க் கொண்டிருக்கும் என்றுதான் அவள் எண்ணினாள். ஆனால் அவன்....... ?

'கலேமாறு ஷூ மார்ட்'டில் வேலே கிடைத்தபோது கணபதி ரொம்பச் சந்தோஷமே அடைந்தான். அதிக சிரமம் இல்லாமல் பணி புரிய முடியுமல்லவா ? விதம் விதமான உடைகள் அணிந்த அழகு சுந்தரிகள் பலர் வண்ணத்துப் பூச்சிகளைப் போல் கடைக்குள் நுழையும் பொழுதெல்லாம் அவனுடைய இளமை உள்ளம் சிறகடித்துப் பறக்கும். ஓடி ஓடி அவர்களை உபசரிப்பான். அவனும் பார்க்க வசீகரமான தோற்றம் உடையவனாக இருந்தான். 'ஹெல்பர்' வேலையென்று அவன் முதலில் குறைவாக எண்ணிய வேலேதான். ஆனால் அதில்தான் எத்தனை எத்தனை அநுபவங்கள்! பட்டுப் பாதங்களைப் பற்றிக் காலணிகளை மாற்றி மாற்றி அணிவிக்கும்போது ஏற்படுகிற ஆனந்தம் குவியும் முகத் தாமரைகள் பரப்பும் இனிய சுகந்தம். தவறுதலாக இருப்பினும் அவன் முகத்துடன் எதிர்பாராமல் உரசும்போது ஏற்படுகிற சிலிர்ப்பு...... ஆரம்ப காலத்தில் அவனுக்குத் தலைகால் புரியத்தான் இல்லே. ஆனால் போகப் போக அவனுக்கு ஏற்பட்டு வந்த உணர்வு பேதங்கள் தந்த சோதனையோ? விடலைப் பையன் அல்லவா ? தவித்துத் தடுமாறித்தான் போனான் கணபதி.

நாட்கள் செல்லச் செல்ல அவனால் ஈடு கொடுக்க முடியவில்லே. கதையோ திரைப்படமோ அல்லவே ! அவனுக்காகவே பிறந்த ஒருத்தி வரவும் — அவர்களுக்காகவே ஏற்பட்டிருக்கும் காதல் மலரவும் — வளர மட்டுமே உரிமை உள்ளதுபோல் வளர்ந்து

மண விழாவாகச் சிறப்படையவும் முடிய வில்லையே !

படித்திருந்த கதைகளும், பார்த்திருந்த படங்களும் அவன் உணர்வுகளைத் தூண்டிவிட,



உண்மை வாழ்வின் நடப்போ அவனை நையாண்டி செய்தது. தன்னால் 'கலோனா ஷூ மார்ட்டி'ன் பெயர் கெட்டுவிட இடமளித்துவிடக் கூடாது என்கிற நியாயமான முடிவுக்குத்தான் கடைசியில் கணபதி வர வேண்டியிருந்தது. ஆரம்பத்திலெல்லாம் பெண் 'கஸ்டமர்'களையே விரும்பி வரவேற்றவன், இப்போது பெண்களைக் கண்டாலே அஞ்ச வேண்டியவனானான். ஆண்களையே எதிர்பார்க்க வேண்டிய நிலைக்கு வந்துவிட்டான். அது நடக்கக் கூடியதா ? வேறு வழி இல்லாத நிலையில், தன்னைக் காப்பாற்றிக் கொள்ள மட்டுமல்லாது, 'கலோனா ஷூ மார்ட்'டின் நல்ல பெயருக்கும் மாசு ஏற்படா திருக்கவும் எண்ணி வேலையை ராஜிநாமா செய்துவிட்டு வந்துவிட்டான்.

அடுத்த நிலை? வீட்டின் நிலவரம்? அம்மா பிட்டுப் பிட்டுக் காட்டுகிறாளே, போதாதா ? ஒழுக்கமா, வேலையா ? பண்பா, பசியா ? இரண்டுக்கும் நடுவில் நல்லவனாக வாழ்கிறவர்கள் சமுதாயத்தில் இல்லையா ? 'நான் மட்டும் ஏன் இப்படி இருக்கிறேன்?' என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டான் கணபதி. அவனுக்கே வெட்கமாகத்தான் இருந்தது. அது மட்டும் அவனுடைய பலவீனத்தை அகற்றிவிடப் போதுமானதாக இல்லையே !

'நாளைக்கு என்ன செய்வது ?' என்ற பிரச்னை அவன் முன் கேள்விக்குறியாக நின்றது. வீட்டுக்குள் அடைந்து கிடந்து என்ன பயன்? வேறு வேலை தேடிக் கொண்டாக வேண்டுமே ! எழுந்து வெளியே சென்றான்.

'**சி**ன்ன எலும்பு முறிவுதான். இரண்டு வாரங்கள் ஆஸ்பத்திரியில் இருந்தால் போதும்' என்று மருத்துவர் சொன்ன போது, 'ஐயோடா' என்று அவன் அலறினாலே தவிர உள்மனம் 'இரண்டு வாரங்களுக்குச் சோற்றுக் கவலை யில்லை. அம்மா தான் கொஞ்சம் கவலைப்படுவாள். பட்டுவிட்டுப் போகட்டும்' என்று தான் எண்ணியது. அது மட்டுமல்ல; ஸ்கூட்டரில் படு வேகமாக வந்து அவன் மீது மோதி




அவனைக் கீழே தள்ளிவிட்டுப் போனவரை மானசீகமாக வாழ்த்தவும் செய்தது.

''மிஸ்டர், கணபதி ! பல் தேய்த்துவிடுகிறீர்களா ?'' என்ற இனிய குரல் கேட்டுக் கண் விழித்தான் கணபதி.

கையில் பல்பொடியும் வெந்நீரும் ஏந்தி, பவழ வாயில் புன்னகை சிந்த நர்ஸ் நிரஜா நின்று கொண்டிருந்தாள் அருகில்.

எழுந்திருக்க முயன்றான். முடியவில்லை. மரண வலி வலித்தது.

'' வேண்டாம், மிஸ்டர் ! கொஞ்சம் இருங்க. நான் 'உதவி' பண்ணுகிறேன்...'' என்று பரிவுடன் பகர்ந்த நர்ஸ் நிரஜா தன் கையிலிருந்தவைகளைக் கீழே வைத்துவிட்டு அவனை மெள்ளத் தூக்கி உட்கார வைத்தாள்.

அவன் முகத்துக்கு நேராக, 'வாஷ் பேஸி'னை நீட்டிக் கொண்டு வெந்நீரில் சிறிது எடுத்து அவன் வாயில் விட்டுக் கொப்புளிக்கச் சொல்லிப் பல்பொடியை எடுத்துத் தந்தாள்.



அவன் வைத்த கண் எடுக்காமல் அவளுடைய முகத்தையே பார்த்தான். அதில் கடமையைச் செய்கிற பாவமும், அவனுடைய இயலாமைக்காக உதவுகிற கனிவும் தான் இருந்தனவே தவிர களங்கம் கடுகளவும் இருக்கவில்லை. அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''மிஸ்டர்! நேரமாகிறது....'' என்றாள் நர்ஸ், இளநகையைத் தவழவிட்டுக் கொண்டு.

குனிந்து வாயைக் கொப்பளித்தான் கணபதி.

கீழ்க் கண்ணால் அவள் முகத்தை நோக்கினான் அவன். ஊஹூம். அதில் அவன் எதிர்பார்த்த சலனம் துளியும் இருக்கவில்லை.

''உங்களுக்குத் தேவையான அளவுக்கு விடுமுறை கிடைக்குமல்லவா?'' டவலை நீட்டியபடியே வினவினாள் நர்ஸ் நிரஜா.

அவனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. ''விடுமுறை! நான் நிரந்தரமான விடுமுறையில் தான் தற்சமயம் இருக்கிறேன்.''

''வேலையில்லாத் திண்டாட்டமா....?''

''இருந்த வேலையைப் போக்கிக் கொண்ட பைத்தியக்காரத்தனம்.''

''அப்படியா!'' ஆச்சரியத்தோடு அவன் முகத்தைப் பார்த்தாள் அவள்.

''அப்படியேதான். பெண்களின் கால்களைப் பற்றித் தாஜா செய்கிற வேலை.....''

''ஓ! ஐ ஸீ....! தன்மானம் இடம் தரவில்லையாக்கும்?''

''ம்.... அதை உங்களிடம் எப்படிச் சொல்ல முடியும்? வந்து.... ஒரு சின்ன சந்தேகம்......'' அவனுடைய குரலில் பிசிறு தட்டியது.

'என்ன?' என்பதுபோல் அவள் புருவத்தை உயர்த்தினாள்.

''நீங்க.... நீங்க... மிஸ்தானே?''

''ஆமாம்!...''

''உங்களால்..... உங்களால்.... என்னைப் போன்றவர்களிடம் .... எப்படிச் சலனமில்லாமல் பழக முடிகிறது.....?''

அவள் விக்கித்துப் போய் நின்றுவிட்டாள்.

''தவறாக எடுத்துக் கொள்ளாதீர்கள். தெரிந்து கொள்ளத்தான் கேட்டேன்.'' அவசரமாகக் கூறினான்.

'புரிகிறது' என்பதுபோல் தலையை அசைத்தாள் நர்ஸ் நிரஜா. தன் தளிர்க் கரத்தால் அவனுடைய முகத்தைப் பற்றி நிமிர்த்தினாள் அவள்.

கைவழியேகூடப் பாச வெள்ளம் பாய்ந்து வந்து உடலை மட்டுமல்ல — உள்ளத்தையேகூடப் புல்லரிக்கச் செய்ய முடியும் என்பதை அவன் இப்போது உணர்ந்தான். அது நன்றியாக அவன் கண்களை நிறைத்துவிட்டது.

''நான் ஐந்தாறு அண்ணன் தம்பிகளுடன் பிறந்தவள். என் பணிவிடைகளை ஏற்பவர்களிடமும் நான் அவர்களைத்தான் காண்கிறேன். என்னைப் பற்றி உங்களைப் போன்றவர்கள் என்ன நினைக்கிறீர்களோ எனக்குத் தெரியாது. என் இனத்திலும் தடுமாறுபவர்கள் இருக்கக்கூடும். ஆனால் ஒன்று மட்டும் உண்மை. நல்லவர்களின் இதயம் ஒரே ஒரு தடவைதான் மலரும். அந்த உள் மலர்ச்சிக்காகத்தான் நாம் பிறந்திருக்கிறோம் என்பதை மறந்துவிடக் கூடாது. அபூர்வ அழகுடைய அந்த நிமிஷத்துக்காகக் காத்திருக்கத் தெரிந்து கொண்டு விட்டால்.... யாரிடம் எப்படிப் பழக நேர்ந்தாலும் மனம் சலனமடையாது'' என்ற நிரஜா மருந்துக் குப்பியை அவனிடம் கொடுத்தாள்.

அவனுக்கு ஒன்றும் பேசத் தோன்றவில்லை. அவளுடைய முகத்தையே உற்றுப் பார்த்தபடி ஊமையாக உட்கார்ந்திருந்தான்.

''நீங்க வேலை பார்த்தது எந்த இடத்தில்?''

''கலோனு ஷூ மார்ட். மாம்பலம் கிளையில்.......''

''என் அண்ணனும் அதில்தான் ஒரு பொறுப்புள்ள பதவியில் வேலை பார்க்கிறார். உங்களைத் திரும்ப வேலைக்கு எடுத்துக் கொள்ள அவரால் ஏதேனும் செய்ய முடியுமா என்று கேட்டுப் பார்க்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே நடந்தாள் நர்ஸ் நிரஜா.

''மிஸ்..... !'' அவசரமாக அழைத்தான் கணபதி.

திரும்பினாள் அவள்.

''நான் வேறு எங்கேனும் வேலை தேடிக் கொள்வேன். நீங்கள் சிரமப்படவேண்டாம்.''

''சிரமம் எடுத்துக் கொள்வது உங்களுக்காக அல்ல. எல்லாம் சுயநலத்துக்காகத் தான்.'' — தாழ்ந்த குரலில் மொழிந்தாள் நிரஜா.

''சுயநலமா? புரியவில்லையே....... !'' விழித்தான் கணபதி.

இவ்வளவு நேரமாக நிமிர்ந்தே நின்ற அந்த எழிலார்ந்த முகம் இப்போது செவ்வரளியாகச் சிவந்து குனிந்தது.

அவனுக்குப் புரிந்து விட்டது போன்ற உணர்வு. தவித்துப் போய் விட்டான்.

# பூட்ஸ் வழங்கிடும் செராமு-இருமல் வரும்போது உண்மையிலேயே இதமளித்துச் செயலாற்றும் நோஸ்கபின் அடங்கிய இருமல் லாஸஞ்ஜ்(மாத்திரை)



சாறுவை மெல்லுங்கள்.
தூக்கமோ,
மலச்சிக்கலோ இன்றி
விக்காமல் இருமலிலிருந்து
நிவாரணம் பெறுங்கள்.

*நோஸ்கபின்—உலக சுகாதார ஸ்தாபனத்தால் இருமல் சிகிச்சைக்கு சிபாரிசு செய்யப்பட்ட நோஸ்கபின் அதிக சக்தி வாய்ந்த பாதுகாப்பான இருமல் நிவாரணி. அது இருமல் ஏற்படும் கேந்திர ஸ்தானத்திலேயே நேரடியாகச் செயலாற்றுகிறது.

இருமல்-நிவாரணி



**செராமு**

இருமலுக்கு நற்பயனுள்ள
சிகிச்சையளிக்கும் லாஸஞ்ஜ் (மாத்திரை)

CMBC-43-172-Tam




## 27. இறை பணியும் பொதுப் பணியும்



" ஒன்றுபடுவது தொடக்கம்
ஒன்று சேருவது முன்னேற்றம்
ஒன்றி உழைப்பது வெற்றி"

இந்த உயர்ந்த இலட்சியத்தையே சங்கத்தின் குறிக்கோளாகக் கொண்டு இயங்கி வருவது ஆழ்வார்குறிச்சி டோபாஸ் இளைஞர் குழு. இளைஞர்களாயிருந்தாலும் அவர்கள் யோசனை கேட்பதெல்லாம் பெரியவர்களிடம் தான்.

திருநெல்வேலியிலிருந்து ஆழ்வார்குறிச்சிக்குப் போய்ச் சேர்ந்த நான் அங்கு டோபாஸ் இளைஞர் குழுவைப் பற்றித் தபால் ஆபீசுக்குச் சென்று விசாரித்தேன். (இளைஞர் சங்கத்தைத் தேடிக் கொண்டு புதிய ஊரில் தெருத் தெருவாகச் சுற்றி அலையாமல் டக்கென்று தபாலாபீசுக்குச் சென்று விசாரித்த என்னை நானே பாராட்டிக் கொள்வதற்கு முன்பு ஊருக்குள் நுழையும் போதே தபாலாபீசை அமைத்திருந்த அரசின் புத்திசாலித்தனத்தைப் பாராட்டியே தீரவேண்டும் !)

ஆழ்வார்குறிச்சி இளைஞர் சங்கத்தைப் பற்றி விசாரித்ததும் போஸ்ட் மாஸ்டருக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. "வாருங்கள், ஸார்! உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்றார்.

எனக்கு வியப்பு ஒரு புறம். பெருமிதம் ஒருபுறம்.

அது சிறிய ஊராதலால் கல்வி காரியாலயத்திலிருந்து உதவி ஆசிரியர் வரப் போகிறார் என்ற விஷயம் பலருக்கும் பரவிவிட்டிருக்கிறது. பலரும் என் வருகையை ஆவலோடு எதிர்பார்த்திருக்கிறார்கள் !

சற்று நேரத்துக்கெல்லாம் அங்கத்தினர்கள் அனைவரும் தபாலாபீசுக்கு வந்து என்னை ஊருக்குள் அழைத்துச் சென்றார்கள். மிகப் புராதனமான நரசிங்கநாத சுவாமி—ஆவுடை அம்பாள் கோயிலுக்குப் போனோம். நூறு ஆண்டுகளுக்கு மேல் பழுதடைந்து யாருமே உள்ளே செல்ல முடியாமல் புதர் மண்டிச் சிதிலமடைந்து கிடந்த இவ்வாலயத்தை டோபாஸ் இளைஞர் சங்க அங்கத்தினர்கள் தங்கள் அயராத உழைப்பினால் ஒழுங்குபடுத்திக் கோயிலையும் ஓரளவு புதுப்பித்துச் சாய்ந்த மண்டபங்களை எடுத்து நிறுத்தி வழிபாட்டுக்கு உரியதாக்கினார்கள். ஆறு மாத காலம், இராப் பகல் பாராமல், சோர்வு அடையாமல் ஆலயத் துப்புரவுப் பணியைச் செய்திருக்



கிறார்கள். பாராட்டுக்குரிய பணி. உள்ளூர்ப் பிரமுகர் ஒருவர் மனமுவந்து ஆலயத்துக்கு மின் விளக்குகள் அமைத்திருக்கிறார். ஆலயத்தினுள்ளே, உலோக விக்கிரகங்கள் நிறைய இருக்கின்றன. அவை திருட்டுப் போய்விடக் கூடாதே என்ற எண்ணத்தில், துப்புரவுத் திருப்பணி நடைபெற்றுக் கொண்டிருந்த சமயத்தில் இளைஞர்கள் அங்கேயே இரவு, பகல் எந்நேரமும் காவல் காத்துக் கொண்டிருந்திருக்கிறார்கள்.

"ஆலயத்துக்குள் செல்ல முடியாமல் புதர் மண்டிக் கிடந்தபோது உலோக விக்கிரகங்களுக்குப் பாதுகாப்பு இருந்தது. துப்புரவு செய்து ஆலயத்துக்கு உள்ளே செல்ல வழி ஏற்படுத்திய பிறகு, அவ்விக்கிரகங்களை வெளியேற்றி அயல்நாடுகளுக்குக் கடத்திச் செல்லு






மேலே: பட்டம் வாங்கியவர்களும் பட்டம் வாங்கப்போகிறவர்களும் பொதுப் பணியில் ஈடுபட்டுள்ள காட்சி.

நடுவே: ஆழ்வார்குறிச்சி நரசிங்க நாத சுவாமி ஆலயம்.

கீழே: டோபாஸ் சங்க அங்கத்தினர்களில் முக்கியஸ்தர்கள்.



பெல்கிரேடில் ஸ்மயன் என்பவர், தம் அனுமதியின்றி எவரும் தமது வீட்டில் நுழையாதிருக்கத் தமது மூன்று அல்சேஷன் நாய்களுக்கும் பயிற்சி அளித்திருந்தார். அவைகளும் ஓர் ஈ காக்கையை உள்ளே விடாது. எஜமானருக்கோ நாய்களைப் பற்றி அலாதிப் பெருமை. ஒரு நாள் ஸ்மயன் குடும்பத்துடன் வெளியே சென்றிருந்தபோது ஒரு நாய் எண்ணெய் அடுப்பை இடறிக் கீழே தட்டிவிட, அது தீப்பிடித்து வீடும் எரிய ஆரம்பித்தது. தீயணைப்புப் படையினர் பறந்து வந்தனர். உள்ளே சென்று தீயை அணைக்க எவ்வளவோ முயன்றனர்: ஆனால் நாய்கள் அவர்களை உள்ளே விடவில்லை! 'கரிகாலன்'

---

வதற்குச் சுலபமாக வழி ஏற்படுத்தியாகி விட்டதே! ஆனால் எங்கள் கவலை நீடித்திருக்கவில்லை. இறைவன் திருவருளால், இப்பொழுது பம்பாயில் உள்ள இவ்வூர்ப் பிரமுகர் ஒருவர் தாமே முன் வந்து உறுதியான புதிய மரக் கதவுகளுக்கு ஏற்பாடு செய்துவிட்டார்!'' என்று கூறியபோது செயலாளர் கண்களில் கண்ணீர் பனிப்பதைக் கண்டேன்.

''எத்தனையோ ஆண்டுகளாகத் திருவிழா இல்லாமல் ஓய்ந்து கிடந்த இவ்வாலயத்தில் இவ்வாண்டு விநாயக சதுர்த்தி விழாவை மிகச் சிறந்த முறையில் கொண்டாடினோம். இதற்காக ஊரில் நிதி வசூல் செய்தோம். நாங்களும் எங்களாலான நிதியை வழங்கினோம்.''

''உங்கள் சங்கத்தின் குறிக்கோள்கள் யாவை?''

''ஏழை மாணவர்களுக்குக் கல்விக்காக இயன்ற அளவு உதவி செய்வது, தமிழையும், ஆங்கிலத்தையும் பரப்புவது, பொதுப்பணித் தொண்டர்களாக ஊராட்சி ஒன்றியத்துடன் இயன்ற அளவுக்கு ஒத்துழைப்பது, எல்லாச் சிறந்த பண்பாடுகளையும் அறிந்து அதன்படி இயன்ற அளவு ஒழுகுவது, மக்களிடையே இன வேறுபாட்டு உணர்ச்சியைப் போக்குவது, இனவேறுபாடின்றிப் பொதுத் தொண்டாற்றுதல் ஆகியவையே சங்கத்தின் குறிக்கோள்கள்!''

''பட்டியல் பிரமாதமாயிருக்கிறதே! இது வரையில் உங்கள் சங்கம் சாதித்துள்ளவைகளைக் கூறுங்கள்!''

''இவ்வூரிலுள்ள பள்ளிகளில் பயின்று வரும் நாற்பது ஏழை, மாணவ, மாணவிகளுக்கு ஸ்லேட்டுகள், புத்தகங்கள், பென்சில், பேனா முதலியவற்றை எங்கள் குழுவின் உறுப்பினர்களின் சந்தாத் தொகையைக் கொண்டும், பொதுமக்கள் அளித்த நன்கொடைத் தொகையைக் கொண்டும் வழங்கியுள்ளோம். மேலும், இவ்வூருக்கு அருகில் இருக்கும் சிவசைலத்திலுள்ள சௌிடு, ஊமையர் பள்ளிக் கூடத்துக்குத் தேசத் தலைவர் படங்களையும், கடவுளர் படங்களையும் அளித்துள்ளோம். இன்னும் ஒன்று முக்கியமாகக் கூற வேண்டும். உயர்நிலைப் பள்ளியில் பயின்று வரும் ஏழை மாணவர்களில் ஆண்டுக்கு ஐவரைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு ஆண்டுத் தேர்வுக்குச் சம்பளம் கட்ட முடிவு செய்துள்ளோம்.''

''இவை தவிர ஏதாவது சிறப்பாகச் செய்திருக்கிறீர்களா?''

''சிறப்பான தொண்டு ஒன்றா, இரண்டா? பல! மாதம் ஒரு முறை இவ்வூரிலுள்ள வார்டுகள் அனைத்துக்கும் சென்று அங்கங்கே உள்ள குறைகளைக் கேட்டறிந்து அவற்றைப் போக்க நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம். அம்மை, காலரா போன்ற தொற்று நோய்கள் ஊரில் எங்காவது வருமாயின் அந்நோய்கள் பரவாமல் தடுக்கும் பொருட்டுத் தடுப்பு ஊசி போடுபவர்களை விரைந்து சென்று அனுப்பி அழைத்து வந்து நோய் பரவா வண்ணம் செய்கிறோம். நடைபாதைகளும், சாலைகளும் எங்காவது சரியான நிலையில் இல்லையெனில் ஊராட்சி மன்றத்துக்கு மனுச் செய்து அவற்றைச் சரி செய்வோம். பஸ் போக்குவரத்து நேரங்களை இவ்வூர் மக்கள் வீட்டிலிருந்தவண்ணமே அறிந்து கொள்ள வசதியாக, பஸ் கால அட்டவணையை அச்சிட்டு வீடுதோறும் இலவசமாக அளித்திருக்கிறோம்.''

''உங்கள் சங்கத்தின் பெயரை ஏன் தமிழில் வைக்கவில்லை?''

''Topaz என்றால் புஷ்பராகம். ஆங்கிலத்திலேயே முதலில் பெயர் வைத்துவிட்டோம். Topaz Youngster's Association என்பதை டோபாஸ் இளைஞர் குழு என்றே தமிழில் வைத்துக் கொண்டோம். அதை முழுத்தமிழில் மாற்ற ஏனோ எங்களுக்கு மனம் வரவில்லை.''

இந்த இளைஞர் சங்கத்தில் முப்பத்தைந்து அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். கோடை காலத்தில் தண்ணீர்ப் பஞ்சம் கடுமையாயிருக்கும்போது குளங்களின் நடுவேயுள்ள நீர் ஊற்றுக்களைத் தூர் எடுத்துச் சுத்தப்படுத்தி நல்ல நீர் கிடைக்க ஏற்பாடு செய்துள்ளார்கள்.

''ஸார்! கடைசியாக ஒன்று. இப்புராதன ஆலயத் திருப்பணி இன்னும் பூர்த்தியடையவில்லை. கோபுரம் பழுதடைந்திருக்கிறது; மதில் சுவர்கள் சரிந்துவிட்டன. இவற்றையெல்லாம் செப்பனிட்டுக் கட்டி முடிக்க வேண்டும். இதை எங்கள் சங்கத்தின் முக்கிய பணியாகக் கொண்டுள்ளோம். இதற்காக விரைவில் ஆலயத் திருப்பணிக் கமிட்டி ஒன்று அமைக்க ஆவன செய்து வருகிறோம்.''

ஆழ்வார்குறிச்சி இளைஞர்களின் ஆர்வம் என்னைப் பரவசப்படுத்தியது. பொதுப் பணியோடு தெய்வ கைங்கரியத்தையும் இணைத்துக் கொண்டு செயல்படும் இவர்கள் சங்கம் நன்றாய் வளர வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு ஆழ்வார்குறிச்சியைவிட்டுப் புறப்பட்டேன்.

- ஸோமாஸ்



இந்த ஆண்டின்
குமரன்
புதிய டிசைன்கள்
பிரியதர்சினி
ரஷ்மி • நவஜோதி
கதிரொளி
நவ நாகரீக நங்கைகள்
தேர்ந்தெடுப்பது
குமரன்
பட்டுப் புடவைகளே!
குமரன் சில்க்ஸ்
(பனகல் பார்க் எதிரில்)
தி. நகர், சென்னை-17
போன்: 443544
தயாரிப்பு நிலையங்கள்:
காஞ்சீபுரம் & ஆரணி
Sarath-KS-1



# எப்போ வருவாரோ!

அநிதா பதம்

கரிய பெரிய விழிகளும் மாநிறமும் கொண்ட பெண் அவள். அவள் முகத்தில் வருத்தம் தோய்ந்திருக்கும். அம்முகத்திலிருக்கும் அம்மை வடுக்கள் ஒரு சமயம் இலேசானவையாகத் தோன்றும்; மற்றொரு சமயம் ஆழ்ந்து காணப்படும். இளைத்த ஒற்றைநாடி சரீரம்; நடுத்தர உயரம். அவளிடம் எப்பொழுது இளமைப் பூரிப்பு வந்தது, எப்பொழுது விடை பெற்றுப் போயிற்று என்று சொல்ல முடியாததொரு தோற்றம். அவளுக்குப் பத்தொன்பது இருபது வயது இருக்கும். ஆனால் அவளைப் பார்த்தால் ஒரு சமயம் அதை விடக் குறைந்த வயதினளாகத் தோன்றுவாள்; மற்றொரு சமயம் அதைவிட அதிக வயதானவளாகக் காணப்படுவாள். நீண்ட நாளைய எலும்புருக்கி நோயாளி அவள். தான் உயிர் வாழ்வோம் என்ற நம்பிக்கையே இல்லாமல் உயிர் வாழ்ந்து வந்தாள். அவள் பிழைப்பாள் என்ற எண்ணமே யாருக்கும் இருந்ததில்லை. டாக்டர்களும் அவள் கொஞ்ச நாள்தான் இருப்பாள் என்று சொல்லியிருந்தார்கள்.

எங்கள் பங்களாவின் ஒரு பக்கத்தில் குடிசை வீடுகள் போல் சில சிறு வீடுகள் இருந்தன. அவற்றில் ஒன்றில்தான் அவள் வசித்து வந்தாள். கூட அவள் தாய் இருந்தாள். வேறு யாரும் கிடையாது. தாயாரோ கைம்மையுற்றவள்; அவளோ திருமணம் ஆகாதவள். தாயார் நாலு வீடுகளில் வேலை செய்து வந்தாள். பெண் நோயுடன் போராடிக் கொண்டு வீட்டில் கிடப்பாள்.

துளசி என்பது அவள் பெயர்.

கல்யாணமாகிப் புக்ககம் வந்த ஒரு சில நாட்களிலேயே எனக்குத் துளசியுடன் அறிமுகம் கிட்டியது. சாதாரண அறிமுகம்தான். எப்பொழுதாகிலும் அவர்களுக்குக் கடிதம் வந்தால், எங்கள் விலாசத்துக்குவரும். அதைக் கொடுக்கும்போது, துளசியின் தாயார் என்னையே படிக்கச் சொல்லிக் கேட்பாள். ஒரு நாள் கடிதம் வந்தபோது நான் துளசியைக் கூப்பிட்டேன். அவள் வந்தாள். கடிதத்தைக் கொடுத்தேன். என்னையே படிக்கச் சொன்னாள். இரண்டொரு வார்த்தை பேசினோம். பிறகு போய்விட்டாள். இந்த அளவுக்குத்தான் எங்கள் அறிமுகம். ஆயினும் இந்த அறிமுகத்திலேயே அவள் உள்ளத்தில் புதைந்து கிடந்த வேதனையை உணர்ந்தேன். முகத்தில் இனம் தெரியாததொரு சோகம் படர்ந்திருந்ததையும் கண்டேன். என்னுள் தன் வேதனைச் சுமையையும் சோகத்தையும் இறக்கி வைத்து விட்டுப் போய்விட்டாள்!

பிறகும் அவளைச் சந்திக்கும் வாய்ப்புக்கள் சில நேர்ந்தன. அவள் வீட்டு வாசலில் உட்கார்ந்திருந்தால் நான் அவளைக் கூப்பிட்டனுப்புவதுண்டு. சில நாட்கள் நான் என் வீட்டு வாசற்படியில் உட்கார்ந்திருந்தால் அவளேகூடத் தயங்கித் தயங்கி என்னைத் தேடி வருவதுண்டு. அவள் யாருடனும் ஒட்டாமல் தன்னைத் தனியளாக இருந்து வந்தாள். வாழ்வில் எதிலுமே ஆழ்ந்த சூன்யம் நிலவியிருந்தது. சாவை வெகு நெருக்கத்தில் கண்டபொழுது அவள் வறுமை மேலும் அதிகரித்துவிட்டது.

நகரசபை டாக்டர்களின் பேச்சும் நாளுக்கு நாள் வளர்ந்து வரும் தாயாரின் அனுதாபமும் 'இனி நாம் பிழைக்க மாட்டோம்' என்ற கருத்தை அவளிடம் உறுதிப்படுத்தி வந்தன.

ஒரு நாள் தபால்காரர் தபால்களைக் கொடுத்துவிட்டுச் சென்ற பின் நான் துளசியை அழைத்தேன். வந்ததும் அவளிடம் ஒரு கடிதம் கொடுத்தேன். உறையிட்ட தபால் அது. துளசிக்கு அதைக் கண்டு வியப்பாகி விட்டது. ஏனெனில் முன் பெல்லாம் கார்டுதான் வந்து கொண்டிருந்தது. இப்பொழுதோ 'கவர்' வந்திருந்தது. அதுவும் அவள் அம்மா பெயருக்கு வரவில்லை. அவள் பெயருக்கே வந்திருந்தது. இதை நான் கூறியதும் அவள் வியப்பு மேலும் அதிகமாகியது.

கொஞ்ச நாழிகை கவரை மேலும் கீழும் புரட்டிப் பார்த்தாள். பிறகு கடிதத்தை என்னிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னாள். அப்போது அவள் முகத்தில் ஒரு மாதிரி பயம் கவிழ்ந்திருந்தது.

கடிதத்தைப் பிரித்து நான் மேலாக ஒரு முறை எனக்குள் படித்துக் கொண்டுவிட்டு, பிறகு அவளுக்குப் படித்துக் காட்டினேன். அதில் இம்மாதிரி எழுதியிருந்தது:

என் உள்ளத்து அரசியே!

'யாரடா இவன், நம்மைத் தன் உள்ளத்து அரசியே என்று அழைக்கிறானே' என்று யோசிப்பாய். உனக்கு என்னைத் தெரியாது. ஆனால் நான் உன்னைப் பல நாட்களாக அறிவேன். உண்மையில் நீ என் உள்ளத்து ராணியாகிவிட்டாய். நீ உன் வீட்டு வாசலில் மௌனமாய் உட்கார்ந்திருப்பதை நான் பல முறை பார்த்திருக்கிறேன். ஏன் நீ இவ்வளவு சோகமாய் இருக்கிறாய்? நீ நகரசபை ஆஸ்பத்திரிக்கு மருந்து வாங்கப் போகும்போது தினமும் நான் உன்னை வைத்த விழி வாங்காமல் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். உன் நடையில் ஒரு களைப்பைக் காண்கிறேன். என்றாலும் அதுவே எனக்கு அழகாகத் தோன்றுகிறது. நான் உன்னைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருந்து வருகிறேன்.

வெகு நாட்களாகவே உனக்கு எழுத வேண்டும் என்று நான் எண்ணியதுண்டு. என்னை நீ தவறாக எடுத்துக் கொண்டுவிட்டால் என்ன செய்வது என்று அஞ்சியே இத்தனை நாளும் சும்மாயிருந்தேன். ஆனால் இன்று என்னால் பொறுக்க முடியவில்லை. கடிதத்தைப் படித்துவிட்டுக் கோபம் கொள்ளாதே. ஏனெனில் நான் இதை நல்ல எண்ணத்தோடுதான் எழுதுகிறேன். என் உள்ளத்தில் எந்தப் பாப எண்ணமும் இல்லை. நீ எனக்குப் பிடித்திருக்கிறாய் என்றால் அதில் என் தவறு ஒன்றுமில்லை. உனக்குக் கடிதம் கிடைத்ததும், உனக்கு அதனால் கோபம் உண்டாயிற்றா, இல்லையா என்பதை நானே அறிந்து கொள்வேன். உனக்குக் கோபம் உண்டாக்கவில்லை என்று தெரிந்தால் மேலும் கடிதங்கள் எழுதுவேன். நான் விரும்புவதெல்லாம் நீ என் இதய பீடத்தில் அமர்ந்திருக்க வேண்டும். நான் உன்னைப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் என்பதுதான்.

இப்படிக்கு உன்னை வழிபடும்

..............

நான் கடிதத்தைப் படிக்க வண்ணம் இடை இடையே துளசியின் முகத்தையும் பார்த்து வந்தேன். அவள் முகத்தில் பல வகை உணர்வுகள் தோன்றின. வியப்பு, குழப்பம், கவலை, பயம், அலட்சியம், மகிழ்ச்சி — இப்படி மாறி மாறி வந்து கொண்டிருந்தன. நான் கடிதத்தைப் படித்து முடித்தபோது அவள் ஒருவித வெட்கம் சூழத் தலை குனிந்து தரையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது அவள் முகத்தில் களிப்பிருந்தது. முகத்திலிருந்த அம்மை வடுக்கள்கூட இலேசாகத் தெரிந்தன.

நான் சிறிது நேரம் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு கடிதத்தை உறையில் போட்டு, உறையை அவளிடம் கொடுக்க நீட்டினேன். விழிகளை உயர்த்தி அவள் என்னைப் பார்த்தாள். 'என்ன நான் இந்தக் கடிதத்தை வாங்கிக் கொள்ளலாமா?' என்று கேட்பது போலிருந்தது அவளது பார்வை.

நான், "இந்தா, வைத்துக் கொள். யார் இவன்?", என்று கேட்டேன்.

அவள் கண்களில் வெறுமையைத் தேக்கிக்கொண்டு, "யாரோ, தெரியவில்லையே!" என்றாள். அப்போது வெறுமை சூழ்ந்த அந்தக் கண்கள் 'இவன் யாராக இருக்கக்கூடும்?' என்று என்னையே கேட்பது போல் தோற்றமளித்தன.

"உன்னை யாராவது தனியான முறையில் பார்ப்பதை கவனித்திருக்கிறாயா?" என்று கேட்டேன்.

"இல்லை. அப்படி நினைத்துக்கூடப் பார்த்தது இல்லை. என்னை யார் பார்ப்பார்கள்? என்னிடம் அப்படிப் பார்க்கத்தான் என்ன இருக்கிறது?" என்றாள்.



அவள் முகத்தில் சற்றுமுன் காணப்பட்ட லேசான குதூகலமும் மகிழ்ச்சியும் மறைந்து விட்டன. மீண்டும் பழைய சோகம் படர்ந்தது. அவள் முகம் இன்னும் கறுத்துக் காணப்பட்டது. அம்மை வடுக்கள் இன்னும் ஆழமாகத் தோன்றின.

அவளுடைய சோகம் என் உள்ளத்தையும் பாதித்தது. ''எப்போதாகிலும் நீ உன்னை ஓர் ஆடவன் கண் கொண்டு பார்த்திருந்தால் அப்போது தெரிந்திருக்கும் உன்னிடம் என்ன இருக்கிறது என்று!'' என்றேன்.

திடீரென்று அவள் முகம் மலர்ந்தது.

கடைசியில் ஒரு மாதிரியான சங்கோசத்துடன் அவள் கடிதத்தை வாங்கிக் கொண்டாள். ''இதைப் பற்றி அம்மாவிடம் எதுவும் சொல்ல வேண்டாம்!'' என்றாள்.

நான் சிரித்துக் கொண்டே, ''என்னை என்ன அவ்வளவு [illegible] என்று எண்ணி விட்டாயா?'' என்றேன்.

அன்று மாலை நகர சபை ஆஸ்பத்திரிக்கு மருந்து வாங்கச் சென்றபோது துளசி நோயாளி போல் காணப்படவில்லை. அவளுடைய நடை உடை பாவனையில் பழைய களைப்புத் தென்படவில்லை. சாயந்திரம் உலாவப் புறப்பட்டவள் போலக் காணப்பட்டாள்.

மறு நாள் காலை வீட்டு வேலைகளிலிருந்து சற்று ஓய்வு கிடைத்தபோது வாசல் பக்கம் வந்து அமர்ந்து நான் பத்திரிகை புரட்டிக் கொண்டிருந்தேன். அந்த நேரம் பார்த்து துளசி வந்து சேர்ந்தாள். அவள் ஒரு புதுப் பெண் போல் தோன்றினாள். அதாவது ஒரு ராத்திரியில் அவள் மாநிறம் உதிர்ந்து சிவந்து விட்டாற் போலவும் அம்மை வடுக்கள் மறைந்து விட்டாற் போலவும் தோன்றின. அவள் கண்களில் ஒரு ஒளி தாண்டவமாடியது. அவள் தேய்த்துக் குளித்து, சுத்தமான புடவை உடுத்திக் கூந்தலையும் நன்றாக வாரிப் பின்னிக் கொண்டு வந்திருந்தாள்.

அவளைப் பார்த்து என் மனம் முறுவலித்தது.

வந்தவள் கொஞ்ச நேரம் பல்வேறு விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்துவிட்டு, ''நேற்று டாக்டர் மருந்தை மாற்றிக் கொடுத்திருக்கிறார். அதோடு இனிமேல் நான் குணமாகிவிடுவேன் என்றும் சொல்கிறார்'' என்றாள். பிறகு முதல் நாள் வந்த கடிதத்தை என்னிடம் கொடுத்து, ''மறுபடியும் ஒரு தடவை படித்துக் காட்டு, அக்கா! இதில் என்ன எழுதியிருக்கிறது என்பது ஞாபகமே இல்லைபோலிருக்கிறது!'' என்றாள்.

கடிதத்தை வாங்கி மெல்ல மெல்லப் படித்துக் காட்டினேன். அவள் கடிதத்தை வாங்கித் தன்னிடம் வைத்துக் கொண்டாள். ''அக்கா, இந்தப் பையன் அப்படி ஒன்றும் கெட்டவனாகத் தெரியவில்லை!'' என்று வெட்கத்தோடு சொன்னாள்.

''எந்தப் பையன்?'' என்று நான் சிறிது முறுவலித்துக் கொண்டே கேட்டேன்.

கடிதத்தைக் காட்டியவாறு, ''இதை எழுதினவன்தான்'' என்று நாணம் மேலிடக் கூறினாள்.

நான் யோசிப்பவள் போல ''கெட்டவனாக தெரியவில்லைதான். கடிதத்தைக் கொண்டு பார்த்தால் நல்லவனாகத்தான் தோன்றுகிறான்!'' என்றேன்.

''யாரோ இவர் — தெரியவில்லையே!'' என்றாள்.

''யாரோ உன்னை வழிபடுபவனாகத்தான் இருக்க வேண்டும்!'' என்று விஷமம் கொப்பளிக்கச் சொன்னேன்.

அப்போது ஏற்பட்ட குதூகலத்தை அவளால் மறைக்க முடியவில்லை.

**ப**கலில் இரண்டு தடவை தபால்காரர் வருவார். அந்த நேரங்களில் துளசியின் வீட்டுப் பக்கம் பார்ப்பேன். அவள் ஆவலுடன் வாசலில் நின்று என் பக்கம் பார்த்துக் கொண்டிருப்பாள்; அல்லது ஏதாவது சாக்கில் என்னிடமே வந்து விடுவாள்.

ஒரு நாள் தபால்காரர் வந்து விட்டுப் போன பிறகு நான் துளசிக்குக் குரல் கொடுத்தேன். அவள் ஓடோடி வந்தாள். ஒரு கடிதத்தை அவளிடம் நீட்டி, ''உன் பக்தன் உன்னை மறுபடியும் நினைத்து உருகி யிருக்கிறான் போலிருக்கிறது!'' என்றேன்.

அவள் உடனே அக்கடிதத்தை வாங்கி, நெஞ்சில் ஒற்றிக் கொள்ளப் போனாள். ஆனால் சட்டென்று நிறுத்திக் கொண்டாள். நான் மட்டும் அவள் எதிரில் இல்லாமலிருந்திருந்தால் கடிதம் நிச்சயம் அவள் நெஞ்சோடு உறவாடி யிருக்கும். அவள் அன்று கடிதத்தை இப்படி அப்படித் திருப்பிப் பார்க்கவில்லை. மேல் விலாசத்தைப் படிக்க முயல்வது போல் உற்று நோக்கிக் கொண்டிருந்தாள்.

''இப்படிக் கொடு, படித்துக் காட்டுகிறேன். இல்லை... நீயே படித்துக்கொள்!'' என்றேன் சிரித்துக் கொண்டே...

அவளும் புன்னகை புரிந்தாள். கடிதத்தை என்னிடம் கொடுத்தாள். உறையைப் பிரித்துக் கடிதத்தைப் படித்துக் காட்டினேன். இந்தத் தடவை, கடிதத்தில் ''என் இதயத்தின் ராணி!'' என்பதற்குப் பதில், ''என் ராணி!'' என்று மட்டும்தான் விளிக்கப்பட்டிருந்தது. முதல் கடிதத்துக்குப் பிறகு இரண்டாவது கடிதம் எப்படி இருக்குமோ, கிட்டத்தட்ட அதே மாதிரிதான் இருந்தது. சென்ற நான்கைந்து நாட்களில் துளசியிடம் ஏற்பட்டிருந்த மாறுதலைக் குறிப்பிட்டு, ''நீ முன்னை விட எவ்வளவோ அழகாக இருக்கிறாய்! உன்னுடைய இந்த அழகை இரவும் பகலும் என் கண்கள் பார்த்துக் கொண்டே இருக்க விழைகின்றன, சகோரப் புள் சந்திரனைப் பார்த்து மகிழ்வது போல. நீ எனக்குப் பௌர்ணமி நிலவு. உன்னைப் பார்த்தால் என் வாழ்வே மகிழ்ச்சிக் கடலில் மிதப்பதாகத் தோன்றுகிறது'' என்று எழுதி யிருந்தது.



சென்னை என்பது சென்னப் பட்டணத்தின் சுருக்கம். ஆனால் எங்கள் (நெல்லை) மாவட்டத்தில் நாங்கள் கோபம் வந்தால் சென்னையைத்தான் அடிப்போம். புரியவில்லையா? சென்னை - கன்னம்.

- சிவசக்தி

# "'ஜாக்கிரதையாகக் கையாளவும்' என்று எழுதட்டுமா?"

## "அவசியமில்லை. ஸதர்ன் ரோட்வேஸில்தானே அனுப்பப் போகிறோம் ?"

பிரதி வருடமும் பல லட்சம் டன் எடையுள்ள பார்சல்களை ஸதர்ன் ரோட்வேஸ் சுமந்து சென்று சேர்க்கிறது. பார்சல்களை அது ஜாக்கிரதையாகக் கையாள்கிறது. ஒவ்வொருவரையும் தனி அக்கறையுடன் கவனித்து சேவை செய்கிறது. இதனாலெல்லாம்தான் அதனிடம் வாடிக்கையாளர்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. பார்சல்களை ஏற்றுவது, எடுத்துச் செல்வது, இறக்குவது அனைத்தையும் விசேஷப் பயிற்சி பெற்ற ஊழியர்களே செய்கிறார்கள்.

ஆகவே உங்கள் பார்சல்களை ஸதர்ன் ரோட்வேஸ் நல்லபடியாகவும் பத்திரமாகவும் கொண்டுபோய்ச் சேர்ப்பதில் வியப்பில்லை.

வாடிக்கையாளர்களிடை வளர்ந்து வரும் நல்லெண்ணமும் நம்பிக்கையும்தான் தென்னகம்பூராவையும் தன் பார்சல் ஸர்வீஸினால் ஸதர்ன் ரோட்வேஸ் அரவணைக்கத் துணை புரிந்துள்ளது. தங்கள் பண்டங்களை அனுப்புவதற்கு மேன் மேலும் அதிக மக்கள் ஸதர்ன் ரோட்வேஸைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்.






**ஸதர்ன் ரோட்வேஸ் பிரைவேட் லிமிடெட்**

டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த நிறுவனங்களில் ஒன்று

மதுரை

துளசி தினந்தோறும் என் வீட்டுக்கு வருவாள். வெகு நேரம் உட்கார்ந்து பேசுவாள். அவள் தன் வாழ்க்கையின் எந்த ரகசியத்தையும் என்னிடம் மறைக்கவில்லை. அவள் கடந்த கால வாழ்க்கையைக் கண்டு கேட்டு வியந்தேன். அவள் வாழ்க்கைதான் எப்படி வெறிச்சோடிக் கிடந்தது! என்ன வெறுமை! என்ன சூன்யம்! அவள் குழந்தைப் பருவம் வாடி வதங்கி விட்டது. அவள் உள்ளத்தில் எழுந்த ஆசைக் கனவுகள் அத்தனையும் அடங்கி ஒடுங்கி உறங்கி விட்டன! பிறகு இளமை வந்தது. நோயையும் துணைக்கு அழைத்துக் கொண்டு. இளமை வந்த சுவடு தெரியாமல் சென்று விட்டது. வியாதி மட்டும் விடை பெறாமல் அவளை உள்ளுக்குள் அரித்துத் தின்று கொண்டே வந்தது. வியாதியை விடக் கொடிது வறுமை. ஆனால் வறுமை இல்லையென்றால் வியாதியும் வளர்ந்திராது. ஒரு வேளை வந்தே இராதோ, என்னவோ! கடைசியாகச் சாவு அவள் முன் தோன்றியது. நாளுக்கு நாள் அவளை நெருங்கியும் வந்தது. அல்லது அவள்தான் சாவை நோக்கி நாள்தோறும் முன்னேறிக் கொண்டிருந்தாளோ! — சொல்வது சிரமம். மொத்தத்தில் அவள் இத்தகைய வாழ்க்கை வாழ்ந்து வாழ்ந்து அலுத்து விட்டாள். விரைவில் மரணம் வந்தால் தேவலை என்றுகூட நினைக்கத் தொடங்கி விட்டாள்... ஆனால் அநாமதேயக் கடிதம் வந்ததிலிருந்து அவளுடைய இருண்ட வாழ்க்கையில் ஒளி ஏற்பட்டாற்போலிருந்தது. பலன், மரணத்தை நினைத்தாலே அவளுக்குக் கிலிபிடித்துக் கொண்டது. இப்பொழுது வாழ வேண்டும் என்ற விருப்பம் அவள் உள்ளத்தில் துளிர்விடத் தொடங்கியிருந்தது....

மரணத்தை எதிர்நோக்கி மாதங்களை எண்ணிக் கொண்டிருந்த துளசி வாழ்வை எதிர்நோக்கி ஆண்டுகளை எண்ண ஆரம்பித்து விட்டாள்! சில ஆண்டுகளாவது தனக்கு வாழ்வளிக்கும்படி இறைவனை வேண்டத் தொடங்கி விட்டாள்.

கடிதங்கள் தொடர்ந்து வரலாயின. ஆனால் அக்கடிதம் எழுதுபவன் தன்னுடைய விலாசத்தையோ பெயரையோ மட்டும் எழுதுவதில்லை. துளசியோ அவன் பெயர், விலாசம் அறிந்து கொள்வதில் ஆர்வம் காட்டினாள். ஒரு தடவை அவனைப் பார்க்க விரும்பினாள். அவன் யார்! அவன் எப்படி இருப்பான்? என்ன வேலை செய்வான்? அவனுக்கு அவளை ஏன் பிடித்திருக்கிறது? அவனுக்குத் தானும் பதில் எழுத வேண்டும், தன் உள்ளத்தைச் சொல்ல வேண்டும் என்று விரும்பினாள். ஒவ்வொரு தடவையும் அடுத்த கடிதத்திலாவது அவன் தன் பெயர், விலாசம் எழுத மாட்டானா என்று ஏங்கினாள். ஆனால் அவன் ஒவ்வொரு கடிதத்திலும் அநாமதேயனாகவே விளங்கினான்.

ஒரு தடவை கடிதத்துடன் ஒரு மணியார்டரும் வந்தது. கடிதத்தில் '''கொஞ்சம் பணம் அனுப்பியிருக்கிறேன். இதை நல்ல மருந்துகள் வாங்கவும் இன்செக்ஷனுக்கும் பயன்படுத்திக் கொள். நல்லபடியாக வைத்தியம் செய்துகொள்'' என்று எழுதியிருந்தது.

துளசியின் கண்கள் கலங்கி விட்டன.. ''அக்கா! அவரை ஒரு முறை — ஒரே ஒரு முறை மட்டுமாவது பார்க்கக் கொடுத்து வைத்திருப்பேனா?'' என்றாள்.

ஆறு மாதங்கள் ஆயின. வருஷம் ஆயிற்று. வருஷம் இரண்டு கூடக் கடந்து விட்டது. ஆனால் அந்த மனுஷன் எந்தக் கடிதத்திலும் தன் பெயரையோ விலாசத்தையோ வெளியிடவில்லை. ஒவ்வொரு கடிதத்திலும் ''நான் உன்னைத் தொலைவில் இருந்துதான் பார்க்க விரும்புகிறேன். சமயம் வரும்போது நேரில் சந்திப்பேன். எல்லா விஷயங்களையும் சொல்வேன்'' என்று மட்டும் எழுதி வந்தான்.

இதனிடையில் துளசி கொஞ்சம் கொஞ்சம் படிக்கவும் கற்றுக் கொண்டு விட்டாள். அவள் மெல்ல மெல்லக் கடிதத்தைப் படித்தும் விடுவாள். என்னைப் படிக்கச் சொல்லிக் கடிதத்தைக் கேட்கும் வழக்கத்தை அவள் நிறுத்தி விட்டாலும் வரும் கடிதங்களை எனக்குக் காட்டுவதை மட்டும் நிறுத்துவதில்லை. கடிதங்களைப் பற்றி மணிக் கணக்காக என்னுடன் பேசுவதையும் அவள் நிறுத்தவில்லை! காதலைப் பற்றிப் பேச்சு வரும். ''அக்கா. நீ எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறாய்! நீகூட காதலித்திருக்க வேண்டும். உன் கணவர் கல்யாணத்துக்கு முன் உன்னிடம் காதல் கொண்டிருக்க வேண்டும். இப்போது கூட அவர் உன்னிடம் உயிராய் இருக்கிறார் அல்லவா? ஆனால் எனக்குக் காதல் என்றால் என்னவென்று தெரியவில்லையே! நீதான் எவ்வளவோ படித்திருக்கிறாயே, எனக்கும் தான் கொஞ்சம் சொல்லேன்!'' என்பாள்.

நான் முறுவலித்துக் கொண்டே, ''இதோ, இப்பொழுது உனக்கு என்ன நிலை ஏற்பட்டிருக்கிறதோ அதற்குத்தான் காதல் என்று பெயர்'' என்பேன். அவள் முகத்தில் மகிழ்ச்சி அலைபாயும்.

அவள் வாழ்க்கை நிறைந்து காணப்பட்டது. ஒரே ஒரு குறைதான் — கடிதம் எழுதுபவனைச் சந்திக்க வேண்டும், அவனை அப்படியே தன்னவனாக்கிக் கொள்ள வேண்டும் என்று. அவள் என்னைப் பார்த்து, ''அக்கா! அவர் எனக்கு எப்பொழுது கிடைப்பார்? அவர் எப்படி இருந்தாலும் கண்களை மூடிக் கொண்டு அவரை நான் ஏற்றுக் கொள்வேன். அவர் கால்களில் விழுந்து என்னை அவருக்கு அடிமைப்படுத்திக் கொள்வேன்'' என்பாள்.

ஆரம்பத்திலிருந்தே, ''ஒரு நாள் அவர் நிச்சயம் வருவார், வருவார்'' என்று அவளுக்கு ஆறுதல் சொல்லி வந்தேன்.

இப்பொழுது கிட்டத் தட்ட இரண்டு ஆண்டுகளுக்கு மேல் ஓடி விட்டன.

யோசித்து யோசித்து நான் மாய்கிறேன். இந்த நாடகத்தை எத்தனை நாட்கள்தான் நான் இப்படியே நடத்திக் கொண்டு போக முடியும்? இதற்கு ஒரு முடிவே கிடையாதா? இத்தனை நாள் அநாமதேயக் கடிதம் எழுதி, அவளை ஏமாற்றி மகிழ்வித்து வந்தவளே, நான்தானே! ஆண்டவனே! மகிழ்ச்சிக் கற்பனையில் மிதந்து தன் வாழ்க்கையையே மாற்றிப் புதிய பாதையைச் சமைத்துக்கொண்டு வெகு தூரம் முன்னேறிவிட்ட அவளுக்கு அந்த அநாமதேயனை நான் எங்கிருந்து பிடித்து வந்து தருவேன்?

தமிழாக்கம்: **எஸ்.வி.எஸ்.**

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

